ஸ்ரீ :

ஆழ்வார் எம்பெருமானார் சீரார்தூப்புல்திருவேங்கடமுடையான்
திருவடிகளே சரணம்

இன்னமுதத் திருமகள் இணையடி சரணம் திருவரங்கநாச்சியார்
திருவரங்கநாதன் திருவடி தஞ்சம்.

செம்பொற்கழலிணை செய்யாள்
அமரும் திருவரங்கர்
திருவடி சரணம்

தேசுடையதேவர்

# திருவரங்கச் செல்வனார்

என்னரங்கத்தின்னமுதர்

ஸ்ரீ ஆண்டாள்

ஆசிரியர் : **தேசிகஸ்ரீ**

முதற்பதிப்பு 1989


"This book is published with the Financial Assistance of Tirumala Tirupathi Devasthanams under their Scheme aid to published religious Books"

விலை ரூ. 30/-
தபால் செலவு ரூ. 7/-

நூல் கிடைக்குமிடம் :
R. ஸ்ரீநிவாஸ தேசிகன்
"திருமாமகள் நிலையம்,"
17-A, திருவாய்மொழி தெரு,
வண்டிமேடு, விழுப்புரம்-605 602.

ஸ்ரீ:

நமோ நாராயணா! நமோ நாராயணா!! நமோ நாராயணா!!!

ச்ரியை நம:॥ ச்ரிய: காந்தாய நம:॥

ஸ்ரீ தயா தேவி நமோஸ்துதே

ஸ்ரீ கோதா தேவ்யை நம:॥

# தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்

தாமுகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ,
யாமுகக்கும் எங்கையில் சங்கமும் ஏந்திழையீர்!
தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்,
ஆ! முகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே! 1

எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர்,
குழலகர் வாயழகர் கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார். என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே. 2

பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்,
அங்காதுஞ் சோராமே யாள்கின்ற எம்பெருமான்,
செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்,
எங்கோல் வளையால் இடர்தீர்வ ராகாதே? 3

மச்சணி மாட மதிளரங்கர் வாமனனார்,
பச்சைப் பசுந்தேவர் தாம்பண்டு நீரேற்ற,
பிச்சைக் குறையாகி யென்னுடைய பெய்வளைமேல்,
இச்சை யுடையரேல் இத்தெருவே போதாரே? 4

பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று,
எல்லா உலகும் அளந்துகொண்ட எம்பெருமான்,
நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான்,
இல்லாதோம் கைப்பொருளும் எய்துவா னொத்துளனே 5

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார், காவிரிநீர்
செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்,
எப்பொருட்கும் நின்றார்க்கும் எய்தாது, நான் மறையின்
சொற்பொருளாய் நின்றார்என்மெய்ப்பொருளும் கொண்டாரே 6

உண்ணா துறங்கா தொலிகடலை யூடறுத்து,
பெண்ணாக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்,
திண்ணார் மதிள்சூழ் திருவரங்கச் செல்வனார்,
எண்ணாதே தம்முடைய நன்மைகளே யெண்ணுவரே. 7

பாசிதூர்த் துக்கிடந்த பார்மகட்கு, பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்,
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்,
பேசி யிருப்பனகள் பேர்க்கவும் பேராவே. 8

கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்,
திண்ணார்ந் திருந்த சிசுபாலன் தேசழிந்து,
அண்ணாந் திருக்கவே ஆங்கவனைக் கைப்பிடித்த,
பெண்ணாளன் பேணுமூர் பேரும் அரங்கமே. 9

செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த,
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்,
தம்மை யுகப்பாரைத் தாமுகப்ப ரென்னும்சொல்,
தம்மிடையே பொய்யானால் சாதிப்பா ராரினியே. 10

-நாச்சியார் திருமொழி-த.11.

இதன் தெளிவுரை-35-முதல் 44-முடிய
''திருவரங்கச் செல்வனார்'' தலைப்பில் வரைந்துள்ளனம்.
பாமாலை பாடிப் பூமாலை சூடிக்கொடுத்த
சுடர்க்கொடியே! நின் திருவடி சரணம்.

ஸ்ரீ:
திருவரங்கநாச்சியார் திருவரங்க நாதன்
திருவடிகளே சரணம்

ஆராத வருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோ னயோத்திமன்னர்க் களித்த கோயில்
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணர்க்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்,
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்,
தீராத வினையனைத்துந் தீர்க்குங் கோயில்
திருவரங்க மெனத்திகழுங் கோயில் தானே.

—ஸ்ரீ தேசிகப்ரபந்தம், அதிகாரஸங்க்ரகம்-42.

காந்தோதாரைரயமிஹ புஜை: கங்கண ஜ்யா கிணாங்கை:
லக்ஷ்மீ தாம்ன: ப்ருதுல பரிகைர்லக்ஷிதாபீதி ஹேதி:l
அக்ரே கிஞ்சித்புஜக சயன: ஸ்வாத்மனைவாத்மன: ஸநு
மத்யே ரங்கம் மம ச ஹ்ருதயே வர்த்ததே ஸாவரோத:ll

—ஸ்ரீ பகவத்யான ஸோபானம்-11

(இந்த சுலோகத்தின் தெளிவுரை-''பழமறையின் பொருள்''
தலைப்பில், சுலோகங்கள் தெளிவுரையின் 11-ல் காண்க)
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தயl
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தயll
ஸ்ரீ கோதை நாச்சியார் - ஸ்ரீரங்க மன்னார்
மலரடி தஞ்சம்.



ஸ்ரீ ரங்கநாச்சியார் — திருவரங்கச்செல்வனர்
ஸ்ரீரங்கம்

ஸ்ரீ:



அருள்தரும் அடியவர்க்கு மெய்யன் - ஸ்ரீ தேவநாதன்



அருள்தரும் ஆரணதேசிகன்
திருவயிந்தை





ஸ்ரீ அலர்மேல் மங்கை - ஸ்ரீ ஸ்ரீநிவாஸன்
திருமலை-திருவேங்கடம்

ஸ்ரீ :



ஸ்ரீ ராஜகோபாலன்
திருவயிந்தை

ஸ்ரீ:



சக்கரவர்த்தித் திருமகன்
திருவயிந்தை

## ஆசிரியர் உரை

இந்நூல், திருமலையப்பன், திருவேங்கடத்தேவன், அலர் மேல் மங்கையுறை மார்பன் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீநிவாஸப்பெருமானின் திருவருளே துணையாகக்கொண்டு தோன்றும் நமது நான்காவது வெளியீடாகும்.

உலகின் கணுள்ள அனைத்து உயிரிகளும் நலம்பெற்றுத் தீமையின்றி நலமுடன் வாழ இறைவன் இன்னருள் இன்றியமையாத ஒன்றும். மனிதன், மன அமைதி பெற்று, வாழ்வில் துயரேதுமின்றி இன்பமுடன் வாழ்வதற்கு கடவுள் பக்தி மிக-மிக வேண்டற்பாலது என்று, சமயச்சான்றோர்கள் அனைவரும், சமயக்கொள்கைகளை (கோட்பாடுகளை) மேற்கொள் காட்டி வற்புறுத்திக் கூறுவர். இறைவனிடம் பக்தி கொண்டு, அவனை இறைஞ்சி வேண்டினேமாகில், அவன் தக்க தருணத்தில் கடிது வந்து அருள் தந்து நம்மைக் காப்பாற்றுவான் என்பது திண்ணம். கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பது முதுரை. நம்பினோர் கெடுவதில்லை, நான்கு மறைத்தீர்ப்பு என்பதும் அவ்வாறே. இதற்குச்சான்ருக, பிரகலாதன்-துருவன் திரௌபதி, அம்பரீஷன்-கஜேந்திரன்-வரலாறுகள் வழங்குகின்றன. மனிதவாழ்க்கைக்கு நம்பிக்கை அதிமிகத்தேவை. நம்பிக்கையின்றி எந்த ஒரு செயலிலும் வெற்றி காண்பது அரிது. கடவுள் நம்பிக்கை கொண்டு திகழும் நன்மக்கள் அனைவர்க்கும் இந்நூல் பக்தியை மேன் மேலும் வளர்த்துக் கொள்ள வழிவகுக்கும். பக்தர்கள் இந்நூலைப்படித்துத் திருவரங்க நகரப்பன் திருவருள் பெற்றுத்திகழ விழைவு கொண்டுள்ளனம்.

இந்நூலில் திருவரங்கநாதப்பெருமானை ஆழ்வார்கள் அனைவரும் பாடிப்பரவியேத்திய பாசுரங்களின் தெளிவுரையும், பழமறையின் பொருள், தெய்வநாயகன், திருவருள், மெய்ம்மைப் பெருவார்த்தை, மாதவன் என்பதோர் அன்பு, உண்ணுநாள், கண்ணு!, நெஞ்சே!,-ஆகிய தலைப்புகள் கொண்ட கட்டுரைகளும் குறிக்கப்பெற்றுள்ளன. இறுதியாக, கவிதைகள் இடம்பெற்றுத்திகழ்கின்றன. நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்-தாயார் திருநாமங்கள், வரைந்துள்ளோம்.

ஸ்ரீ:

இந்நூல் பெருமானின் பக்தர்களான மெய்யன்பர்களுக்கு, ஸ்ரீரங்கநாதப் பெருமானின் திருவருள் பெற்றுய்வதற்குப் பெரிதும் துணை நிற்கும் என்பதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை. நூலைப்படிக்கும் அடியார்களுக்கு, சேமங்களையும், அனைத்து நலன்களையும் அளித்து அருள் செய்திட வேண்டி திருவரங்கனின் அரவிந்த அடியிணைகளைத் தொழுதேத்தி வணங்கி இறைஞ்சுகின்றேன்.

திருவரங்கன் திருவருளால்
அவனியெங்கும் அல்லவை அகன்று
நல்லவையே நடைபெறுவதாக.
ஸ்ரீரங்கநாச்சியார்-ஸ்ரீரங்கநாதப்பெருமாள்
திருத்தாளிணைகள் போற்றி! போற்றி!! போற்றி!!!

தெய்வத்திருவருள் பெறும் விழைவு கொள்ளும் பக்தர்கள் அனைவர்க்கும், இறைவனின் இன்னருள் அளிப்பதாயமைந்துள்ள ''திருவரங்கச் செல்வனார்'' என்னும் இவ்வின் தமிழ் நூலினை,

என்திரு மகள்சேர் மார்வனே! என்னும்
என்னுடை யாவியே! என்னும்,
நின் திரு எயிற்றால் இடந்துநீ கொண்ட
நிலமகள் கேள்வனே! என்னும்,
அன்றுரு வேழும் தழுவிநீ கொண்ட
ஆய்மகள் அன்பனே! என்னும்,
தென்திரு வரங்கம் கோயில் கொண்டானே!
தெளிகிலேன் முடிவிவள் தனக்கே''

என்னும் நம் குருகூர் மாமுனிவர் அருளிச்செய்த பண்ணார் தமிழ்ப்பாசுரத்தையும்,

நம் கொற்றவேல் பரகாலன் கலியன் அருளிய,
''பண்டைநான் மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களும் பதங்களின் பொருளும்,
பிண்டமாய் விரிந்த பிறங்கொளி யனலும்
பெருகிய புனலொடு நிலனும்,

கொண்டல்மா ருதமும் குரைகட லேழும்
ஏழுமா மலைகளும் விசும்பும்,
அண்டமும் தானாய் நின்றஎம் பெருமான்
அரங்கமா நகரமர்ந் தானே!"

என்னும் இன்னிசையின்தமிழ்ப்பனுவலையும் ஓதிய வண்ணம், செல்வத்திருவரங்க நாச்சியார்-செல்வத்திருவரங்க நாதன்-நம்பெருமாள் மதுமலர்த்தாமரைத்தாளிணைகளில் என்றன் இதயப்பெருந்தேவியின் நினைவஞ்சலி மலராகப்பன் முறையும் பணிந்து வணங்கிச் சேவித்து, பக்தியெனும் மலர் கொண்டு அருச்சித்து சமர்ப்பிக்கின்றேன்-காணிக்கையாக்கு கின்றேன்.

நூல் அச்சாகி உருப்பெறுவதற்குப் பொருளுதவி பெறும் வாய்ப்பினுக்குத் திருவருள் நல்கியருளிய திருவேங்கடத் தெய்வம் திருமாமகள் மார்பன் என் எம்பெருமான்,என்னப்பன் திருமலையப்பன், ஸ்ரீநிவாஸனின் தேனே மலரும் திருப்பாதங் களில் பல முறையும் பணிந்து சேவித்து வணங்கித் தொழுது நின்றிருப்பன்.

திருமலைவாழ் இறைவன் திருவேங்கடச்செல்வனின் இன்னருளுக்கேற்பப் பொருளுதவி அளித்துதவிய திருமலை திருப்பதி தேவஸ்தான அலுவலர்களுக்கு எனது உளமார்ந்த நன்றி உரித்தாகுக. அச்சிட்டு உதவிய அச்சகத்தாருக்கு என் நன்றி உரித்தாகுக.

சுக்கில வருடம்
ஆனி மீ-அனுஷம்
15—7—1989

**தேசிகஸ்ரீ**
திருவயிந்தை
தி ந.ச.இரா ஸ்ரீநிவாஸதேசிகாசார்யன்

(முகப்புப் படங்கள்-கோதை நாச்சியார்-ஸ்ரீவில்லிபுத்தூர்)

ஸ்ரீ:

இந்நூலில் பக்க எண்


| | | |
|---|---|---|
| 1. | திருவரங்கச் செல்வனார் | 1 |
| 2. | 108 திருப்பதிகள்-தாயார்-பெருமாள் திருநாமங்கள் | 88 |
| 3. | கண்ணா! கண்ணா!! கண்ணா!!! | 95 |
| 4. | நெஞ்சே! நெஞ்சே!! நெஞ்சே!!! | 112 |
| 5. | அஞ்சனவண்ணன்-ஆராவமுதன் | 126 |
| 6. | பாவநாசன் | 137 |
| 7. | மதுரக்கொழுஞ்சாறு | 144 |
| 8. | மெய்ம்மைப் பெருவார்த்தை | 153 |
| 9 | மாதவன் என்பதோர் அன்பு | 160 |
| 10. | கருவரங்கம்-கருக்கோட்டி | 170 |
| 11. | உண்ணா நாள் | 179 |
| 12. | கொள்ளக் குறைவிலன் | 186 |
| 13. | பழமறையின் பொருள் | 192 |
| 14. | தெய்வ நாயகன் | 202 |
| 15. | திருவருள் | 207 |
| 16. | தாமரைக்காடு | 215 |
| 16(அ) | கவிதைகள் | 222 |

ஸ்ரீ :

திருவரங்கச் செல்வனாரின் திருவடி
பணிந்தேத்துவோம்.

தேசுடைய தேவர்

# திருவரங்கச் செல்வனார்

என்னரங்கத் தின்னமுதர்

கோயில் என்னும் சொல் வைணவத்தில் ஸ்ரீ ரங்கத்தையே குறிக்கும். இத்தலத்துறையும் ஸ்ரீ ரங்கநாதப் பெருமானை பிரமன் பூசனை செய்துவழிபட்டு வந்தான். பின்னர் சூரிய குல மன்னனான இக்ஷ்வாகு மன்னனின் தவத்தால் மகிழ்ந்து, பிரமன் அம் மன்னனுக்கு அளித்ததாக வரலாறு. அம்மன்னன் முதலாக ஸ்ரீ ராமபிரான் ஈருக இப்பெருமானை ஆராதித்து வந்தனர். இராமன், விபீடணனுக்குத் தாம் வணங்கி வழிபட்டு வந்த திருவரங்கனை அளித்ததாக இராமாயணம் இயம்பும். இதனை

விபீஷணோபி தர்மாத்மா ஸஹதைநைர்ருதர் ஷபை:।
லப்த்வா குலதனம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:॥

என்று மரபு வழியாக வந்த தங்கள் குலச்செல்வமான தெய்வத்திருவுருவை ஸ்ரீராமன் வீடணனுக்கு அளித்தார் என்கிறார் வால்மீகி.

வீடணன் பெருமாளை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு தன் நாடு ஏகுங்கால் திருவரங்கன் காவிரியும் கொள்ளிடமும் பிரிந்து செல்லுமிடமான திருவரங்கத்தில் மன்னியிருந்து அருள் பாலித்து வருவதாக வரலாறு. இத்தலத்தினை பூலோக வைகுண்டம் என்பர். அரங்கம் என்னும் சொல்லும் மேடானநிலப் பகுதியைக் குறிப்பதாம். இருநதிகளின் மத்தியில் மேடானதிட்டுப்பகுதியாதலால் அரங்கம் என்னும்பெயர் பெற்றது என்பது முன்னோர் கருத்து. திருமாதுமார்பன் உறைந்திருத்தருள்வதால் ஸ்ரீரங்கம்,-திருவரங்கம்-என்னும் பெயர் வழங்கலாயிற்று. இத்தலத்தில் தொன்மைக் காலந் தொட்டே துறவிகளான முக்கோற்பகவர் வாழ்ந்து பெருமானை வந்தித்து வழிபட்டு வந்ததாக உணர்கிறோம்.......... .

அற்ற பற்றர் சுற்றி வாழும் அந்தணீரரங்கமே. என்பது மழிசை முனிவரின் பாசுரத்தொடர். வைணவ மாமுனிவர் எம்பெருமானார் இத்திருத்தலத்தில் தம் வாழ்நாளில் பெரும் பகுதி வாழ்ந்திருந்து இங்கேயே அரங்கன் அடியிணையை அடைந்தார்.

ஸ்ரீமந்நிகமாந்த மகாதேசிகன், அந்நியர்களின் படையெடுப்பினால் இத்திருக்கோயிலுக்கு ஊறு நேர்ந்தகாலை, தக்கதருணத்தில் கோவிலுக்கு எந்த ஒரு கேடும் நேர்ந்து விடாமல் காத்தருளினார். திருவரங்கனைத் திருவடி முதல் திருமுடி ஈறாக, திருப்பாணாழ்வார் அனுபவித்து அருளிய அமலனாதிபிரான் பதிகத்தைப் போன்று போற்றி வாழ்த்தி ''ஸ்ரீபகவத்யான ஸோபானம்'' என்னும் 13 சுலோகங்கள் வடமொழியில்யாத்துள்ளார். இதனை பழமறையின் பொருள் என்னும் தலைப்பில் உரைவரைந்துள்ளனம் மேலும் கோவிலுக்கு இன்னலுற்றகாலை. திருவரங்கப் பெருமானைத் துதித்து ''அபீதிஸ்தவவம்'' என்னும் தோத்திரத்தை திருவரங்கன் திருமுன்னே விண்ணப்பித்தார் அதன் பின்னர் அந்நியர் படையெடுப்பின அச்சமும் பயமும் அகன்று அமைதி நிலவியது என்று முன்னோர் மொழிந்துள்ளனர்.

இந்நாள்களிலும், ஸ்ரீரங்கம் ராஜகோபுரத்தை நிர்மாணித்த அஹோபில மடத்து ஜீயர் சுவாமிகளும். ஆண்டவன் சுவாமிகளும். பௌண்டரீ கபுரம் சுவாமிகளும் இத்திருத்தலத்தையே தங்கள் உறைவிடமாகக்கொண்டுள்ளனர்.

குறுநிலமன்னராய் வாழ்ந்த யமுனைத்துறைவரென்னும் ஆளவந்தாருக்கு, அவருடைய ஆசார்யர் மணக்கால்நம்பி, உங்கள் பாட்டனார் உமக்குத்தேடி வைத்துள்ள மூலதனம் இத்திருவரங்கனே என்று காண்பித்த பின்னர் ஆளவந்தார் தம் இறுதி நாள் முடிய இத்திருத்தலத்திலேயே வாழ்ந்திருந்தார்.

தன் இல்லாள் பொன்னாச்சியின் கண்ணழகில் மயக்கமுற்றிருந்த பிள்ளையுறங்காவில்லி தாஸருக்கு, யதிராஜர்,

திருவரங்கனின் கண்ணழகையும், குழலழகையும், வாயழகை யும் காண்பித்து அவரை அரங்கனின் சிறந்தபக்தராக்கினர்.

இவ்வெம்பெருமாளின் திருநாமங்கள் ரங்கநாதன், நம்பெருமாள், பெரிய பெருமாள். தெற்கு நோக்கி சயன திருக்கோலம் தாயார் : ஸ்ரீரங்கராச்சியார். விமானம், பிரண வாகார விமானம், திருவரங்கம் பெரிய கோயில் என்னும் பெயரும் இதற்கு வ்ழங்குகின்றது. பூலோக வைகுண்டம் என்னும் பெயரும் உண்டு.

இத்துணைச்சிறப்பும், மேன்மையும் உயர்வும் கொண்டு திகழும் இந்நகரின் கண் மன்னியிருந்தருள் நல்கும் ஸ்ரீரங்க நாதப்பெருமானை ஆழ்வார்கள் பதின்மரும் மங்களாசாஸனம் பண்ணி பாசுரங்கள் பாடிப்பரவியேத்துவர் மொத்த பாசுரங்கள் 247

இனி திருவரங்கப்பெருமானை, ஆழ்வார்கள் நாத் தழும்பத் தொழுதேத்திய இன்தமிழ்ப் பாசுரங்களின் உரையை உன்னுவோம்.

## பெரியாழ்வார்

### பூச்சூடல் - பதிகம். பா. 2,8.

1 அன்னைய சோதையாகப் பேசுகின்றார்-கண்ணனே! திருவின் நாயகனே! திருவரங்க நகரிலே பள்ளி கொண்டு றைபவனே! கருநிறத்த நீருண்ட மேகங்கள் நின்றன் திரு மேனி வண்ணத்தை ஒத்தனவாயுள்ளன. அழகுமிகுந்த கண் களைப் பெற்றுள்ள என் செல்வனே! இவ்வுலகேழும் உய்தற் பொருட்டே நீ இங்கு பிறந்துள்ளனை. உன்றன் குழற் கற்றைகளை வாரிச்சீர் படுத்தி உனக்கு மல்லிகைப் பூக்களைச் சூட்டிடுவேன் என்னருகே வந்திடுக.

2 கண்ணா! சிமாலிகன் என்பானுடன் தோழமை கொண் டிருந்தனை. சிலகாலம் கடந்த பின்னர் அவன்து வஞ்சகத்தை யும், தீய எண்ணத்தையும் அறிந்ததோடன்றி அவ்ன் சாது

வல்லன் என்று அவனை அழிப்பான் வேண்டி உனது நேமிப் படையால் அவன் சிரத்தை அறுத்து வீழ்த்தினை, வருவன யாவும் அறிந்திடும் பிரானே! பொலிவார்ந்த திருவரங்கந் தனில் கிடந்தருள்பவனே ! என்னை ஏமாற்றாமல், இரு வாட்சிப்பூ சூடிக்கொள்ள என்னிடம் வாராய்.

3 ஆய்க்குலப் பெண்டிர் அசோதையிடம் கண்ணன் செய்யும் குறும்புகளைப் பற்றி வருணிப்பது ஓர் பதிகம். இப் பதிகத்தின் பயன் பகரும் பாடலில் திருவரங்கனே கண்ணன் என்று மொழிவார். வண்டுகள் தேனை உண்டு களிப்புடன் ரீங்காரமிடும் பொழில்களால் சூழ்ந்துள்ளதும், காவிரியின் கரையில் அமைந்துள்ளதுமான அழகார்ந்த திருவரங்கத்தில் அருள்பவனான அரங்கன் கண்ணன், முன்பு நிகழ்த்திய திரு விளையாடல்கள் அனைத்தையும் வருணிப்பதான ஆழ்வார் பட்டர்பிரான் விட்டுசித்தன் இயற்றியருளிய இசையுடன் கூடியதான பாடல்களைப்பாடி இசைக்கேற்றபடி ஆடவும் வல்லவர்கள், பரமன் கோவிந்தனின் அடியார்களாக ஆவ தோடன்றி கலங்கரை விளக்குப்போல் எல்லா-எட்டு-திசை களிலும் ஒளி மிளிரும் விளக்காகி இருப்பர். அவ்வடியார் களின் திருவடிகள் என்சிரந்தனிலிருப்பவையாம். 2-9-11

4 கண்ணன் அந்திவேளையில் மாடுகள் மேய்த்துத் திரும்பிவருங்காலை அசோதை அவனைக்கண்டு மகிழ்ந்துரைப் பதாக ஒருபதிகம் இதில் திருவரங்கம்.

அழிவற்றதான நன்மை பொருந்திய பெரிய மதிள் சுற்றுகளால் சூழ்ந்து தோன்றுவதும், சோலைகளால் சூழப் பெற்றதும் காவிரியின் அருகே உள்ளதுமான திருவரங்கத்தில் நிலையாய்க்கிடந்து அருள்கின்ற சீர்மைமிகு குணங்களைக் கொண்டுள்ள மதுசூதனனே! கேசவனே!, விடியற்காலை யிலேயே உணவூட்டி கன்றுகளை மேய்த்து வர இணங் கினேன். என்னைக்காட்டிலும் நெஞ்சுரம் பெற்ற நங்கைவேறு யாரும் இல்லை. என் செல்ல மகனே ! என்மடியில் வந்தமர்ந்து எனக்கு முத்தம் கொடுத்து என்னை மகிழ்விப்பாயாக 3-3-2

நான்காம் பத்து எட்டாம் தசகம் முழுவதும்.

5 கண்ணன் பெருந்தவ முனிவரான ஸாந்தீபினி முனிவரிடம் வேதம் முதலிய கலைகளைக் கற்றுதேர்ந்தான். குருவுக்குத் தக்கணை எந்த வகையில் ஈவது என்று தன் குருவிடம் கண்ணன் வினவுங்கால் அத்தவமுனிவர் தன்மகனை கடலலை கொண்டு சென்றுவிட்டது. என் அன்பு மகனை மீட்டுத் தருக என்று வேண்டினார். இவ்வரலாற்றினை இப்பதிகம் முதற்பாடலில் பேசி திருவரங்கனைப் போற்றுவார்.

கடலலை இழுத்துச் சென்ற, குரு சாந்தீபினி முனிவரின் மகனை மீட்டு, தான், அம்முனிவரிடம் கல்வி பயின்றதற்காக குருதக்கணையாகக் கொடுத்த பெருமானுன கண்ணன் திருவரங்கன்-கிடந்தருள் நல்கும் தலமாவது, துவைத்த ஆடைகளை உடையவரும், தூய்மையுடைவருமான வேதியர்கள் துறைகளில் அமர்ந்து மூழ்கி நீராடுவதால், நீர் மேலெழும்பி, எல்லா இடங்களிலும், மலர்களில் இருக்கும் மது பெருகும் காவிரி வெள்ளத்தைக் கொண்டுள்ள திருவரங்கமென்னும் திருப்பதியேயாம்.

6 ஒரு மறையவனின், இறந்த குழந்தைகள் நால்வரையும் கண்ணன் மீட்டுத்தந்தருளினான். அவனே திருவரங்கன் அவனுறையும் ஊரும் திருவரங்கம் என்கிறார்.

வேதமோதிய அந்தணனொருவன், இறந்த தன் நான்குமதலைகளையும் மீட்டுத் தருக என்று கண்ணபிரானிடம் வேண்டினான். கருணைக்கடலான கண்ணன் கடல் வழியே சென்று, பிரசவ அறையிலேயே மரித்து விட்ட அவ்வந்தணனின் நான்கு சிறுவர்களையும் ஒரு நொடிப்பொழுதில் பரமபதத்திலிருந்து மீட்டு வந்து அவனிடம் சேர்ப்பித்த, ஒருமனதுடன் ஈடுபட்டு அவன் வருத்தம் நீக்கிய கண்ணன் ஸ்ரீரங்கநாதன் - உறையும் திவ்வியத்தலமாவது, நன்னெறியில் சிறந்த வேதவைதிகர்கள் வேள்வித்தீ வளர்த்து வருவதும் வந்த விருந்தினரை உபசரித்து விருந்து அளித்து வருவதுமான திருவரங்கம் என்னும் திருத்தலமேயாம்

7 தன்மருமகன் அபிமன்யுவின் மனைவி உத்தரையின் குழந்தை அசுவத்தாமன் ஏவிய எரிகணையால் அழியா வண்ணம் காத்தருளி, "அவர் வமிசம் தழைக்குமாறு பண்ணி தன் அத்தையின் மகன்களான பாண்டவர்கள் பெரிய பலியிலே விழுந்தழியாதபடிக்கு வியாச முனிவர் மூலமாகக் காத்தருள் நல்கிய கண்ணபிரான்-திருவரங்கன் மன்னியிருக்கும் இடம், செந்தாமரை மலர்கள் எம்பெருமான் திருவதனமாகவும், குவளையெனும் நீலோத் பல மலர்கள் அவன் திருமேனி வண்ணமாகவும் வகை கொண்டு மலர இருக்குமிடமான காவிரி நீர் பெருகிச் செல்லுமிடமான திருவரங்கமென்னும் பெருமைமிகு தலமாம். 3

8 தேன் மேலும் மேலும் சேர்ந்து மலர்ந்து விளங்கும், பூக்களையுடைய பொழில்களைக் கொண்டுள்ள திருவரங்கமெனும் திருத்தலத்தில், கூனியான அடிமைத் தொழில் புரிந்திடும் மந்தரையின் கோள் சொற்கேட்ட கொடியவளான கைகேயி மொழிந்த ஆணையை சிரமேற்கொண்டு இணங்கி, பெற்றவளான அன்னை கௌசல்யா தேவியையும். அரசன், அளிப்பதாகக் கூறிய அரசையும் அயோத்தி மாநகரிலேயே விலகுமாறு பண்ணி, காட்டில் செல்வதற்கென அமைக்கப்பட்ட வழியிற் சென்று தீயவர்களை அழித்து நல்லோர்களைக் காத்தருளிய காருத்தன் ஸ்ரீராமன்-திருவரங்கவாணன்-திருவருள் நல்குபவனாயுள்ளான். 4

9 குருவ மரங்கள் அரும்பித்தோன்றவும். கோங்கு மரங்கள் மலர்ந்து விளங்கவும், குயில்கள் கூவிக் கொண்டிருக்கவும் தண்மை பொருந்திய சோலைகள் சூழ்ந்து விளங்குவதுமான திருவரங்கமெனும் திவ்வியத்திலேயே, பெருமை மிகுந்த. தேவர்களும் வதம் செய்ய இயலாதபடிக்குவரங்களைப் பெற்று பிழைகளையே தொடர்ந்து செய்து வந்த இராவணனை, அவனது பத்துத்தலைகளும். அவன் சுற்றத்தாரும் அடியோடு அழிந்துபடுமாறு போர் நடாத்தி அழித்து இம் மேதினியையும் அறிவைப்பெறுமாறு பண்ணிய பிரானும் என்னுடைய செல்வப்பெண்ணை கோதையின் பால் மோகம் கொண்டவனுமான திருவரங்கன் மன்னியிருந்தருள்கின்றான். 5

10 வேர்க்கிழங்கு போன்றதான பகுதி தங்கியிருந்து, மறுபடி தோன்றி வளராதபடிக்கு பாதாள உலகத்திலுள்ள அசுர இனம் அடியோடு அழிந்தொழியுமாறு கூர்மை மிகுந்து பேரொளியுடன் சுழல்வதான சக்கரப்படையை ஏவி அவ்வசுரர்களின் கருவையும் அழித்து நல்லவர்க்கருள் நல்கிய திருமங்கை கேள்வனின் இருப்பிடம், தாழம் பூக்களின் மத்தியில் உடலை உரசிக்கொண்டு அலைந்து, அத்தாழையின் வெண்ணிறத்துகள்களை உடலெங்கும் பூசிய படி இருக்கும் வண்டுகள் கூட்டமாக வீணையொலிபோல் ஒலியெழுப்புமிடமான ஸ்ரீரங்கமென்னும் திவ்விய திருத்தலமேயாம். 6

11 கைகளால் கட்டித்தழுவுவதற்கரிதேயான மிகப்பருத்த சந்தன மரங்களை பரந்தகன்ற மலைகளினின்றும் பெயர்த்து இழுத்துக்கொண்டு ஒலியெழுப்பியபடிய பெருகி வரும் காவேரி ஆறுனது அருகி வந்து திருவடியிணைகளை வணங்குமிடாமான சீர்மை மிகு திருக்குணங்கள் நிறைந்து திகழ்வதான திருவரங்கப் பெருநகரிலேயே, பிழைகளையும், இடர்களையுமே இழைத்து வரும் இயல்பினரான அசுர ஜாதியை இனத்தை-, "அவர்களது கொழுப்பும் மாமிசமும் சேர்ந்த குருதி-இரத்தம்-மேன்மேலும் பெருகிக் கீழே வழியுமாறும் குமிழ்களைத் தோற்றுவிக்குமாறும் எறியும் விதமாக பிணமாக்கித்தள்ளிய எம்பெருமான் திருக்கோயில் கொண்டு மன்னியிருந்தருள் பவுனுயுள்ளான்.

12 பெரும் வலிமை படைத்த கோடுகளையுடைய ஆதிவராகமூர்த்தியான ஞானப்பிரானாகவும் ஒளிமிகுந்து மிளிரும் பற்களையுடைய சிங்கப்பிரானுகவும் அவதரித்து, பரந்து அகன்று எல்லையின்றித்திகழும் அவனியையும், அசுரன் இரணியனையும் கீண்ட பெருமான் ஸ்ரீரங்கநாதன் உறைந்தருளும் ஊரானது, இரவு நேரங்களில் வலுவார்ந்த சிறகுகளைக் கொண்டுள்ள வண்டுகளும், பெருமானின் புகழ் கீதங்களை இசையுடன் ஒலித்து, மல்லிகைப்பூக்களெனும் வெண்ணிறமான சங்குகளை ஊத இடமாயும், சுற்றுச்சுவர்களையும் கொண்டு காட்சி தரும் திருவரங்கத்திருத்தலமேயாம் 8

13 குன்றுகளின் மீது தவழ்ந்து செல்லும் நீர் கொண்டு தோன்றும் கரிய மேகம், கருங்குவளைப்பூ, ஒலியுடன் ஆரவாரிக்கும் கருங்கடல், தோகையை விரித்து நின்றாடும் மயில்களின் கூட்டம் ஆகியனவற்றின் நிறத்தைக்கொண்டு விளங்குபவனும் தன்னையே தஞ்சமெனப்பற்றினோரின் பால் அன்பு மிகக் கொண்டுள்ளவனுமான பிரான் ஸ்ரீரங்கநாதன் அருள் நல்கும் திருத்தலம், மலைகளின் நடுவே சென்று சோலைகளின் கன் நுழைந்து மணத்தைச்சுமந்து கொண்டு கொடிக்கிணையான இடையைப்பெற்றுள்ள மடந்தைகளின் முலைத்தடங்களை அணைந்து வரும் தென்றல் காற்று வீசி உலா வருமிடமான மதிள் சுற்றுக்களைக்கொண்டு தோன்றும் ஸ்ரீரங்கமெனனும் திவ்வியத்தலமேயாகும்.

## பதிகப்பயன்

14 அருமை பெருமை பொருந்திய வரங்களைப்பெற்றுச் செருக்குற்று பெருஞ்சேனையுடன் கிளர்ந்து வந்து போரிட்ட இராவணனை, போர் முடிந்து அவன் அழியுமாறு பண்ணிய சீதைமணாளன்-திருவரங்கன்-திருத்தலமானதிருவரங்கத்தைப் பற்றி விட்டு சித்தரால்-பெரியாழ்வாரால்-விரிவாக மொழியப் பெற்ற தமிழ்ப்பிரபந்தங்களை ஏற்றுக்கொண்டு, மது கைடபர் என்னும் அரக்கர்களை ஸம்ஹாரம் பண்ணிய எம்பெருமானை ஸ்ரீரங்கநாதனை-வந்தனை பண்ணும் வல்லமை பெற்ற அடியவர்களுக்கு நாங்கள் தொண்டர்களாவோம். 10

ச.4, த.9 முழுவதும்.

15 படியில் குணத்தனை, தன் தம்பி பரதாழ்வானுக்கு மரத்தாலான திருவடிநிலைகளை-பாதுகைகளை - பெருமை மிகுந்தபணையப் பொருளாக வைத்தளித்து, வளம் சென்று தன் அவதாரத்தால் வானுளோர் பயன்பெற்றுய்யும்படி, போர் நடப்பதற்கான தென்னிலங்கையையடைந்து அப்பெரும்போரை செவ்வனே செய்து, அதன் பின்னரே அயோத்திமாநகரையடைந்து உலகெலாம் ஒரு குடைக்கீழ் ஆட்சி செய்தருளின திருமாமகள்கேள்வன் திருக்கோயிலானது. அனைத்துலகங்களுக்கும் அதிபதியான எம்பெருமானின் எழில்

மிகு வண்ணத்தையும் பெரியபிராட்டியாரான மாமலர் மங்கையின் மலர் போன்ற பொலிவார்ந்த திருக்கண்களையும் நினைவுகொள்ளப்பண்ணும் கருங்குவளை மலர்கள் காற்றில் அசையும் காலை, தமக்கு அந்நல்வாய்ப்பு பெற்றமைக்காக 'ஓ' வென்றசையுமிடமும், ஒளி மிளிர்வதுமான ஸ்ரீரங்கமெனும் திவ்வியத்தலமேயாம்.

16 வடிவிணையில்லா மலர்மகளான பெரிய பிராட்டியார் திருமாமகளே தனக்கு ஆரமுதான எம்பெருமான் செல்வ நாரணனிடம், அவன் தொண்டர்களைப்பற்றிக்கோளுரை கூறினும். தன் நாயகியிடம் கூறுவான்-திருமாமகளே! என்னடியார்கள் நீ கூறுவது போன்று தகாதவற்றைச் செய்யமுற்படார். அவர்கள் அவ்வாறு செய்தாராகில், அவர்களின் செய்கையால் உலகுக்கு நலமே விளையும். அவ்வெம்பெருமான், தன்பால் நிலைத்த பக்திகொண்ட விபீஷணனுக்கு அருள்வான் பொருட்டு, அவன் வதியும் நாடான, மதில்களால் சூழ்ந்து விளங்கும் இலங்கையை தன்மலர்க்கண்களால் பார்த்துக்கொண்டே திருவரங்க நகரில்பள்ளிகொண்டிருந்தருளும், எனக்கு அருள் நல்கும் ஸ்ரீரங்கநாதனையன்றி பிறரொருவர்க்கு ஆட்படுவரோ? அவவரங்கனுக்கே ஆட்பட்டு அடிமைப்பணிசெய்து கொண்டிருப்பதையேவிழைவர். 2

17 இருள் சூழ்ந்து, பொழில்தானோ என்று ஐயுறும் வண்ணம் செழித்து ஓங்கி வளர்ந்து நின்றிருந்த இரு மருத மரங்களையும், பெருஞ்சினங் கொண்டு தன்னை எதிர்த்து வந்த குவலயாபீடமென்னும் யானையையும், பிலம்பாசுரனையும், கொடிய கேசியென்னும் குதிரையையும், வண்டியுருவில் உருண்டு தன்னை நலிய வந்த சகடாசுரனையும், கஞ்சனால் ஏவப்பட்டுத்தன்னை வீழ்த்த வந்த பெருமல்லர்களையும், கண்ணாய் வந்த காலை உடைத்து அழித்து அவ்வோசையைக் கேட்டு மகிழ்வுற்றவனும், தன்னையே தஞ்சமெனப் பற்றினவர்களை, இருள் நீக்கும் ஒளியையும், எரிக்கும் ஒலிக்கற்றைகளையும் கொண்டு தோன்றும் சூரிய மண்டலத்தினூடே அருச்சிராதி மார்க்கமென்னும் வழியில் நுழைந்து செல்லச் செய்து, அவ்வடியவர்கள் ஏறுவதற்கெனவைத்த ஏணியை, ஏறியவர்கள்

மீண்டும் அப்பேரின்ப வீட்டினின்றும் திரும்பி வாரா வண்ணம் அவ்வேணியை அகற்றி, இவ்வுலகியல்புகட்கு அப்பாற்பட்ட தான குணங்கள் முதலானவற்றை அருள்செய்து தனக்கே அடிமைப்பணி செய்வதற்கு ஏற்றருள் செய்பவனுமான எம்பெருமான் மன்னியிருந்தருள் நல்குமிடம் பொலிவார்ந்த திருவரங்கத் திருநகரேயாம்.

18 துவாரகையென்னும் திவ்விய நகரில், பதினாறாயிரம் தேவிகள் தனக்குப் பணிசெய்யும் நிலையில் அவர்கட்கு நாதனாயிருந்து அவ்வண்ணமே அனைத்து உலகங்கட்கும் பெருந்தேவனாய் விளங்குபவன் நிலைத்திருந்து அருளும் திருத்தலம் கோயிலாவது - எம்பெருமான்தன் எழில்மிகு திருவயிற்றில் காணும் கொப்பூழ் கமலத்திற்கிணையான, அப்பொழுதே அலர்ந்த தாமரை மலர்களை, நீரில் பூக்கும் பூக்கள் யாவற்றுக்கும் மேலானவையாக பொதுவாக ஏற்றுக்கொண்டு பெருமிடுக்குடன் மற்றவற்றின் வனப்பை வீழ்த்தும் நதியான காவிரியாறு பெருகிச் செல்லும் ஸ்ரீரங்கமெனும் திருப்பதியேயாம்.

19 தத்துவ ஞானங்களுக்குக் கொள்கலனாய்த் திகழ்பவரான நாரத முனிவர் அடிக்கடி சென்று அணுகி, 'பெருமானே நீயே வியத்தகு வித்தகனும், மேன்மை மிகுந்தவனுமாவாய்' என்று துதித்து வணங்குபடிக்கு திருவரங்கப்பெருமான், மலர்களில் அமர்ந்திருக்கும் பறவைகள். புள்ளரசனான கருடனின், பெரும்புகழை விளக்கமற்ற தெளிவில்லாத மொழியில் பேசுமிடமாயும், காவிரி நதியை இருபாலும் கொண்டுள்ள ஸ்ரீரங்கமென்னும் திவ்வியத்தலத்திலேயே கோயில் கொண்டு அருள்பவனாயிருக்கின்றான். அவ்வரங்கனே, முன்பு (புகழுக்குரியனவும், வியப்புக்குரியனவுமானவற்றைக்காணும் ஆற்றல் மிகுந்து விளங்குபவரான நாரத முனிவர்க்கு) ஆமையாகவும் நரசிங்கமாகவும், புனிதம் மிகுந்த கங்கையாறாகவும் ஆழம் மிகுந்து தோன்றும் பெருங்கடலாகவும், அருமை பெருமை மிகுந்த மலைகளாகவும் நான்கு முகங்களுடன் தோன்றும் பிரமனாகவும் நான்கு வேதங்களாகவும், வேள்வியாகவும், வேள்வியில் வழங்கப் பெறும் தக்கணையாகவும் மற்றும் தானேயாகவும்-விஷ்ணுவாகவும்-சேவைதந்தருளிய பரமன், 5

20 நல்லவர்களான பாண்டவர்களின் துணைவி திரௌபதி செய்த வஞ்சினத்தை முடிப்பான் 'வேண்டி தீயவர்களேயான துரியன் முதலான நூற்றுவரையும் போரில் மாளும்படி போர் நடாத்தி, பாண்டவர்களையே ஆட்சிபீடத்தில் அமர்த்தி அபிமன்யுவின் மனைவியின் கருவிலிருந்த சிசுவை-(அசுவத் தாமன் ஏவிய எரிச்சுணையினின்று) பரீக்ஷித்தை உயிருடன் காத்தருளிய, எல்லா உயிர்களுக்கும் மூலகாரணனான பெரு மான், பக்தி முதிர்ந்த பெரியோர்களும், பெருமானிடத்தில் சரணுகதியைப் பண்ணிக் கொண்டவர்களும், எங்கெங்கும் தோன்றுபவர்களாயும் சித்தர் முதலானவர்களும், தொலை வில் நின்று தொழுதேத்திப்பின்னர் அணுகி வந்து சேவித் தின்புறும் நிலையில், எல்லாதிசைகளுக்கும், ஒளியளிக்கும் விளக்கெனத்திகழ்வதான திருவரங்க மாநகரிலேயே கோயில் கொண்டு திருவரங்கனென்னும்பெயருடன் அருள்கின்றுன் 6

21 ஒளி மிகுந்த மணிமயமான மலையின் உச்சியில் இளங் காலைக் கதிரவன் உதித்தெழுந்தாற்போன்று, பாம்புப் படுக் கையான அனந்தனென்னும் அரவரசின் உயர்வு மிகுந்த படங்களின் மேல் செழுமையுடன் காணும் இரத்தினங்களின் ஒளியுடன் மிளிரும் திருவரங்கத்திருத்தலத்திலேயே, குள்ள மான வடிவில் வாமன பிரமசாரியாய் வந்து மாவலியின் குறும்புத்தனத்தை அகற்றி, அவனிடமிருந்த மூவுலகாளும் அரசுரிமையைப்பறித்த தோடன்றி ஒருநொடிப்பொழுதிலே யே அவனைப்பாதாள உலகிலே நிலைத்து வசிக்குமாறு பண்ணி மகிழ்வுற்ற பூமங்கைமார்பனான நம் பெருமான் கோயில் கொண்டு அருள் பாலித்தவண்ணமிருக்கின்றான். 7

22 வரபலத்தால் செருக்குற்று இறுமாந்திருந்த இரணி யனின் மார்பை நரசிங்கமாய்த் தோன்றி நகங்களாலேயே கீண்டு பிளந்து, அவனது கிரீடம் உடையுமாறும் கண்கள் பெயர்ந்து வெளிப்படுமாறும், அவன் சிரந்தனையும் பற்றி அவன் கதறி வீறிடுமாறு பிளந்தழித்த பெருமான் செழுமை மிகுந்த மலர்ந்த தாமரை மலர்கள்,உலகளந்த போது பெரு மானின் சிவந்த திருவடிகளைப்போல் உயர்ந்து வளர்ந்து காண்பதும் நன்கு முற்றிப்பழுத்த கதிர்களையுடைய செந் நெற்பயிர்கள் தண்டுகளைத்தாழ்த்தி நுனிப்பகுதியைத் தாழ்த்

திக்கொண்டு தோன்றுவதும் குளிர்ச்சியுள்ளதுமான திருவரங் கத்திருப்பதியிலேயே, திருவரங்கனென்னும் பெயருடன் கோயில் கொண்டு அருள்கின்றான். 8

23 தெய்வாம்சம் பொருந்திய மீன், ஆமை கேழல் பன்றி, நரசிங்கம் குறளுருவில் வாமனன், பரசுராமன் ஸ்ரீரா மன் பலராமன் ஆகிய மூன்று இராமன் கண்ணன்,கற்கி ஆகிய தனது பத்து அவதாரங்களை முடித்து அருள் நல்கும் முதலும் முடிவுமற்ற முகில் வண்ண மேனியனான பெருமான் ஸ்ரீரங்க நாதன் கோயில் கொண்டு மன்னியிருக்கும் திருக்கோயில் ஆண் அன்னம் தன் பேடையுடன் செந்தாமரைப்பூவில் ஏறி படுத்து ஊஞ்சலாடி அப்பூவில் எழும்செம்பொடிகளில் மூழ் கித் திளைத்து விளையாடும் நதியைத் தன்னிடத்தே கொண் டிருக்கும் திருவரங்க மாநகரின் கண்ணே அமைந்துள்ளது. 9

24 போரில் வெற்றியே பெறும் புள்ளரசனான கருடனை ஊர்தியாகப் பெற்றிருப்பவனும், அனைத்துலகங்களையும் ஆள்கின்றவனும் போரை நடாத்துகின்ற நாந்தமென்னும் கத்தியைப் பெற்றிருப்பவனும் மறைகளின் பொருளாயும் அம்மறைகளால் போற்றப்படுபவனும், எதிரிகளை எதிர்த்து வெற்றியே பெறும் பெருஞ்சேனையைப் பெற்றிருப்பவனும், தெய்வங்கட்கெல்லாம் தெய்வமாய் தெய்வநாயகனாய்த்திகழ் பவனும், இரவு-பகலை ஆள்கின்றவனும், காலங்களுக்கு மூல காரணனாய் விளங்குபவனும்,என்னை ஆட்கொண்டு என்னை ஆள்கின்றவனும், ஏழுலங்கட்கும் பெருங்கொடை வள்ளலாய் தோன்றுபவனும், திருமாமகள் கேள்வனுமான பெருமாள் ஸ்ரீரங்கநாதன் பள்ளிகொண்டு யோகநித்திரை கொண்டு அருளுமிடம் திருவரங்கமென்னும் திருத்தலமேயாகும். 10

## பதிகப் பயன்

25 தன்துதிக்கையை உயரே தூக்கி, ஆதிமூலமே! பரம் பொருளே! பரஞ்சோதி! என்னைக் காத்தருளவாராய் என்று முதலைவாய் பட்ட கஜேந்திரனென்னும் களிறு கதறிக் கூவி அழைத்த காலை, கடிது விரைந்து வந்து அக்களிற் றைக் காத்தருளியவனும் வெப்பத்துடன் பேரொளி உமிழும்

திருவாழியைப் பெற்றிருப்பவனுமான பெருமான் திருவரங்கன் விரும்பியுகந்து நிலைத்திருந்து அருளும் கோயிலைக் கொண்டுள்ளதும், தென்-வடநாடு இரண்டுமே ஒரே நிலையில் போற்றிப்புகழ்ந்தேத்தித் தொழும்படியாக விளங்குவதும் பெருமான் திருவரங்கனுடையதுமான திவ்யத்திருத்தலத்தைக் குறித்து, உண்மையே உரைப்பவரும், அத்திருவரங்கனின் உண்மைத் தொண்டருமான விட்டுசித்தன்-பெரியாழ்வார்-விளக்கியுரைத்தருளிய இத்தமிழ்ப்பாசுரங்களை பயின்று ஓதும் வல்லமை பெற்றுள்ள பக்தர்கள், என்றென்றும் எக்காலத்தும் எம்பெருமான் திருவரங்கனின் ஒன்றுக்கொன்று இணையாய்த் திகழும் தாளிணைகளின் கீழ் பிரிவென்பதின்றி நிலைத்து வாழும் வாய்ப்பினைப் பெற்றுத் திகழ்வர். 11

த. 4, த. 10-முழுவதும்

26 ஆழ்வார்: திருவரங்கப் பெருநகரில் அரவணையின் மீது பள்ளிகொண்டு அருள் நல்கும் திருவரங்கனே! திறன் மிக்கவர்களை நண்ணினால் அவர்கள் நாம் துன்புறும் போது உரிய உதவியளித்துக் காத்தருள்வர் என்பது உலக மரபு அக்காரணம் கொண்டே, உன்னுடைய உத்தம பக்தர்களுக்கிணையற்றவனாக இருப்பினும், நின்றன் திருவடியிணையையே தஞ்சமாகக் கொண்டு நின்னை அணுகி வந்தடைந்திருக்கின்றேன். எனது புலன் செயற்பட இயலா வண்ணம் என்னை நோய் நலிவுறுத்தும் போது நான் பரமபுருடனான உன்னை எந்த விதத்திலும் நினைக்கும் வலுவற்றவனாகவே இருப்பன் ஆகையால் அவ்வாறு நான் நலிவுறும் நாளில் உன்றன் புனிதத் திருநாமத்தை நவில இயலாமையின் பொருட்டு இன்று நன்னிலையிலிருக்குங் காலையிலேயே மொழிந்தேன் என்னைக்காத்தருள வேண்டுகின்றேன்.

திருவரங்கன்: பட்டர்பிரானே! நீர் எந்த ஆதாரத்தை கொண்டு என்னை அடைக்கலமாகப்பற்றிக் காத்தருள் செய்ய வேண்டுகின்றீர்? ஆழ்: பெருமானே! தேவரீர், அன்று உம்மை அருச்சித்து வணங்குவான் பொருட்டு மடுவில் அரவிந்த மலரைப்பறிக்கும் காலை இடங்கரால் பிடிப்பிண்டு

சிக்கி மீள முடியாமல் தவித்துக்கதறிக் கூவிய கஜேந்திரன் என்னும் யானையைக் காத்தற்பொருட்டு ஒருநெடிப்பொழுதி னில் வந்து தோன்றி முதலையைத்துணித்துக் களிறைக் காத்து அருள் செய்தீரன்றோ? அதனை மனதிற்கொண்டே உம்மையே தஞ்சமென வந்தடைந்தேன். 1

27 அனந்தனென்னும் அரவரசின் மீது பள்ளி கொண்ட ருளும் அமலனே! அரங்கனே! திருவாழியையும் திருசங் கையும் முறையே வலமிடங்கையில் கொண்டு திகழ்பவனே! எனக்கு வாழ்வின் இறுதிக்காலமாகிய மரணம் ஏற்படும் காலை நீ என்னை நினைவு கூர்ந்தருள்வாயாக. ஏனெ னில் அத்தருணத்தில் கூற்றுவனின் தூதுவர் தங்கள் நாக் கைமடித்துக்கொண்டு பலவிதமான தண்டனைகள் அளிப் பதற்கெனவே ஆயத்தமாக இருப்பர். அந்நிலையில் அவர்களு டன் நான் செல்ல நேர்ந்தால் உன் மாயையினுல் எனக்கு உன்னைப் பற்றிய சிந்தனையெழாமற் போகக் கூடும். ஆகை யால் இத்தருணத்திலேயே நல்ல நினைவுடன் சொல்ல இயலும் போதே உன்தன் புனிதப்பெயரை உச்சரித்தேன். காத்தருள்வாய் அரங்கமேய அண்ணலே! 2

28 திருநேமியையும் திருச்சங்கையும் கொண்டு விளங் கும் கோவலனே! வாழ்வின் முடிவு எல்லைக் காலையில் அந்தகனின் ஏவலாளர்கள் அடித்து என்னைப்பற்றிஇழுக்கும் போது விலகிச் செல்க என்று விளம்பும் வழியேதும் கண்டே னில்லை. உன்றன் பெயர்களை நல்ல முறையில் சொல்லக் கூடிய இத்தருணத்திலேயே சொல்லிய வண்ணமிருக்கின் றேன். ஆகையால் உனக்கே அடியனான என்னை காத்த ருளற்பொருட்டு நினைவு கொண்டு, எல்லாவழிகளிலும் என்னை அல்லலுறுருவண்ணம் காத்தருளவேண்டும் அரங் கத்தரவணைப் பள்ளியானே! 3

29 ஒப்பற்றதான எருதை வாகனமாகக்கொண்ட சிவ பிரானும், நான்கு வதனங்களுடன் இருக்கும் பிரமனும், உள்ள நிலையில் உள்ளனக்கண்டு அறிந்து கொள்ளாதபடிக் கான பெருமையும் மேன்மையும் மிகுந்துள்ளவனே! எல்லா

உலகங்களிலுமுள்ள உயிர்கட்கெல்லாம் உள்ளுறையும் உத்தமனாய் மும்மூர்த்தியையும் உரைக்கும் மூன்றெழுத்துக்களான பிரணவத்தின் வடிவமாகவும் அதன் பொருளாயும் திகழ்பவனே! முதல்வனே! ஓ பரம் பொருளே! பரவாஸுதேவனே! இவனுக்கு,-உன்தொண்டனுண எனக்கு வாழ்வு முடிந்தது என்று, அஞ்சி அலறும் படி நமனின் ஏவலர்கள் பற்றி இழுக்கும் பொழுது, அந்த நாளில் நீ என்னைக் காத்தருள வேண்டும் அரங்கத்தாவணைப் பள்ளியானே! 4

30 பாற்கடல் மத்தியிலே மேற்கட்டிபோல் விரிந்து தோன்றும் படங்களையுடைய ஆதிசேடன் மீது படுத்திருக்கும் திவ்வியத்திருமேனியனே! அதற்கும் முன்னர் எங்கும் நீரே எங்கெங்கும் தோன்றி பிரளயக்கடலாயிருந்த நிலையிலே உயிரினங்கள் உய்வடையும் நிமித்தம், உலகங்களைப் படைக்கும் நோக்கத்துடன் உனது உந்தித் தாமரையில் பிரமனை தோற்றுவித்தாய். உடனேயே உலகில் பிறந்த மனித இனம் பிழை செய்யும் இயல்பினர் என்று தீர்மானித்து அவர்கட்கு தண்டனையளிக்க வேண்டி கூற்றுவனையும் உண்டாக்கிய உத்தமனே! ஐயனே! என் அப்பனே! உன்றன் நாமங்களைச் சொல்லிய பிறகு என்னைக் காத்தருள்வாய் அரங்கத்தரவணைப்பள்ளியானே! 5

31 மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதமெனும் பேராற்றல்களிலும் தோன்றுபவனே! அண்ணலே அரங்கத்தில் அரவரசின் மீது பள்ளி கொணடருளும் அரங்கனே! யமனின் வேலையாட்கள் அமைதியும் பொறுமையுமற்றவர்களாய் மிக-மிகத்தீங்குகளைச் செய்தவாறே இருப்பர். உன்றன் திருப்பெயர் உச்சரிக்கும் நிலையுள்ளபோதே ஜபம் பண்ணியவனுயிருக்கின்றேன். உன் அடியனான என்னை நினைவு கூர்ந்து, மறந்து விடாமல் எப்போதும் நீ காத்தருள வேணும். 6

32 திருவைகுந்தத்தேவனே! நித்தியசூரிகளின் நாதனே! மதுரையில் அவரித்தவனே! மாமாயச் செயல்களில் வல்லவனான மாமாயனே! நான் உன்றன் மாயையை அறி

யும் வல்லமையுடையனல்லேன் யமனின் தூதுவர்கள்என்னைப் பற்றியிழுத்து ஏய்! இந்த அல்லலுறும் ஊனால் நிறைந்த நரக உடலிலேயே புகுந்திருப்பாய்,என்று சொல்லும் காலையில் நான் எந்தநிலையிலும் உன்னை நினைத்திறைஞ்ச மாட்டேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே! என்னைக் காத்தருள வேண்டுகின்றேன். 7

33 கோவர்த்தனமலையைக் கையிலேந்தி பசுக்கூட்டங்களைக் காந்தருளிய ஆயனே! கண்ணனே! பசுக்கூட்டங்களை மேய்த்த எம்பெருமானே! திருவரங்கத்தில் அரவரசின் மீது பள்ளி கொண்டருளும் பரமனே! உன்னுடைய கிருஷ்ணாவதாரத்தைப் போற்றிப் புகழ்ந்து துதிபாடுவதிலிருந்து இன்று முடிய அரங்கா!என்று அழைக்கும் வரை ஆதிமூலப்பெருஞ் சோதியுருவான உன்னை நான் மறந்தேனென்பதில்லை. உன்னை எந்நாள்களிலும் நினைந்துருகுபவனாயுள்ளேன்.மிகவும் கொடியவர்களான காலனின் ஏவலாளர்கள் என்னை நலிவுறுத்திவலுவாகப்பற்றியிழுக்கும்போது அங்கு நீ தோன்றி என்னைக் காத்திடல் வேணும். 8

## பதிகப் பயன்

34 மாயவன், மதுசூதன், மாதவன்-ஆகிய பெயர்களைப் பெற்றுத் திகழ்பவனும்- வேதம் வல்ல வேதியர்களால் போற்றிவணங்கப்படுபவனும், ஆயர்களின் தலைவனானவனும் அச்சுதன் என்னும் பெயர் பெற்றுள்ளவனும், தன்னையே தஞ்சமெனப்பற்றின அடியவர்களை ஒரு போதும் கைவிடாமல் காத்தருள்பவனும் திருவரங்கத் திருநகரில் பாம்பணையிற் பள்ளி கொண்டிருந்தருள்பவனுமான ஸ்ரீரங்கநாதனைப் போற்றித் துதித்து வேயர்குலத்தில் புகழ்மிகுந்தவரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு சுவாமியான ஸ்ரீவிஷ்ணுசித்தன் பெரியாழ்வார் இயற்றியருளிய மாலை போன்றதான இப்பத்துப்பாசுரங்களையும் தூய்மையான உள்ளத்துடன் பயில வல்லவர்கள் பரிசுத்தமான நீலவண்ணத்திருமேனியனான நெடுமாலுக்கு என்றென்றும் தொண்டர்களாய் விளங்கும் நல்வாய்ப்பினைப் பெற்றவராவர். 10

பட்டர் பிரான் வளர்ப்புச்செல்வி சுரும்பார் குழற் கோதை மாயோனை திருவரங்கனின் கைத்தலம்பற்றி, அவன் தன் பெருஞ்சோதியுருவில் சோதியாய்க் கலந்தொன் றியவர். இம்மாமங்கை சூடிக்கொடுத்த சுடர்க்கொடி நாச்சி யார், தாம் புனைந்தருளிய கோதை தமிழ், நாச்சியார் திரு மொழியில் பதிகம் பதினொன்றில் தன் நாயகன் திருவரங் கச்செல்வனாரைப் போற்றிப் பரவியேத்துவார். உரிய பதிகத் தின் தெளிவுரை-

## நாச்சியார் திருமொழி. பதிகம் 10

35 அணிதற்குரிய அணிகலன்களையணிந்து தோன்றும் அன்னையர்களே! நானும் நீங்களும் விரும்பும் என் கையி லுள்ள வளைகளும், என் நாயகனை திருவரங்கன் தானே உகந்து விரும்பிகைக்கொண்டிருக்கும் பாஞ்ச சன்னிய மென்னும் சங்குக்கு இணையாகாவோ? தீயுமிழும் பாம்பணை மீது பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீரங்கராஜன் என் எழில் வத னத்தை நோக்குபவராயில்லை. இது மிக-மிக வருத்தமே! 1

36 எழில் மிகுந்து விளங்கும் என் அன்னையர்காள்! என் திருவரங்கத்தில் மன்னியிருந்தருள்பவரும், எனக்கு இனிய அமுதமாய் இருப்பவரும், அழகார்ந்த கேசங்களுடன் திகழ் பவரும், திருப்பவளம் போல் வனப்பார்ந்த திருவாயைப் பெற்றிருப்பவரும், பொலிவார்ந்த திருக்கண்களையுடைய வரும், திரு நாபியில் தோன்றும் கமலப் பூவினாலும் அழகு மிகுந்து தோன்றுபவருமான என் கணவனவர், என் கை களினின்றும் கழன்றிடும் நிலையிலிருக்கும் வளைகளை மேலும் அவர் கழன்று விழுமாறு ஆக்கிவிட்டார்.

இப்பாசுரத்தில், தன்மனங் கவர்ந்த மணாளன் மன்னி யிருந்தருளும் திருவரங்கத்தை 'என் அரங்கம்' என உரிமை யுடன் உரைக்கின்றார், ஒரு பெண், தான் பிறந்த வீட்டை விட்டுக் கணவனுடன் சென்றால் கணவன் இல்லத்தைத் தன் இல்லம் என்றுரைப்பளே அன்றி கணவன் இல்லம் கூறமாட் டாள். அதே போன்று கோதையாரும் மொழிகின்றார். பட்டர் பிரானும் 'என்னுடைய திருவரங்கர்' என்றே இயம்புவார். 2

37 தாயர் தன் தனயையிடம், 'உன்னைப்பிரிந்து படும் துயர் நீங்குதற் பொருட்டு உன் கை வளைகளை கழன்று விழுமாறு பண்ணி கவர்ந்து சென்றிருப்பன் உன் தலைவன்' என்று நவின்றனர்.

இதனைச் செவியுற்ற நாச்சியார் மொழிகின்றார்-

பொங்கியெழுந்து தண்ணெனும் கடலால் சூழ்ந்து விளங்கும் இம்மண்ணுலகம் முழுவதையும், வானுலகெனும் திருவைகுந்தத் திருநாட்டையும் அவற்றில் எங்கும் சிறிதும் சோர்வேதுமின்றிக்கே ஆளுகை நடத்தும் தலைவனை எம் பெருமானையும், பிறப்பிலியான தான் மக்களுய்தற் பொருட்டு அவதாரமெடுத்து வரும் காலையிலும் செங்கோலாட்சி நடாத்தும் திருவரங்கத்தில் அருளுபவருமான திருவரங்க மன்னனவர், என்றன் கைகளிலிருக்கும் வளைகளைக்கொண்டு தன் இடரினைப் போக்கி கொள்வர் என்பது தகுமெனத் தோன்றவில்லையே ! 3

38 பச்சை வண்ணம் பொருந்திய திருமேனியுடன் கோலங்கொண்டு திகழ்பவரும் தேவர்கள் அனைவருக்கும் தலைவரானவரும், வாமனனாய் வந்தவரும், மேல்நிலைமாடங்களையும், அழகுமிகுந்து விளங்கும் மாளிகைகளையும் பல சுற்று மதிள்களையும் கொண்டு தோன்றும் திருவரங்கப் பெருநகருக்கு செல்வனாராய், மன்னராய் விளங்குபவருமான என் காதல் துணைவர், முன்பு குறளுருக்கொண்டு வாமனனாய்வந்து மாவலியால் நீர் வார்த்துப்பெற்ற தானத்தில் நிறைவு பெறாமல் குறைமனமுள்ள வராயிருந்து அதைத்தீர்த்துக் கொள்ள எனக்கு நீங்கள் அணிவித்த வளைகளைப்பெற விரும்பியிருப்பாரேல், நாம் வசிக்கும் இந்த வீதி வழியே செல்லமாட்டாரோ? அவர் அப்படி வந்திருந்தால், நானே முன்னெதிர் கொண்டு வரவேற்று அவர் விரும்பியவளைகளை அவரிடம் அளித்திருப்பேனே ! 4

39 பொல்லாத குறளுருமாணியாய் வாமனனாய்த் தோன்றி தனது அழகு மிளிரும் கைகளில் மாவலி வார்த்த தான நீரை ஏற்றுக்கொண்டு உலகனைத்தையும் தன்னீரடி

யால் அளந்து தனதாக்கிக்கொண்ட பிரானும், நல்லவர்களே யான பெரியோர்கள் வாழ்ந்து வருவதும், குளிர்ச்சியுடனி ருப்பதுமான ஸ்ரீரங்கத்தில் அரவின் மீது பள்ளி கொண்டிருப் பவருமான என் நாயகன் வறியவர்களிடம் உள்ள கைப் பொருள்களைக் கவர்ந்து செல்பவர்களுக்கு இணையாகத்திகழ் கின்றானே ! 5

40 எனது கைகளிலிருந்த பொருள்கள் யாவற்றையும் தானே உரிமையுடன் எடுத்துச் சென்றவரும் அனைத்துக்குமா கவும் பிரமன், சிவன் முதலானோர்க்கும் அடைவதற்கரிய னாயும் நான்கு வேதங்களின் சொற்களின் சிறந்த பொரு ளாய் விளங்குபவனுமான, காவிரி நீர் நிலங்களுக்குச் செல் லும் கால்வாய்களிலே பாய்ந்து வெள்ளம் புரண்டு ஓடுமிட மான திருவரங்கத்தில் அருளும் திருமாமகள் மணாளனான திருவரங்கன் என்கைகவளைகளைப் பெற்றுக் கொண்டது போலவே என் உடலையும் தனதாக்கிக் கொண்டார். 6

41 உறுதியாயும் அழகுள்ளவைகளுமான மதில்களால் சூழ்ந்து விளங்கும் ஸ்ரீரங்கத்தில் திருவருள் நல்கும் திரு வரங்க மன்னனார், முன்பு இராமனாய் வந்த தருணத்தில், சீதா பிராட்டியின் பிரிவுத்துயரினால் உறக்க மின்றியும், உணவின்றியும் வருந்தி ஒலியெழுங்கடலின் நடுவே அணை கட்டி, தான் பட்டதுன்பத்தையெல்லாம் எண்ணிப்பாராமல்,; தன் பிரிவால், தன் நாயகி கோதை நாயகி வருந்துவளே-! என்பதைச் சிறிதும் நினையாதவராய்,- இந்நாள்களில் தன் சுகத்தையே பெரிதும் நினைந்தவராயிருக்கின்றாரே ! 7

42 பெருந்தேசுமிகுந்ததேவரான திருவரங்கமாமன்னர் முன்பு வராஹமாய் ஞானப்பிரானாய்த் தோன்றி, கடலின் ஆழத்திலே புதைந்து அல்லலுற்றுத் தவித்துத்துன்புற்றி ருந்த பூமிப்பிராட்டியைத்தன் எயிற்றிடை ஏற்றிவந்து நிலை நிறுத்தி, பூமி அன்னையின் வினாவுக்கு, என் நாயகன் திரு வரங்கன் அளித்த விடைகளான அருள்மொழிகள் அழிக்க முயன்றாலும் அழிக்க இயலாதவையே ! 8

43 கலியாணப் பெண்ணான உருப்பிணி நங்கையின் கைத்தலம் பற்றுவேன் என்று உறுதியான எண்ணங்கொண்டிருந்த சிசுபாலனின் ஒளியும் வலிமையும் இழந்து அவன் வானத்தில் முகம் வைத்து அண்ணாந்து நோக்கியிருக்கும் தருணத்திலேயே பகைவர் பலர் சூழ்ந்திருந்த அந்நகரின் மத்தியிலேயே அப்பேரெழிலணங்கு உருப்பிணியின் கைத்தலம் பற்றித்தேரில் ஏற்றிவந்து மணம் முடித்து [மகிழ்ந்தவனும், அவளையும், அவளுக்கிணையான பல பாவையார்களின் நாயகனும் என் மன முகந்தவனுமான என் மணாளன் விரும்பியிருக்கும் திருத்தலத்தின் பெயர் திருவரங்கமேயாம் 9

44 அழகும், செப்பமும்-இணக்கம்- பெற்றுத்திகழும் திருவரங்கநாதர் தாமே மொழிந்தவையான, உண்மையேயானதும், மதிக்கத்தகுந்ததுமான மொழிகளை-என்னையே தஞ்சமெனக் கொண்ட தமர்களை அடியார்களை அவர்கள் பால் அன்பு கொண்டுள்ள நான் ஒரு போதும், எந்த ஒரு நிலையிலும் அவர்களைக் கை விடாமல் காப்பாற்றியருள்வேன்-என் தந்தை விட்டு சித்தர் தேரில் கேட்டிருப்பர். தம்மிடம் அன்புமிகக் கொண்டுள்ளவர்களை தாமும் விரும்பி அன்புடனிருப்பர் என்னும் பேச்சானது. இம்மொழியினை மொழிந்தவரிடமே பொருளிலாப் பொய் மொழியாகிவிட்டால், இனி அருள்பவர் யாருளர்? 10

பொன்புரையும் வேற்குலசேகரனே! என்று பிரபந்த சாரத்தில் விளிக்கப்பெறும் வஞ்சி நாட்டரசரான குலசேகர ஆழ்வார் திருவரங்கப்பெருமானிடத்தில் அடங்காக் காதலும் பெரும் பக்தியும் கொண்டு திகழ்ந்தவர் தாம் புனைந்தருளின பெருமாள் திருமொழி என்னும் பிரபந்தத்தில் முதல் மூன்று பிதிகங்களில் திருவரங்கத்தழகர் பால் தமக்குள்ள பக்தி மேம்பாட்டினைப் பகர்ந்தருள்வார். இவ்வாழ்வார் அரச போகத்தைத்துறந்து திருமங்கை மணாளன் பால் ஆழ்ந்த பக்தி கொண்டு விளங்கியவர். ஆழ்வார்கள் பதின்மரில் ஒருவர். இவ்வாழ்வார் முகுந்தமாலை என்னும் வடமொழி தோத்திரமும் யாத்துள்ளார். இதில் பக்தி நெறியினையும், அதனுல்

பெறும், பெறற்கரிய பயன் பற்றியும் விரித்துரைத்துள்ளார்.

இனி முதல் மூன்று பதிகங்களின் உரை :

## பதிகம்-1

45 திருவரங்கப் பெருநகரம். அந்நகரில் ஸ்ரீரங்கவிமானத்தில் இருளகன்று நகரம் முழுவதிலும் பேரொளி வீசிடுமாறு, ஒளி மணிகள், தலைகள், சிறந்த படப்பொறிகள், அழகான படங்கள், ஆயிரத்தையுடைய மிகுந்த ஒளியுடைய அநந்தனென்னும் அலங்காரமும் ஒளியும் உடைய அரவரசான உயர்ந்ததான படுக்கையைப் பெற்றுத் துயில்கின்ற கருநீல மாணிக்கமணியெனவும், மென்மையே வடிவெடுத்துத் தோன்றுகின்றதோ என்று எண்ணுவதற்குரியவனுமான திருவரங்கன் சேவைதந்தருள்பவனாயிருக்கின்றான். அவ்வரங்கனின் அடியிணைகளை வருடிச்செல்வது போன்று தெளிந்த நீரையுடைய பொன்னியெனும் காவிரி அலையடித்துச் செல்வதாயுள்ளது. இந்த எம்பெருமான் திருவரங்கனைச் சேவித்து எனது இருகண்களும் மகிழ்வுறும் நாள் என்று வாய்க்கப் பெறுமோ? 1

46 பொழில் சூழ்ந்து விளங்கும் திருவரங்கத்திருக் கோயிலிலே, ஆயிரம் வாய்களில் தோத்திரம் பண்ணுவதாயும் வளைந்த உடலையுடையதும், அழியா மலரெனும் நெற்றிகளையுடைதும், செந்நிறத்தீயை உமிழ்கின்ற வாயை உடையதும், கோபமுள்ளதுமான பாம்பெனும் மேற்கட்டி போல், படுக்கையைவிட அதிக விரிவாக எங்கும் பரவித்தோன்றும் அதனடியில் பள்ளிகொண்டிருப்பவனும், காயாம்பூ மாலையை ஒக்க வண்ணமேனியனும், அடியவர்பால் பற்றுள்ளவனும் மாயோனுமான நம்பெருமான் திருவரங்கனை, மணற்றூணைப்பற்றி நின்று சேவித்து, வாய்நிறைய - மனம் நிறைவு பெறும்வரை தோத்திரம் பண்ணும்நாள் என்று நேருமோ? 2

47 எத்தனையோ மாட்சிமை பொருந்திய பிரமன் தனது நான்கு முகங்களில் உள்ள எட்டு கண்களால் பார்த்துக்

கொண்டும், நான்கு வாய்களால் உரத்தகுரலில் தோத்திரம் செய்தும் சேவித்து இறைஞ்சியிருக்கும்படிக்கு, மிக்க எழிலுருவமான தாமரை மலரையுடைய தனது கொப்பூழ்-நாபி-நன்கு தோன்றும்படி பொலிவுள்ள திருவரங்கத்திரு நகரில் பாம்புப்படுக்கையில் பள்ளிகொண்டு சேவை தந்தருளும் பெருமான் திருவரங்கனின், இருதாளிணைகளின் கீழ் மலர்களைச்சேர்த்து அவனடியார்களுடன் நெருங்கியிருக்கும் நாள் என்று கூடுமோ? 3

48 குதிரையுருவில் வந்த கேசியெனும் அரக்கனின் வாயைப் பிளந்தழித்து மகிழ்ந்தவனும், கடல் நிற மேனியனும், என்னை ஆள்கின்றகண்ணனும், இந்திரன் சினங்கொண்டு கல்மாரி பெய்வித்த காலத்தில் வலிமையானமலையை கையில் தாங்கி பசுக்கூட்டங்களைக் காத்தருள் செய்தவனும், ஆயர்களின் தலைவனும், நித்திய சூரிகளின் தலைவனும், பெருமானின் பக்தியில் பற்றுக்கொண்டு மற்றவற்றில் பற்றற்றபக்தர்கள் செந்தமிழின் இனிய பாக்களையும், வடமொழி தோத்திரங்களையும் பயின்றிருக்குமிடமான திருவரங்கப்பெருநகரிலே நாகணை மீது துயில்பவனுமான திருவரங்க நாதனை, வாயினல் நன்கு தோத்திரம் பண்ணிவாழ்த்தி என்கைகளிரண்டினாலும், பறித்துச் சேகரித்த பூக்களைத் தூவி அருச்சித்து அஞ்சலி பண்ணிப் பயன் பெறும் நாள் எந்நாளோ? 4

49 ஒப்பில்லாத இனிய இசையொலியைக் கொண்ட வீணையை மீட்டி அதனின்றும் எழும் ஒலியால் ஆனந்தமெய்தும் தும்புருநாரதர் என்னும் தேவ முனிவர்கள் வணங்கி இசை பொருந்திய தோத்திரங்களைக் கூறி துதிக்கும் படியும் பிரமனனவன் மிக-மிகப்பழமையான கொப்பூழ் பூவிலேயே இருந்த வண்ணம் திருவடிகளை வணங்கி ஈடில்லாத மிகப் பழமையான வேதத்துடன் இணைந்த தோத்திரங்கொண்டு இடைவிடாமல் துதித்து வரவும் அழகிய மாடமாளிகைகள் நிறைந்த செல்வம் மிகுந்து, மதிள்சுற்றுகள் கொண்டுள்ள திருவரங்கமெனும் திவ்வியத்தலத்திலே, நாகணையில் பள்ளி

கொண்டு நீலமணிவண்ணத்திருமேனியுடன் திகழும் திரு வரங்கநாதனை கண்களால் கண்டு மனதிற் பதியப்பண்ணி எனது மலர் சூடியுள்ள தலை தாழ்த்தி வணங்கித் தொழும் நாள் என்று நேருமோ? 5

50 தேன் பெருகும் மலர்மேல் வீற்றிருக்கும் பிரமன் என்ன, சிவபிரான் என்ன, இந்திரன் என்ன, மற்றும் தேவ கணங்கள் வானுலக வனிதையர், தெளிந்த பேரறிவு பெற்று விளங்கும் ஸநகர் முதலான முனிவர் குழாம் ஆகிய அனைவரும் ஒருவரையொருவர் முந்தி நெருக்கிக்கொண்டு எல்லாத் திசைகளிலிருந்தும் மணம் மிகுந்த மலர்களை வாரித்தூவி இறைத்துக்கொண்டே வந்து சேரப்பெற்றதும், தேன்பெருகும் பூக்களையுடைய சோலைகளால் சூழ்ந்து தோன்றுவதுமான திருவரங்கமெனும் திவ்வியத்தலத்திலே பாம்பணை மீது ஏறிப்படுத்துக்கண் துயிலும் கடல் நிறத்திருமேனியனை திருவரங்கப்பெருமானின் ஒளி மிளிரும் திங்களுக்கிணையான ஒப்புயர்விலாத எழிலார்ந்த வதனத்தையும், செந்தாமரை மலருக்கிணையான திருக்கண்களையும் கண்டு சேவித்து என் மனந்தனில் இருத்தி, மேன்மேலும் மனம் உருகுமாறு இருக்கும் நாள் என்று வாய்க்குமோ? அறிந்தேனில்லையே ! 6

51 சினம், வஞ்சனை இல்லாத அமைதியான உள்ளம் கொண்டு, ஐம்புலன்களை வென்று தன் வசத்தில் நிறுத்தி இடையிடையே எதிர்ப்படும் இன்னலெனும் பளுவால் நிகழும் துன்பத்தைத்துறந்து, விதி முறை பிறழாமல் தோத்திரம் பண்ணி, முடிவிலாத மிகப்பழமையான வாழும் நெறிகளில் மிகுந்த பற்றுக்கொண்டுள்ள அடியவர்களும் பக்தர்களுமான அறவழியையே கைக்கொண்டு திகழும் பெரியவர்களுக்குக் காணுதற் கெளியனாய், காவிரி பெருகிச்செல்வதால் மிகுந்த எழில் கொண்டு விளங்கும் திருவரங்கப்பட்டினத்திலே அரவின் மீது பள்ளி கொண்டு வண்ணமிகுத்திருமேனியுடன் சேவைதந்தருளும் மாயோனை ஸ்ரீரங்கநாதப்பெருமானைக் கண்டு சேவித்து, மகிழ்ச்சி மிகுதியால் கண்களில் நீர்மல்குமாறு நின்றிருக்கும் நாள் என்று நேருமோ? 7

52 கூர்மை மிக்க அம்புகள் நிறைந்த வில், வளைந்து உயர்தரமாய்த் தோன்றும் வலம்புரிச்சங்கு, பகைவர்களை அழிக்கும் திருநேமி, அதே போன்று பகைவர்களை வதைக்கும் கதையெனும் தண்டு, வெற்றியும் ஒளியுமுள்ளவாளாயுதம் ஆகிய போர்க்கருவிகள், காற்றினுக்கிணையான வேகம் கொண்டு பறக்கும் திறன் பெற்று, பெருஞ்சிறகைக்கொண்டு வெற்றியே பெறும் வலிமை மிகுந்த கருடனென்னும் புள்ளரசு ஆகிய இவையாவும் நான்கு புறங்களிலும் சூழ்ந்திருந்து காக்க வருமாறு, மீன்கள் நிறைந்துள்ள வயல்களாலும் பொழில்களாலும் சூழ்ந்து விளங்கும் திருவரங்கத்திருநகரிலே பாம்பைப் படுக்கையாகக் கொண்டு காட்சிதந்தருளும் திருமால் ஸ்ரீரங்கநாதப் பெருமானைக்கண்டு களித்தின்புறும் நாள் என்று வாய்க்க றுவதோ? 8

53 பெருமானைச் சேவித்தின்புறுவதில் நிறைவு பெறாத மனமுடைய பக்தப் பெருமக்கள் குழாமாகச் சேர்ந்து பெருமானின், பலப்பலவான புகழ் கீதங்களைப் பண்ணுடன் பாடியும் நிறைவு பெறாத மனத்தினராய் மகிழ்ச்சிப் பெருக்கினால் கண்களினின்றும் ஆனந்தகண்ணீர் பெருக இடையீடின்றி நினைந்து மனம் உருகுமாறு தோத்திரம் பண்ணிக்கொண்டிருப்பதும் தினந்தோறும் சீர்மையுடைய இசைக்கருவிகளை இசைப்பதால் எழும்பேரொலி கடலொலிதானோ என்று மயங்கப் பண்ணுமிடமாயிருப்பதுமான திருவரங்கப் பெருநகர்த்திருக்கோயிலிலே அனந்தனென்னும் அரவரசின் மீது பள்ளிகொண்டு விளங்குபவனும், போரில் வல்லமையுடைய சக்கரப்படையைக் கொண்டுள்ளவனுமான திருவரங்கப் பெரியபெருமானை, தொண்டர் குழாத்துடன் கூடியிருந்து சேவித்து, களிப்பினால் துள்ளியெழும்பி நிலத்தில் விழுந்து புரண்டு உகக்கும் நாள் என்று நேருமோ? 9

54 ஊழிக்காலத்திலும் அழியாமல் நிலைத்திருக்கும் வானுலகமும், அங்கு வகியும் விண்ணவர்கள் உய்வைப்பெறுமாறும் நிலவுலகமும், இவ்வுலக மக்களும் உய்யுமாறும், துன்பம் மிகுந்ததான துயரம் அகன்று தளர்ச்சியில்லாத சுகவாழ்வு பெறுகுமாறும். தொண்டர்கள் மனம்மகிழ்ந்து வாழ்வைப்

பெறுமாறும். தன்னடியார்களிடத்தில் அன்பு கொண்டு பள்ளி கொண்டு திகழும் திருவரங்கநாதனின் திருக்கோயி லின் வெளிப்புற மண்டப வாயிலில், எம்பெருமானைச்சேவிப் பதால் இன்புற்றிருக்கும் பெருத்த எண்ணிக்கையிலுள்ள தொண்டர் குழாத்தைக்கண்டு நானும் இசைவுடன் இருக் கும் நாள் என்று வாய்க்குமோ? 10

## பதிகப்பயன்

55 மேடான திட்டுப்பகுதியான காவிரியின் நடுவினில் தீவாய் அமைந்துள்ள திருவரங்கத்திருநகரில் பள்ளி கொண்டு அருள்நல்குபவனும், கடலையொத்த கருநீலவண் ணத்திருமேனியனுமான திருவரங்கநாதப்பெருமானை கண் கள் நிறைவு பெறும் வண்ணம் சேவித்து இன்புறும் பெரு விருப்பினாலே, வெண் கொற்றக்குடையின் கீழ் அமர்ந்து அரசாள்பவரும், வெற்றி பெறும் சேனையையுடையவரும் வெற்றி நல்கும் வாள் படையுடைவரும், கூடல்மாநகரென் னும் மதுரையம்பதிக்கும் மன்னராயிருப்பவரும் ஈகையாள ரும் வள்ளலுமான குலசேகர ஆழ்வார் மொழிந்தருளிய, இலக்கியத்திலும், பேச்சுவழக்கிலும் நடமுறையில் குன்றாது சீர்மையுடன் திகழும்தமிழ்ச்சொற்களாலான மாலையேபோன்ற பத்துப் பாசுரங்களையும் பயின்று ஓதவல்லவர்கள் நன்மையே நல்கும் ஸ்ரீமந்நாராயணனின் திருவடிகளின் கீழ் நண்ணியி ருப்பவமாவர் 11

## பதிகம்-2

56 ஆய்ந்து அறிந்து கொள்ளற்கரியதான நுகர்வுப்பணிக் குரிய வலுவை அளித்திடும் தேன் போல் இனிப்பவனும், எழிலார்ந்த திருவரங்கத்தில் திருவருள் நல்குபவனும், திரு மாமகள் வாழ்வதற்குரிய இடமாயும் வாடாத வனமாலை அழகுற அசைந்து விளங்குவதுமான திருமார்புடையவனு மான திருவரங்கப் பெருமானை நினைந்து வாழ்த்திப் பல் லாண்டு பாடி திருவரங்கனிடமே மோகங்கொண்ட மன முடையவராயிருந்து ஆட்டம் ஆடிக்கொண்டே அசைந்து பெருமானின் பற்பல திருநாமங்களைச் சொல்லியழைத்து,

தங்கள் சோர்வை மறந்து மகிழ்வுடனுள்ள உண்மையாளரே யானபக்தர்களின் குழாத்தைக்காணும் நற்பேறு வாய்க்கப் பெறுமாகில். அவ்வாறு அவர்களைக்கண்டு மகிழ்வதே கண் களைப்பெற்றுள்ளதற்குரிய பயனாகும். 1

57 இதழ்கள் பல உள்ள தாமரை மலரில் தோன்றிய திருமாமகளின் இணையான தோள்களை அணைந்து மகிழ்ந் தது, சுடரொளி வீசிப்பாயும் ஒரே அம்பினால் நீண்டு வளர்ந் திருந்த ஏழு மராமரங்களை துளைத்து, ஒழித்தது பசுக்கூட்டங் களை மேய்த்து வந்தது ஆகிய பெருமானின் அரிய பெரிய செயல்களை நினைந்து கொண்டிருந்தே மகிழ்ச்சி மிகுதியால் ஆடிப்பாடிக்கொண்டு திருவரங்கா! என்று கூக்குரலிட்டு அழைத்திடும் பக்தர்களும் அடியார்களுமாகிய தொண்டர் களின் திருவடித்துகள்களை நம் தலை மேல் பெற்று மூழ்கும் நல் வாய்ப்பு வாய்க்கப்பெற்றால், புனிதமளித்திடும் உயர்ந்த கங்கையாற்றில் புனலாடும் ஆசை என்னவதாம்? பெருமா னடியார்களின் திருவடித்துகள்களில் மூழ்குவது கங்கையில் நீராடுவதைக் காட்டிலும் சிறந்தது என்றுரைக்கின்றார். 2

58 வராகப் பெருமானாய்த் தோன்றி நிலத்தைக் கீண்டு கொணர்ந்து நிறுத்தியதையும், திரிவிக்கிரமனாய் நெடி துயர்ந்து மண்முழுவதையும் அளந்து கொண்டதையும், தய ரதமைந்தன் இராமனாய் வந்து பகைவரை வென்றதையும், தேவகிசிங்கம் கண்ணனாய் வந்து நப்பின்னை நங்கையின் கைத்தலம் பற்றும் பொருட்டு மிடுக்குடன் எதிர்த்து வந்த ஏழு எருதுகளையும் அடக்கி ஒடுக்கியதையும் இசை பொருந் திய பாடல்களாகப்பாடிக்கொண்டே ஸ்ரீ ரங்கநாதனின் திருக் கோயில்புறப்பகுதியிலுள்ள தரையை, காவிரியென்னும் பெரிய ஆறு பெருகுவது போன்று, ஆனந்தக் கண்ணீராலே சேறாக்கும் பக்தர்களுடைய சிவந்த திருவடிகளில் பட்ட பெருமைக்குரிய சேற்றை என் நெற்றியில் அலங்காரமாக அணிந்து கொள்வேன். 3

59 நன்கு தோய்த்த தயிரையும், வெண்ணெயையும், பாலையும் உட்கொண்டதைக் கண்ணுற்ற அசோதை சினங்

கொண்டு கட்டியதால் கட்டுண்ட தோள்களையுடையவனுன எங்கள் உதவியாளனான என்னைப்பன் ஸ்ரீரங்கநாதப் பெரு மானுக்குத் தொண்டர்களாயிருந்து, நாக்கில் தழும்பு எழும் படிக்கு நாராயணனின் திருப்பெயர்களை சொல்லி கூப்பிட் டும், உடல் தடிப்புண்டாய்ப்படிக்கு விழுந்து எழுந்து மீண்டும் மீண்டும் சேவித்தும், தோத்திரம் பண்ணியும் மகிழ்வுறும் பக் தர்களின் சிவந்த திருவடிகளை எனது உள்ளமானது போற் றிப்புகழ்ந்து வாழ்த்தும். 4

60 அசுரர்கள் உருமாறி பொய்யுருவில் வந்த எருது களின் பிடரியை முரித்து, போருக்கு முனைந்து வந்த காளி யனை யமுனை மடுவினின்றும் அகன்று ஓடுமாறு பண்ணிய வன், ஒளியுடையனவும் வலுவார்ந்ததுமான கற்களால் ஆன உறுதியான பெரிய மதிள்களையுடைய வனப்பு மிகுந்த திரு வரங்கத்தில் அருள் நல்கும் திருவரங்கன். அவன், தன் உடலில் வில்லையுடைய ஒரு கருநிற மேகம் என்னும் படிக்கு தன் அடியார்கள் மனதில் தோன்றுகின்றுன். அவ்வனுபவத் தினால் மெய்சிலிர்க்கும் பக்தர்களையே-அவர் அரங்கனை மனத்தால் நினைப்பது போல-நினைத்து என் மனமும் உண் மையிலேயே மெய்சிலிர்த்திருக்கும். 5

61 உலகுக்கு முன்னும் பின்னுமாய் நிலைத்திருப்பவனும், மதிப்பிட்டறியமாட்டாமல் விளங்குபவனும், விநோதமான அற்புதத்திருமேனியுடன் திகழ்பவனும், வானவர் தலைவனு மான திருவரங்கனின் திருவடித்தாமரைகளை தங்கள் முடி யில் சூடப்பெறும் பக்திகொண்டொழுகாத பாவிகளும் உய் வடையும் படிக்கு தீமையில்லாத, குற்றமற்றதான ஸ்ரீவைஷ் ணவபக்தி நெறியை அறிவுரைகள் மூலமாகவும், அந்நெறி யில் நடந்து காண்பித்தும் எங்கெங்கும் திரிந்தலைந்தவர்க ளாய், நம் சுவாமியான திருவரங்கப் பெருமானிடமே பக்தி யுடன் வாழ்ந்து வரும் தொண்டர்களிடத்திலேயே என்மனம் அன்பு கொண்டு விளங்குவதாகும். 6

62 மேகவண்ணத்திருமேனியையும், வெண்முத்துக்களுக் கிணையான புன்னகையையும், சிவந்த அழகிய திருவாயை யும், மணிமாலைகள் அசைந்தாடும் திருமார்பையும் கொண்டு

திகழும் திருவரங்கநாதனென்னும் அரிய பெரிய பரஞ்சோதி யுருவை, பரஞ்சுடரைச்சேர்ந்து உய்வைப்பெறவேண்டும் என்னும் நினைவுள்ள நெஞ்சினராகிச் சேர்ந்து,பக்தி பரவசத்தி னால் கண்களினின்றும் நீர் கசிந்து வெள்ளமாய்ப் பெருகி வழிய, அவ்வெள்ளத்திலே நிற்கும் தொண்டர்களின் திருவடி களில் என்மனம் ஒப்பற்ற ஆசை கொண்டு விளங்கும் 7

63 பெருமை மிகுந்த பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவ னும், வண்டுகள் துளைத்த திருத்துழாய் மாலையையும், திருமா மகளையும் உடைய மார்பை உடையவனும், செங்கமல மலர் போன்ற கண்களையுடையவனுமான எம்பெருமானையே நினைந்து மோகம், பற்று மிகக்கொண்டு. ஓரிடத்தில் நிலைத்தி ருக்கமாட்டாதவராய் எழுந்து கூத்தாடிப்பாடிக்கொண்டே ஊர்ஊராய்த்திரிந்தலைந்து திருவரங்கன் நம் பெரிய பெருமா ளுக்கே வசப்பட்டிருக்கும் பக்தர்களின்-கீழ்ச்சொன்ன அவர் களின் இன்ப வாழ்வுக்கு என் உள்ளம் விழைவு கொண்டி ருக்கும். 8

64 எனக்கு சுவாமியாகவும் எந்தையாகவும், விளங்கும் ஸ்ரீரங்கநாதப்பெருமானுக்கே அடியார்களாயிருந்து பக்திப் பரவசத்தின் மிகுதியால் கண்ணீர் வெள்ளமெனப் பெருகி உடலெங்கும் சிலர்ப்பெய்தி, நிதரிசனமாகக் கண்டு களிக்க இயலாமையால் மனத்தளர்ச்சி ஏற்பட்டு செய்வதின்னதென் றறியாமல் திகைப்புண்டு நின்று உடலும் மெலிவெய்தி, அரங்கன் சேவைதந்தருள வேண்டுமென்று ஆடிப்பாடிக் கொண்டே வணங்கி எழுந்து இறைஞ்சி, பெருமானைக் குறித்தே பித்தர் போல் பேசும் பக்தர்கள் உண்மையில் பித்தர்களல்லர். அவர்களைப்போல் திருவரங்கன் பால் பக்தி பண்ணாதவர்களே பித்தர்களாவர்.

## பயன் பகரும் பாசுரம்

65 உள்ளிதழ்களைக் கொண்ட பெரிய பங்கய மலரிலே வந்த திருமாமகள் நாயகன் திருவரங்கனின் உண்மை பக்தர் களும் தொண்டர்களுமாயிருப்பவர்களிடத்தில் அளவில்லா அடிமைப்பணி செய்வதிலே எக்காலத்திலும் விருப்புடையவரா

யிருப்பவரும், சோழநாட்டைக் காப்பவரும், மதுரை மா நகருக்கு மன்னராயிருப்பவரும், உறையூரின் தலைவருமான குலசேகர ஆழ்வார் சொல்லான இனிய தமிழ்ப்பாடல்களை ஓதுபவர்கள்,- பெருமானின் தொண்டர்களுக்கு தொண்டராய் விளங்குவர். 10

பதிகம்-3

66 இப்பதிகத்தில் திருவரங்கனை விளித்து மொழிகின்றார்.

மெய்யில்லாத-நிலையில்லாத-இவ்வுலக வாழ்வினை மெய் யாகவே,-நிலையாகவே-எண்ணி வாழ்ந்து வரும் இவ்வையக மக்களுடன் நான் கூடி வாழ்பவனல்லேன். அடியனை என் னிடம் அன்பு கொண்டருளும் திருவரங்கநாதனை, ''அனைத் துலகங்கட்கும் அதிபதியே ! திருவரங்கா'' என்று கூவியழைக் கின்றேன். அவ்வெம்பெருமானிடமே பக்தியும் மோகமும் கொண்டவனாயிருக்கின்றேன். 1

67 நூலுக்கிணையான மெல்லிய இடையையுடைய மங்கை யரின், இன்பத்தையே நினைத்திருக்கும் இம்மண்ணுலகத்தா ரோடு நான் உறவு கொள்வேனல்லேன். என்னை மால்கொள் ளச்செய்த பெருமானை, ஆலியா-ஆடி, - அரங்காவென்று அழைத்துக்கொண்டே அவ்வரங்கனிடம் மேன்மேலும் பக்தி மிருந்தவனாயிருப்பன். 2

68 மன்மதனின் காம வலையில் பிணிப்புண்டு மயங்கி இன் பம் நுகரும் இந்நிலவுலகோருடன் நான் நட்புக் கொள்வே னல்லேன் மணிமாலைகளை திருமார்பில் தரித்திருப்பவனும், திருவரங்கத்தே மன்னியிருப்பவனும், நல்லவனாகவே திகழ்ப வனும், நரக பயத்தைப் போக்கி அருள்பவனும் ஆன திரு நாரணனிடத்திலேயே நான் மோகித்திருப்பவனாவேன்.

69 உணவையும், உடையலங்காரத்தையுமே பெரிதென நினைத்து வாழும் இவ்வவனியோருடன் நான் சேர்ந்திருப் பதை விரும்புவேனல்லேன். உலகங்கட்குத் தலைவனும், கண் ணனாய் வந்தகாலை கொடியவளான பூதனையின் முலைசுவைத் தவனும், ஆயர்தலைவனுமான திருவரங்கநாதனிடமே நான் பக்தி மிகக்கொண்டு பித்தனாய் விளங்குபவன். 4

70 தீமையிலாத, குற்றமற்றதான நல்லநெறிமுறைகளை விடுத்து தீய நெறியிலேயே வாழ்வோருடன் நான் இணக்கம் கொள்வேனல்லேன். அனைத்துக்கும் முழுமுதலாயிருப்பவனும் கோபாலனாய் வந்தவனும், அழகிய அரவிந்த மலரில் தோன்றிய அணங்கு திருமாமகளின் மாண்புமிகு நாயகனுமான திருவரங்கநாதனிடமே நான் பித்தனாயிருப்பன்-பக்தி மிக்கவனாக இருப்பன். 5

71 என் போன்று, உலகவொழ்வைத் துறந்து வாழாதோருடன், நான் சேர்ந்திருப்பேனல்லேன். தேவருலக வாழ்வையும் கூட ஒருபொருட்டாகக் கருதுவேனல்லேன். நித்திய சூரிகளின் நாயகனும் திருவரங்க நகரில் மன்னியிருந்தருள் நல்கும் எம் தலைவனுக்கே பித்தன்-பக்தன் ஆவேன். 6

72 செந்தாமரைக் கண்ணனும், பக்தர்களிடத்தில் பிரேமைமிகுந்துள்ளவனுமான பெருமானே,-எனக்கு-, எந்த ஒரு நிலையிலும் பக்தர்களல்லாத எவரொருவருடனும் கூடி நிற்கும் மனநிலையினைத்தவிர்த்து நல்வழிப்படுத்தி அருள் நல்கினன்-ஆகையால்-அவ்விதம் அருள் செய்த அவ்வண்ணனே, 'சுவாமியே!, ஸ்ரீரங்கநாதா!' என்று கூவி அழைக்கின்றேன். இவ்விதமாக பேருதவி செய்த திருவரங்கனுக்கே எக்காலத்திலும் பித்தனாய், பக்தனாயிருப்பன். 7

73 பரமனும் பரஞ்சுடருமான திருவரங்கன் பால் பக்தி கொள்ளாதார் யாவரும் மதிகேடரே. அவர்கள் நினைவில் நான் ஒரு பேயனே. இதனை இயம்புவதால் பயனேதுமில்லையாம். 'ஆயனாய் வந்த பெருமானே ! திருவரங்கா ! என்று கூப்பிட்டு, எனக்கு உதவியாளனான ஸ்ரீரங்கநாதப்பெருமானிடமே பித்தேறியவனாயுள்ளேன். 8

## பயன் பகரும் பனுவல்

74 அழகிய கையதனில் திருவாழியைக் கொண்டு திகழும் திருவரங்கநாதனின் திருவடிகளிலேயே தனிப்பெருந்தன்மையில் பக்தி கொண்டு பித்தனாகவே இருப்பவரும், சேரநாட்டின் அரசருமான குலசேகர ஆழ்வார் சொன்ன இப்பாசுரங்களைப்

பயின்று ஓதும் வல்லமை பெற்றவர்க்கு இவ்வுலகில் எந்த ஒரு குறைவும் இல்லையாம். 9

திருக்கண்ணபுரத்தெம்பெருமானை ஸ்ரீராமனுகக்கருதி, தன்னை அன்னை கௌசலையாக எண்ணி, தாலாட்டுப்பதிகம் ஒன்று அருளியுள்ளார். இப்பதிகம் பத்தாம் பாசுரத்தில் ஸ்ரீ ரங்கநாதப் பெருமானையும் நினைவு கூர்ந்து மங்களாசாஸனம் பண்ணுவார்.

75 தேவர்களையும், அத்தேவர்களின் எதிரிகளான அசுரர் களையும், மற்றும் உலகையும் திசைகளையும் படைத்த பரமனே விண்ணவர், மண்ணவர், மற்றும் முனிவர் ஆகிய யாவரும் வந்து தாளிணையேத்திப் பணிந்து தோத்திரம் பண்ணும் வகையில் திருவரங்கப் பெருநகரில் கண்துயில் கொள்ளும் ஸ்ரீ ரங்கநாதப் பெருமானே ! சிறந்துயர்ந்த காவிரியாறு பெருகிச் செல்லும் திருக்கண்ணபுரத்தில் இருந்து அருள் நல்கும் கரு மணிவண்ணமேனியனே ! அம்புகளை உந்தித்தள்ளும் வலிமை மிகுந்த விற்பிடித்த வீரனே ! இராகவனே ! உனக்குத்தாலே லோபாடுகின்றேன் கண்துயில் வாயாக. பதிகம் 8 பா. 10

76 ''தைமகத்தில் வரும் மழிசைப் பரனே!'' என்று பிரபந்த சாரம் போற்றும் திருமழிசைப்பிரான் திருவரங்கச் செல்வனுரை, தாம் மொழிந்தருளிய திருச்சந்த விருத்தத்தில் ஐயிரண்டு பாசுரங்களிலும், நான்முகன் திருவந்தாதியில் ஈரிரண்டு பாடல்களிலும் துதித்தேத்துவார்.

## திருச்சந்த விருத்தம்

திருவரங்கப் பேரரசே! இராமாவதாரத்தில் வானரப் படையை அன்புடன் ஏற்று அருளிய என் அப்பனே!, தேவர்கள் அமுதம் பருக வேண்டி விண்ணப்பம் செய்து நின்ற அந்த நாளிலே, வாசுகியென்னும் சிறந்த பாம்பின் உடல் நன்கு அழுந்திப் பதியுமாறு கயிறாகச் சுற்றி, அலைகளுடன் கூடிய கடல் குழம்பும்படிக்கும், மந்தரமலையிலிருந்த மரங்கள் யாவும் தேய்ந்து பெயர்ந்து விழும்படிக்கும் கடைந்தபோது எழுந்த

நடுக்கத்தினாலே நிலவுலகமே நடுங்கிக் குலுங்கி அசையுமாறு நீ தானாகவே கடலைக் கடைந்தவனாய் விளங்கியிருந்த காலே, பார்த்தபடியே செயலேதுமின்றிருந்த, தேவர்களும், அசுரர்களுமான வீரர்கள் யாதுசெய்தனர்?-ஒன்றுமில்லையாம்-. இதனை நான் தெளியுமாறு கூறி அருள்வாயாக. உனது இந்த சிறந்துயர்ந்த பண்பானது மிக-மிக அற்புதமான ஒன்றாம். 21

## கிருஷ்ணாவதாரத்தில்

77 கூந்தற் கொண்டையில் வைத்த மலரின் மீது வண்டு மொய்க்கும் படியிருப்பவளான திரிவக்கரை என்ற நங்கையின் கூன் முதுகை, வில்லில் வைத்த குண்டாகக் கருதி, அக்கூனை அறவே அகற்றி உள்ளம் மகிழ்வுற்ற பெருமானான-திருவரங்க நாதன், கரையோரத்தில் அலையும் நண்டுகளை உட்கொண்ட நாரைப்பறவை அசைந்து செல்வதால், வாளை மீன் அஞ்சித் துள்ளியகலும் காலே கருநைதலை மறைவாக்கிக் கொண்ட கெண்டை மீன்கள் பயமின்றி மேயும் அழகிய குளிர்ந்த நீரை யுடைய திருவரங்கத் திருப்பதியில் அருள்பவனா யிருக்கின்றான். 49

78 எல்லாத்திசைகளிலுமுள்ள மக்கள், கூட்டம் கூட்டமாக வந்து வணங்கி இறைஞ்சிநின்று, குளிக்கும் தெளிந்த நீரையு டைய காவிரி நதியையுடையதும், வண்டுகளின் ரீங்கார ஓசை யையுடைய சோலேகள் வேலியைப்போல் சூழ்ந்து திகழ்வது மான திருவரங்கமென்னும் திவ்வியத் தலத்திலேயே, வெண் ணிற அலேகளையுடைய கறுமையான கடலானது சிவந்து வெப்பமுண்டாகும்படி இராமவதாரத்தில்-, ஓர் நாள், உறுதி வாய்ந்த வில்லைக்கொண்டு கணேயேவிய மகாவீரனும், தீரனுமான ஸ்ரீ ராமபிரான் திருவரங்கநாதனாக சேவை தந்தருள்கின்றான். 50

79 வில்லே நாணேற்றி இழுத்து பற்பல கணைகளை விடுத்து, இலங்கை மன்னன இராவணனின் ஐயிரண்டு தலே களையும் அறுத்து உதிரப்பண்ணின, சீதைகேள்வன் ஸ்ரீராம பிரான் நிலேத்து இருந்து அருளும் இடம், திருத்தலம்,- நான்கு முகங்களையுடைய பிரமன் பூசித்த திருக்கோயிலும்,

எங்கும் பரவி வெள்ளப்பெருக்குடன் பொன்னைத்தள்ளிக் கொண்டு அலைந்து புகுந்து வரும் பெரு நீரையுடைய பொன்னியெனும் காவிரியாறு பாய்வதான ஸ்ரீரங்கமே என்று மொழிவர் 51

80 மலைப்பகுதிகளிலே வாழ்ந்து மிக்கவலிமையுடையதான, தன்னையெதிர்த்து வந்த குவலயா பீடமென்னும் யானையை எதிர்த்து, அதன் துதிக்கையைப்பற்றி அதனைத் துன்புறுத்தி சீற்றம் மிகக்கொள்ளச் செய்து, பின்னர் அதன் கொம்புகள்-தந்தங்கள்-இரண்டையும் முரித்து அதனை அழித்த பெருமான்-கண்ணன்-, வாழும் திவ்வியத்தலம், முற்றிய கணுக்களையுடைய மூங்கிலாலான மூன்று தண்டங்களை கைக்கொண்டு வாழும் பற்றற்ற துறவிகளும்-முனிவர்களும்,- மற்றும் அவர்கட்கிணையாகவே உலகப் பற்றினைத் துறந்து வாழும் பாகவத பக்தர்களும் நிறைந்து தோன்று மிடமாயிருப்பதும் அழகிய குளிர்ந்த நீரையுடையதுமான திருவரங்கமென்னும் திருத்தலமேயாம். 52

81 பாணாசுரனுக்கு உதவுவான் பொருட்டு, துர்க்கை, கணபதி, சுப்ரமணியன், மற்றும் பெருஞ்சேனைகளுடன் எதிர்த்து வந்த உருத்திரன், தாக்குதலைத் தாங்கும் துணிவின்றித் தன்னுடன் வந்தவர் அனைவரையும் கூட்டிக் கொண்டு திரும்பி ஓடிய பின்னர், பாணாசுரனின் ஆயிரந்தோள்களைத் தன் திருவாழியால் துண்டித்து வீழ்த்தியவனும், பிரமன் முதலாத் தேவர் அனைவர்க்கும் மூல புருடனான பரமன்-கண்ணன்-, அருள் நல்கும் பெருமை மிகுந்த திருக்கோயில், பல பக்தர்களும், அடியவர்களும் கூடிப் புனலாடும் புனித நீரையுடைய திருவரங்கமென்னும் பெயர் கொண்டதாகும். 53

82 இலக்கிணையென அகன்று கூர்மையான நுனியை உடைய அம்புகளை ஏவி இலங்கையின் படைவீடு அனைத்தையும் அழித்த ஸ்ரீராமபிரான், மலையில் தோன்றி கீழ்ப்பகுதியில் வெள்ளமாகப் பெருக்கெடுத்து வெகு தொலைவு ஓடிவந்து சந்தன மரங்களை வேருடன் பெயர்த்துத் தள்ளிக்கொண்டு, வேகத்தால் உடலை நடுங்கப்பண்ணி, நீரில் எறியப்பெற்ற

குங்குமக் கொடியுடன் சந்தனக்குழம்பையும் சேர்த்துக் கொண்டு பெருகிவரும் திருக்காவிரி ஆற்றங்கரையில் விளங் கும் ஸ்ரீரங்கத்தில் மன்னியிருந்தருளும் ஸ்ரீரங்கனதைஸ்வாமி யேயாவான். 54

83 ஆயிரம் இதழ்களைக் கொண்ட பெரிய தாமரைப்பூவி லிருக்கும் திருமாமகள் இலக்குமிதேவிக்கும், நிலமடந்தைக் கும் நாயகனுகிப்பின்னும் ஆயர்குல அணங்கு நப்பின்னைக் கும் தலைவனுகி அவள் தோள்புணர்ந்து மணம் புரிந்து மகிழ்ந்தனை. அத்துடன் உன்னுடைய பாதகமலங்களை எனது உள்ளத்துப் பொருந்துமாறு பதித்து அருள் செய்தனை. இதன் காரணம் யாதெனில்-, பெருமானே ! நீ இரு புறங்களிலும் காவிரியாறு பெருகிச் செல்லும் திருவரங்கத்தில் நிலையாயி ருந்தருளும் உத்தமனல்லையோ? 55

84 கரும்பிலிருந்து உண்டாகும் பெரும் இனிப்புச்சுவை மிகுந்த வெல்லக்கட்டிக்கும் மேலான இனிமை மிகுந்தவனே பாற்கடலில் பள்ளிகொண்டருளும் கண்ணபிரானே ! உறுதி யான இரும்பும் அழியும் படிக்கு வெவ்விய அம்புகளை ஏவிய வில்லைக்கைக் கொண்ட வீரனே ! ஸ்ரீராமபிரானே !, திரு வரங்கத் திருத்தலத்தில் உறைந்தருளும் அரங்கனே ! வண்டு கள் மொய்க்கும் திருத்துழாயால் அருச்சிக்கப்பட்ட உன்தன் தாளிணைகளையே விரும்பி, மற்றெதிலும் விழைவு கொள்ளாது சரணமடைந்த அடியேனுக்கு அருள் நல்கவேணும். 93

85 காவிரியால் சூழ்ந்து விளங்கும் திருவரங்கத்தில் பொருந்தியிருக்கும், காயம்பூமேனியனானமாயனே! அடி யேனது உரையைச்சிறிது கேட்டருள்வாய்-உடலுறுப்புகளுடன் இணைந்திருக்கும் எனது ஆத்மா என்னும், புண்ணிய-பாவங் களில் பிணைந்திருந்த கொழுந்தானது, உடலை விட்டு மேலெழும்பி, உன்னுடைய திருவடியான எழிலான, உகப்புக் குரிய ஒளியை உடைய, வளம் மிகுந்த மலரான அதிலேயே நிலைத்திருக்க அதனை அணுகி அணிந்து எங்கும் சோர்வு சிறிதுமின்றிக்கே நன்னிலையை அடைந்ததாயிற்று. 119

## நான்முகன் திருவந்தாதி

86 திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனும், அதே போன்று ஸ்ரீரங்கத்திலும் முன்காலத்திலிருந்தே மேவியிருந்து அருள்பவனும், ஊழிக்காலத்தில் ஆலந்தளிரில் பள்ளிகொண்டிருந்தவனும் உலகங்கள் யாவற்றுக்கும் பயனளிக்கும் பொருள் எனத்திகழ்பவனும், வானுலகோர்க்கு உண்மைப் பொருளாய்த் தோன்றியவனும், படைப்புத் தொடக்கத்தில் நீரில் படுத்திருந்த வண்ணமே படைப்பைச் செய்தருள்பவனுமான ஸ்ரீமந்நாராயணனென்னும் உண்மையான தத்துவத்தை நான் அறிந்துள்ள நிலையில்-வகையில்-, நுண்ணறிவற்ற சாமான்யர்கள் அறிந்தாரிலர். 3

87 திருவரங்கத்தில் அருள்நல்கும் திருவரங்கனே என்னைக் காத்தருள ஆட்கொண்டவன் என்னை இருள் தரும் இம்மாநில வுலகில் மீண்டும் பிறந்திடரெய்தத்தள்ளமாட்டான். இது உறுதியேயாம் என்உள்ளத்திலேயே, நிற்பது பள்ளி கொள்வது வீற்றிருப்பது ஆகிய மூன்றையும் கொண்டு திகழும் அப்பரமன் மீண்டும் பாற்கடலில் அரவின் மீது பள்ளி கொள்வதை ஏற்பனோ? ஏற்கமாட்டான். 30

88 இப்பாசுரத்தில் ஆறு திவ்வியத்தலங்களை ஒரு சேரச் சேவித்து இனியராகிருர் - திருக்குடந்தை, திருவெஃகா, திருவள்ளூர்,-ஆகிய திவ்வியத் தலங்களிலும், பாம்பணையில், பள்ளி கொண்டிருப்பவனும், திருவரங்கம், திருப்பேர், அன்பில் ஆகிய திருத்தலங்களிலும் அரவணையில் பள்ளிகொண்டிருப்பவனும், திருப்பாற்கடலிலும் அரவரசின் மீது பள்ளிகொண்டிருப்பவனும் ஆன,அனைத்துக்கும் ஆதியான திருமால் தன்னைத்தஞ்சமடைந்தவர்கட்கு, அவர்கள் கருத்துக்குட்பட்டவனுவான். 36

89 தனக்கு ஆட்பட்டிருப்பவனைத் தேடித்திரியும் திருமாலே! சான்றுகள் கொண்டு உன்னை கேட்டறிய முற்படுவோர்க்கு என்றும் விளங்கும் வண்ணம் திருவரங்கத்தில் அருளும் அண்ணலே! உன்றன் திருவடியிணைகளையே காணவேண்டும் என்னும் பேரார்வத்துடன் தேடிக்கொண்டு எப்போதும் அலைந்த வண்ணமேயிருக்கும் அடியேனது நிலையினைக் கண்டு அருள் செய்து என்னை ஏற்றுக்கொள்ள வேணும். என் மனமானது

உன்னைப் பெறுவதிலேயே நோக்கம் கொண்டுள்ளது. இதனின்
றும் நான் விலகிச் செல்வேனல்லேன். 60



தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கனையே தம் மனத்துறை மாதவனாக நினைந்தேத்திப் போற்றித் துதிப்பார். பிற திவ்விய தேசத்தெம்பெருமான் ஒருவரையும் இவர் எண்ணினாரில்லை அவதாரங்களிலும் ஸ்ரீ ராம, ஸ்ரீ கிருஷ்ணவைபவங்களை மட்டும் மொழிவார், கண்ணன் கரிக்கருளி முதலைவாயினின்றும் காப்பாற்றியதை வருணித்து மொழிகின்றார் இரண்டு பாசுரங்களில். இம்மாமுனிவர் திருவரங்கநாதனைப் போற்றி, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி-என இரு பிரபந்தங்கள் அருளியுள்ளார். திருமாலையில் திருவரங்கனிடமே பக்தி கொண்டு அவனருள் பெற்றுய்யவேண்டும் என வலியுறுத்தி மொழிகின்றார். ''திருமாலையறியாதார் பெருமாள் அறியாதாரே'' என்னும் தொடர்கொண்டு திருமாலையின் சிறப்பினை உணரலாம். நம் சுவாமி தேசிகன், இவ்வாழ்வாரை, ''மன்னுமதிள் திருமண்டங்குடி தான் வாழ மார்கழி மாதக் கேட்டை நாள் வந்து தோன்றிய துன்னுபுகம் தொண்டரடிப் பொடியே'' என்று விளித்து மொழிவார். தாம் புனைந்தருளிய பிரபந்த சாரத்தில் மேலும் திருமாலை பிரபந்தத்தை ''நற்றிருமாலை'' என்று புகழ்வார்.

திருப்பள்ளியெழுச்சி பத்து பாசுரங்களிலும் திருவரங்கப் பெருமானை ''துயில் நீங்கி பள்ளியெழுந்தருள வேண்டும்'' என்று வேண்டுகின்றார்.

இனி இரண்டு பிரபந்தங்களின் உரையினைச் சிறிது சுவைத்துணர்வோம்-திருமாலை பிரபந்தத்தின், 22, 23, 25, 26, 30, 36-ஆகிய ஆறு பாசுரங்களின் உரை ''கருவரங்கம்-கருக்கோட்டி'' என்னும் தலைப்பில் வரைந்துள்ளனம்-.

90 பிரளய காலத்தில் மூன்று உலகங்களையும் தன் திருவயிற்றில் இருத்திப் பாதுகாத்துப் பின்னர் படைப்புக்காலத்தில் வெளிப்படுத்தி அருள் செய்த முதல்வனே! அனைத்துக்கும் மூல

காரணனாய்த் திகழ்பவனே! திருவரங்கப் பெருநகரில் இருப்ப வனே! உன்னையே சரணமாகப்பற்றி உன்னிடம் பக்தி பெற்றி ருப்பதன் பயனால், நாங்கள் புலன்களை வயப்படுத்தி, நேர்ந்த பாவங்களையெல்லாம் பாய்ந்து கடந்து சென்று, பயமேதுமின்றி கூற்றுவனின் தூதர்களின் தலைகள் மீதே வெற்றிக்கொடி பிடித்தவண்ணம் நடப்பவர்களானோம். இதனை நீ கண்டருள் வாய் ஐயனே! 51

91 பச்சை நிறங்கொண்ட பெரிய மலைக்கிணையான திரு உடம்பையும்,பவளத்தினையொத்த சிவந்த திருவதரங்களையும் செந்தாமரைக்கிணையான கண்களையும் பெற்று விளங்கும் அச்சுதனே! விண்ணோர் தலைவனே! ஆயர்கள் மிக விரும்பும் கண்ணனே!- என்றிவ்வாறாக உன்னைச் சொல்வதில் பெறும் சுவை நுகர்வை விடுத்து,விண்ணொடு சென்று புருடோத்தமனான உனது பரமபத வாழ்வினால் பெறும் இன்பம் கிட்டுவதாயிருப்பி னும் அதனை யான் விரும்புவேனல்லேன் அரங்கநகருறை அண்ணலே! 2

92 திருவரங்கத்திருத்தலத்துறை அமலனே!, வேதத்தில் உரைத்துள்ளபடி, மனிதர்கள் நூறாண்டு வாழ்வு பெறுவார் களேயாயினும், அதில் அரைப்பகுதி முழுவதும் உறக்கத்தில் கழிவதாயுள்ளது. மீதி உள்ள பகுதியும் அறியாத குழந்தைப் பருவம், சிற்றின்பத்திலேயே பற்றுமிகக் கொள்ளும் இளமை பருவம், பிணி, பசி, முதுமை மற்றும் பல துன்பங்களையும் இடர்களையும் கொண்டதாயுள்ளது. இவ்விதம் இன்னல்களும், இடையூறுகளையுமே கொண்டு விளங்குவதால் நான் மீண்டும் பிறவி பெறுவதை விரும்பவில்லை· 3

93 மிகவும் பாவங்களையே பண்ணிக் கொண்டிருந்த கத்தி ரபந்து என்னும் பாவியும் கூட மூன்று எழுத்துக்களைக் கொண்ட ‘கோவிந்தன்’ பெயரைச் சொன்னதால் வீடு பேற் றினைப் பெற்றுய்ந்தான். பெயரைச்சொல்வதனாலேயே, அவன் பெருமான் அடியார்கள் பால் அருள் நல்கிக்காக்கும் ஸ்ரீரங்க நாதன் என்னும் பெயர் பெற்றுள்ளவனும், தன்னடியார்கள் பால் அன்பு மிகக்கொண்டவனுமான பெருமானை எளிதாகப்

பெற்றிருந்தும் கூட பிறவி பெற்று இவ்வுலகச் சுழற்சியில் உழலும் படியாயுள்ளதே! வருத்தமே! 4

94 மங்கையரால் இன்பங்களை நுகர்வோம் என்று பிரமித்து மிகப் பெரியதேயான, பிறர்க்கு ஊழியம் செய்பவன் போல் துயரினைப் பெற்று,- பகல் முழுவதும் வருந்தியுழைத்து இரவுகளில் மட்டும் சிறிது ஓய்வு கொண்டு, களைப்பு மிகுதியால் மங்கையுடன் பேசியின்புறவும் இயலாது, படுத்திருந்து இவ்வுடலுக்கெனவே பாடுபட்டு, இளைத்து நலிவையும் பெற்று, தண்ணெனும் துழாய் மாலையணிந்த மார்பினன் திருவரங்கனின் அடியார்களாய் இருந்து அவன் புகழ் பாடி, ஆடி அவனுக்குத் தொண்டுப் பணி செய்து இன்பமடையாமலிருக்கும் இழிகுண மக்கள், உண்ணும் சோறில் ஆசை கொண்டிருப்பது அற்புதமே! 5

95 கொடுமையென்னும் சுவரை உயர்த்தி மறு பிறவியின் பத்திற்கென வறுமையையே கொண்டு, வெளிப்பக்கம் சுவர் போன்றும், உட்புறம் ஒட்டையாய், வெறுமையாய்க்காணும் உடல் மாய்ந்தொழியும் நேரம் அறியும் திறனற்றவர்களே! அறத்தின் காவலனாகத்திகழும் திருவரங்கநாதனுக்கு அடிமைப்பணி செய்து பயனெய்துவதை விடுத்து. அழியும் தன்மைத்தான இவ்வுடம்புக்கு வீணே ஒப்பனை செய்து. நீங்கள் மரித்தபின், உங்கள் உடலை பறவை வந்து கொத்தி களவித்தின்னும்படி கிடப்பீர்கள்! 6

96 சாரமற்றவை என்று உறுதிப்பண்ணப்பட்ட சமயக் கொள்கைகளை, மறை முதலான கலைகளைக் கற்றுத் தேர்ந்த அறிஞர் பெருமக்கள், படிப்பதோ, பிறர் சொல்லக்கேட்பதோ செய்யார். ஐயன்மீர்! எனது தலை அறுப்புண்டாலும் மரண மெய்துவன்-அல்லது, இறக்கமாட்டேன். இது சத்தியம்! காண்பீராக. ஒரே வில்லைக்கொண்டு இலங்கையையழித்த ஸ்ரீராமபிரானே நிலைத்த [உண்மையான, உயர்தனித்தலைவனை பரதேவதையாகின்றான். 7

97 திருவரங்கப்பெருநகருறை நாரணனே!, பிற சமயவா

திகள் உன்பால் பகைமையும், காழ்ப்பும் கொண்டு நிந்திப் பார்களேயாகில், அந்நிந்தனையே அவர்களை அழிக்கும் நோயாய் அமையும்-அன்றியும், அவர்கள் சிரம், இலக்காகுமாகில், உரிய வலிமையும், தகுதியும் வாய்க்குமாகில், அவர்கள் தலைதனைக் கொய்வதே உன்னடியார்கள் செய்ய வேண்டுவதாம்-இது அறநூலுக்கு உடன்பாடன்றோ? நீ காண்பாய். 8

98 நினைவாற்றலைப் பெற்றிராத பேதை மனிதர்களே ! ஸ்ரீமந்நாராயணனையன்றி-ஒத்தார் மிக்காருமிலாத- பெருந்தெய்வம் பிறிதொன்று இருக்கின்றதோ? இல்லையே-இல்லை என்பதே உண்மை. உரிய காலம் வாய்த்தாலன்றி திருமாமகள்கேள்வன் ஒருவனே உயர்தனிப் பெருந்தெய்வம் என்பதை கலக்கமுற்ற உள்ளங்கொண்ட நீங்கள் உணர்வீரல்லீர். நீங்கள் அறிந்துள்ளதே பெரிதெனக் கருதுபவராயிருக்கின்றீர் அதற்கும் மேல் உள்ளதை உணரும் வல்லமை பெற்றுள்ளீரல்லீர். அவனையன்றிப் பிற தெய்வம் இல்லவே இல்லை. ஆகையால் மானிடரே! நீங்கள் பசுக்கன்றுக் கூட்டங்களை மேய்த்து மகிழ்ந்த என் அப்பன் கண்ணபிரானின் கழலிணைகளையே, திருவடிகளையே தஞ்சமெனக்கொண்டு உய்வடைவீராக. 9

99 எங்கெங்கும் பற்பல தெய்வங்களை நிறுவிய பெருமானே இன்பம் பயப்பதான ஒப்பற்ற தனது திருவருளினாலே. உய்வைப் பெற விழைவோர்க்கு திருவரங்கமென்னும் திருக்கோயிலை, உய்வைப்பெறும் வண்ணம் விளங்கச் செய்திருக்கின்றான். மானிடரே!-, நீங்கள் இதனைச் செவிமடுத்து அறிந்தீரோ? சொல்லுவேன்-, கருடனை ஊர்தியாகப் பெற்றுள்ள பெருமான் திருவரங்கன், தானே விழைந்து செல்வம் அளிக்க இருக்கும் நிலையில், மூதேவியின் மடியினின்றும் பொருளைப் பெற விழைவு கொண்டுள்ளீரே! இது தேவையோ! 10

100 ஒரே வில்லைக்கைக்கொண்டு, உலகங்கள் உய்வடையும் பொருட்டு பொங்கியெழுங்கடலை அணைகட்டி அரக்கர் தலைவன் இராவணனை போரில் மாண்டொழியுமாறு செய்த நம்பெருமான் மன்னியிருந்தருளும் சுற்றுச்சுவர்களைக் கொண்டுள்ள திருவரங்கம் என்று கொண்டாடி மகிழ்வுறாத, கருவி

லேபெருமானின் திருவருள் பெறாதாவர்களே ! நீங்கள் வீணே பயினின்றிக்காலத்தைக் கழிப்பவராயுள்ளீரே ! 11

101 யமனும், முத்கலன் என்பான் ஒருவனும் பெருமானின் திருப்பெயர் குறித்து உரையாடுங்காலையில், தற்செயலாய், எதிர்பாராமல் அவர்கள் உரையாடல் மொழிகளைக் கேள்வியுற்ற நரகில் வாழ்பவர்களும், துன்பமயமேயான நரக வாசத்தை விட்ட கன்று சுவர்க்க சுகம் நுகரும்படி பண்ணும் திருநாமங்களைக்கொண்டுள்ள நலமேயளிக்கும் பெருமானது திவ்வியத்தலம் 'ஸ்ரீரங்கம் என்று தெளிந்து மொழியாமல் எளியரான மனிதர்களும், மறந்து பிற சமய போதனைகளால் துயரே அடைபவராயுள்ளனரே என்று அவர்கள் பொருட்டே கவலை கொள்பவனுயுள்ளேன். 12

102 அலையெழும் கடல்களால் சூழ்ந்து தோன்றும் மாநிலமெங்கும் வாழும் மனிதர் மற்றும் எல்லா உயிர்களும், சிறந்த மணங்கொண்ட மலர்களைக்கொண்ட துளசிமாலைகளையும் அணியும் வானோர் தலைவன் எம்பெருமானை துதிபாடிய வண்ணம் இருக்கும் நிலையில், அவ்விதம் தோத்திரம் பண்ணும் அறிவினைப் பெற்றிராத மனிதன் எவனொருவனும் ''அரங்கம்'' என்று சொல்லுவராகில், அக்கணத்திலேயே, அந்நாளிலேயே, புலன்களின் கொடுமையால் நிலைத்திருக்கும் நரகம் யாவும் புல்லே வளர்ந்திருக்குமாறு தொலைந் தொழியும். 13

103 வண்டுகள் ரீங்காரமிடும் சோலைகள், மயில் கூட்டங்கள் மகிழ்வுடன் நடனமாடும் சோலைகள், மேகங்கள் தவழ்ந்து செல்லுமாறு உயர்ந்து தோன்றும் சோலைகள், குயிலினங்கள் கூட்டமாய்க் கூவி இன்னொலியெழுப்பும் சோலைகள், தேவாதி தேவனை பெருமான் மன்னியிருந்தருளும் சோலைகள்-. ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டு அலங்காரத்துடன் விளங்கும் திருவரங்கத்திருப்பதியை கொண்டாடிக் களிப்புருத, கர்வம் கொண்ட அறிவிலிகள் விரைந்து உண்ணும் சோற்றை, அவர்களையகற்றித்துரத்தி அவ்வுணவை நாய்கள் உண்ணச் செய்வது நலமாம். 14

104 உண்மை நெறியில் நிலைத்திருப்பவர்க்கு உண்மையாளனாய்த் தோன்றுபவனும், என்னைப்போல் நல்வினை சிறிதளவும் வாய்க்கப் பெறாதவர்களான பொய்யர்கட்கு இல்லாதவனாகவே திகழ்பவனுமான பெருமான் கருடனைக் கொடியில் பெற்றுள்ளவனான ஒருவனே என்று தெளிந்த அறிவு தோன்றிய பின்னர், உய்வைப் பெறவேண்டும் என்னும் ஞானம் உடையவர்கட்கு, ஐயத்தால் நேரும் கேடுகளை அறவே அகற்றி, எழிலனாய் சேவை தந்தருளும் எம்பெருமான் அருளும் திவ்வியத்தலம் திருவரங்கமே! 15

105 வஞ்சகம் செய்பவனும், பிறர் பொருளைக் கவர்பவனும், காமுகர்களோடு நட்புக் கொண்டவனாயும் இருந்த- இளமைப் பருவத்திலே-, மங்கையரின், மீனுக்கிணையெனத் தோன்றும் கண்களென்னும் வலையினுள் சிக்கி மீட்சி பெற மாட்டாதிருந்த என்னை, ''அன்பனே! இங்கு வருக'' என அன்புடன் அழைத்து, என்னுள்ளத்திலும் நுழைந்து, தன்னிடம் பேரன்பு எழும்படி அருளிய அழகிய மணவாளனின் புனிதம் மிகுந்த ஊர் அரங்கமேயன்றோ? 16

106 பேரார்வம் கொண்டு பிறிதொன்றிலும் ஈடுபாடின்றி நிலைத்தமனத்துடன் துதிபாடும் திறன் பெற்றுள்ளேனல்லேன். அறநூல் முறைவழுவாமலும் எதுவும் செய்வேன் என்பதும் இல்லை. பெருமானைக் குறித்து நினைந்து உருகும் மதியும் பெற்றிருக்கவில்லை. இவ்விதமாக, இரும்புக்கிணையான என் கடினமான சித்தமும் சிறிது சிறிதாக உருகி விடும்படிக்கு, வண்டுகள் நிறைந்த சோலைகளால் சூழ்ந்து தோன்றும் திருவரங்கத்தைத்தான்மன்னியிருந்தருளும் கோயிலாகப்பெற்றிருக்கும், கரும்பைப் போன்று இனித்திடும் ஸ்ரீரங்கநாதப் பெருமானை சேவித்து என்னுள் இருத்தி எனது இருகண்களும் மகிழ்வுற்றிருக்கும் வகைதான் என்னே! அற்புதம்! 17

107 அலைகளை வாரி வீசுகின்ற குளுமை பொருந்திய கடலின் மேல் நீர் திவலைகள் ஒலி செய்து இனிமை ததும்பிப் பரவியிருக்க, தனியனாகப் பள்ளிகொண்டு அனைத்துலகினையும் ஆட்சி செய்யும் செந்தாமரையை ஒத்தகண்களைக் கொண்டுள்ள

எங்கள் இறைவனும், கொவ்வைக் கனிக்கிணையான சிவந்த திருப்பவளவாயையும் கொண்டு திகழ்பவனுமான திருவரங்க நாதனை தரிசித்து மகிழ்வுற்ற என்றன் கண்களினின்றும் நீர்த் துளிகள் அரும்பி விழுகின்றன. பாவியாகியயான் யாது செய்யக்கூடும்? வருத்தமே! 18

108 உலகீரே! கடல் வண்ணத் திருமேனியனான கடவுள் என் எந்தை திருவரங்கன்-, மேற்குத்திசையில் தன் தலையினை வைத்து, கீழ்த்திசையில் தாளிணைகளை நீட்டிக் கொண்டு, வடக்குத்திசையில் பின்பக்கம் தோன்றுமாறு, தென்திசையில் உள்ள இலங்கை நகரைப் பாத்தவண்ணம் ஆதிசேடனென்னும் அரவின் மீது கண்துயின்று சேவை தந்தருள்வதைச் சேவித்து எனக்கு உடல் உருகுவதாயிற்று. நான் என்ன செய்வேன்? யாதும் செய்ய இயலாமைக்கு வருந்துகின்றேன். 19

109 எங்கும் பரவிப் பெருகிச் செல்லும் காவிரீ நீரையுடைய திருவரங்கத்திலே பாம்பைப் படுக்கையாகக் கொண்டு பள்ளி கொண்டு சேவை தந்தருளும் மாயபுருடனான ஸ்ரீரங்கநாத னுடைய, திருமகள் மன்னியிருக்கும் அழகான மார்பையும், மரகத்தைப் போன்ற பச்சை வண்ணத் திருமேனியுருவையும், திருத்தோள்களையும், தூய்மை மிகுந்த செந்தாமரை போன்ற கண்களையும், சிவந்த பவளத்திற்கிணையான உதடுகளையும், மிக-மிகச்சிறந்துயர்ந்து விளங்குவதான திருமகுடத்தினையும், திருமேனியின் ஒளியழகையும் சேவித்துக்களிப் பெய்தாமலிருப் பது அடியவர்களால் இயலாத ஒன்றும்-அரங்கனடியார்கள் அல்லும் பகலும் அனவரதமும் அவனைக்கண்டு சேவித்து மகிழ் வதையே விரும்பியிருப்பர் என்பது கருத்து-. 20

110 பவளம் போன்ற சிவந்த வாயைப் பெற்றுள்ள ஸ்ரீரங்க நாதனைப்பற்றி பணிவுடன் பரமபதத்தில் பெருமானிடம் நித்திய சூரிகள் பணிவிடை செய்வதற்கிணையாக துணிவுடன் இருந்து வாழ்வில் பெற இருக்கும் பெருமானின் திருவருள் என்னும் பயனைப்பெற முயலாத என் பழமையான நெஞ்சமே! நினைவுக் குரிய புலனை நீயே சிந்தித்துச் சொல்லுவாயாக - எதைக் குறித்து எனில்-, பொலிவார்ந்த உயர்தரமான பொன்னாலாக் கிய கண்டு கொள்ள அரிதான மலைபோன்ற திருவரங்கத்

திருக்கோயிலில், நீலமணிவண்ணத்திரு உருவினரான திரு வரங்கர் பள்ளிகொண்டு தன்னடியார்கட்கு சேவை தந்தருளும் தன்மையை மனத்தினால் எண்ணுதல் எளிதாமோ?

(பாசுரம் 24-ன் உரை 'நெஞ்சே' தலைப்பில் வரைந்துள்ளனம்)

111 ஸ்ரீராமபிரான் பெரும்படையுட ன் இலங்கை செல் வதற்கென,- சுக்கிரீவன் முதலான வானரர்கள் பெரிய பெரிய மலைகளைக் கொண்டு கடலில் இட்டு அணைகட்டிக் கொண்டிருக் கும் வேளையில்,- அணில்கள்., தாங்களும் பெருமானின் பணி விடையில் பங்குகொண்டு உய்வடைவோம் என்று கடலில் மூழ்கி எழுந்து பின்பு மணலில் புரண்டு அணையில் உடலில் படிந்த மணலை உதறித்தள்ளி அணைகட்டும் பணியில் பங்கு கொண்ட வஞ்சகமற்ற அணில்களைப் போன்று நான் பெருமா னுக்குச் செய்யும் பணிவிடையில் பங்கு பெற்றேனில்லை. மரங் கள் போன்ற கடியதீய நஞ்சத்தனனை, வஞ்சகனை அடியேன் ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்கு சிந்தையாலும் கூட அடிமை யாகாமல், அவனருளுக்கு ஆளாகக்கூடிய எளிய நிலையில் வருந்துபவனயிருக்கின்றேன். 27

112 வானுலகோரும் அறிந்து கொள்ளற்கரியனை ஒளி பொருந்திய எம்பெருமான், 'கஜேந்திரன்' என்னும் களிற்றுக் கருளிஉதவுவான் வேண்டி, செந்நிறத்த ஊனையே உண்டு வளருவதும், அவ் யானையைக்கௌவியிருந்ததுமான முதலை மேல் பெருஞ்சீற்றங்கொண்டு கடிதில் வந்தேகினார். நான் பின்பற்றக் கூடிய பெரிய அரிய செயல் உள்ளதோ? நாயைப் போன்ற எனது இழி நிலையினைக்கண்டும் அகலாமல் அருளும், நம் எம்பெருமானுக்கு அடிமைப்பணி செய்து பயன்பெற்று உய்வைப் பெறாமல் யாது காரணம் கொண்டு பிறப்பெடுத்துள் ளேனோ? அறிந்தேனில்லையே! 28

113 நான் தங்கி வசிப்பதற்கென நிலையான ஒரு ஊரை உடையவனில்லை. பெருமானின் நிவேதனத்திற்குத் தேவை யான தானியம் விளைவிக்கவும் நிலம் பெற்றுள்ளவனில்லை! இப்பெரும் நில உலகில் உறவினரும் யாரும் இல்லை. உன்தன் திருவடிகளைத் தஞ்சமெனப் பற்றியுள்ளேனில்லை. பரஞ்சோதி யுருவான பரமமூர்த்தியே! மேகவண்ணத் திருமேனியனே!

கண்ணபிரானே! அரங்கப்பெருநகரில் அருளும் அண்ணலே! அரங்கனே! உன்னை கதறிக் கூவி அழைப்பவனாயுள்ளேன். ஐயனே! எனக்கு உதவியாளன் உன்னைத்தவிர்த்து வேறு யாருளர்? 29

114 திருவரங்கப்பெருநகரில் அருளும் பெருமானே! தவமியற்றுபவர்களில் நான் சேர்ந்தவனில்லை. செல்வந்தர்களிலும் சேர்ந்தவனில்லை. பயனற்ற உப்பு நீரைப்போன்றிருப்பதால், என்னைச்சேர்தவர்கட்கும் அன்புடையவனாயில்லை. தாம்பூலம் தரித்த சிவந்தவாயையுடைய வனிதையர்களுடன் இருந்து பெருங்குற்றவாளியானேன்.-இவ்விதம் பயனிலாத செயல்களையுடைய என்னால் நீ எனக்கு நல்கிய பிறப்பு பயனற்றதாகவே ஆயிற்று. 31

115 வண்டுகள் ஒலியெழுப்பும் சோலைகளால் சூழ்ந்து எழில் மிகு தோற்றத்துடன் காட்சி தரும் திருவரங்கத்திருத்தலத்தில் முகில் கூட்டத்திற்கிணையான திருமேனி கொண்டுள்ள கண்ணபிரானே!, உன்னைக்கண்டு பெற்று மகிழ்வுறும் வழியேதுமறியாத மனிதர்களில் இழிமகனாயுள்ளேன். அவ்வாறிருந்தும் பிடிவாதமாக மூர்க்கனாய் உன்னை நண்ணியுள்ளேன். 32

116 பெருமானே! திருவரங்கநாதனே!, சிந்தனை, செய்கை, சொல்-ஆகிய மூன்றிலும் மெய்யைத் தவிர்த்துள்ள நான், பிரிந்து நீண்டுள்ள கூந்தலையுடைய நங்கையர்பால் மோகித்திருந்து அல்லலுற்று, பொய்களையே சேகரித்துள்ள நாணமற்றவனாய், அனைத்தையும் அறியும் அண்ணலான நின்னருகே உன்றன் திருவருள் பெறும் நிமித்தம் ஆசைமிகக்கொண்டு வந்து நிற்கின்றேன். நான் எப்பொழுதும் பொய்யனே. 33

117 அனைவரது அகந்தன்னிலும் உறைந்திருக்கும், பக்தர்கட்கன்பனான உன்னை, நெஞ்சால் நினைவதற்குரிய அறிவு சிறிதுமில்லாதவனான நான்கள்ளமனத்தினனாய் அடிமை வேடம் புனைந்து, எல்லோருடைய மனதிலும் உள்ளதை உள்ளவாறு, கூடவே இருப்பவன் போல் அறிந்துகொள்கின்றாய் என்ற வெட்கம் கொண்டு, உனது திருக்கோயிலை விட்டகன்று சென்று நீ மன்னியிருக்கும் என் நெஞ்சினுள்ளேயே விலா

எலும்பு முறியும்படிக்கு, நான் உன்னையும் வஞ்சித்ததாக எண்ணி நகைத்து நின்றேனே! 34

118 மாவலிபால் சென்று ஈகை நீர்பெற்ற அந்தநாளிலே, உலகெலாம் தாவி பிறர் உரிமை பெறாவண்ணம் அளந்து கொண்ட என் தந்தையே!, உன்னைத் தவிர்த்துப்பிற இளந் தெய்வங்களை நான் சேவித்து வணங்குபவனில்லை. இது உறுதி செங்கமலக் கண்ணனே!எனது ஆன்மாவாயிருப்பனே! அமுதமா யினிப்பவனே! எனது அருமையான உயிருக்கிணையான என் அப்பனே! உன்னைப் பெறுவது தவிர்த்துப் பிறபலனை நான் கருதுவேனல்லேன்.-அஃது நேருமாகில்-, நான் மேன்மேலும் மீள்வதென்பதில்லாத பாவியேனுவேன். 35

(பனுவல் 36-ன் உரைகண்ணு ! தலைப்பில் உள்ளது)

119 வெள்ளப்பெருக்கு மேன்மேலும் பெருகி வருவதால் கலங்கித் தெளிவற்றிருப்பதான காவிரி நீரினுல் சூழ்ந்து விளங்கும் திருவரங்கினுள்ளே பேரொளியுடன் திகழும் திரு வரங்கன், தானே என்னைக்காத்தருளும் தந்தையும் தாயும் ஆவன் என்னும் எண்ணத்திலிருக்கின்றேன். இது உண்மையன் றோ? அவன் எனக்கு அருள்பவனாயிற்றே அங்ஙனமிருந்தும எனக்கு உதவியாளனுன அவ்வரங்க நகர்ப் பெருமான், என் மீது அன்பும் அருளும் கொண்டு இவன் நம் அடியவன், நம் அருளுக்குரியவன் என்று எண்ணி அருளினான் இல்லையே ! இது மிகக்கொடுமையே. 37

120 காவிரிப்புனலால் சூழ்ந்த திருவரங்கத்தில் அருளும் சுவாமியே ! -நீ-, மேன்மையான பயன்களைத்தன்னை விட்ட சுற்றி, உண்மை நிலையை முழுவதும் உணர்ந்து, பிறவிப் பயனுக்கான நெறிமுறைகளைக் கேட்டு ஏற்றுக் கொண்டு ஐம் பொறிகளை அடக்கி வசப்படுத்தி அகத்தினுள் இருத்தி, தலை மயிரைமழித்து, உனது திருக்கோயிலின் முன்னே நின்றிருக் கும் வாழ்வைப் பெற்றவரான, சரணுகதியைக் கடைபிடிக்கச் சோம்பியிருப்பவர்களுக்கு அருள் நல்குவாய் என எண்ணுகின் றேன். இப்பாசுரம் ஸ்ரீமத்பகவத்கீதையில் சரமச்லோகம்போல் இப்பிரபந்தத்தில் முக்கியமான பாசுரம் எனவும் மேலும் இது

சரணாகதி தத்துவம், அதன்பலன் திருஎட்டெழுத்து, துவயம் ஆகிய மந்திரங்களின் பொருள்களை விளக்குவதாக உரையில் காண்கின்றது. விரிவான உரையை முன்னோர் உரையிற் கண்டு தெளிக- 38

121 திருமுடியில் திருத்துழாய் மாலையை அணிந்து சேவை தந்தருளும் திருவரங்கனே! மிக-மிகத்தாழ்ந்த குலத்தவரானாலும், இணைந்தே இருக்கும் திருவடிகளைப் பெற வேண்டி சரணமடைந்திருப்பவரை, உனது அடிமைப்பணி பண்ணுவதில் குலம் குலமாய் வராதவரும், உன்னுடைய பரத்துவ நிலையையுணராதவருமான, அடியவர்களை, நான்குமறைகளை ஓதியுணர்ந்துவர்களைக் காட்டிலும், நீ உன்றன் அன்புக்குரியவராக்குவாய் போலும்! பெருமானின் திருவருள் பெற்றுய்ய குலம் ஒருதடையில்லை என்பது இப்பாசுரத்தின் கருத்து. இதே கருத்தினை 42, 43, பாசுரங்களிலும் பகர்ந்தருள்வார். நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி குலந்தாங்கு 3-7-9 என்னும் பாசுரத்திலும் இதனையொத்த கருத்தினைக் காணலாம். 39

122 திருமாமகளென்னும் பெரிய பிராட்டியாரையும், ஸ்ரீ வத்ஸமென்னும் மறுவையும் திருமார்பில் பெற்றுத் திகழும் திருவரங்க நகருறை திருவரங்கநாதனே!, எந்த ஒரு உயிரியாயினும்,- ஜீவராயினும்-, திருவுடன் சேர்ந்திருக்கும் உன்னை தங்கள் மனந்தனில் திகழுமாறு பெற்று, உறுதியான எண்ணங் கொண்டிருப்பாராகில்,- அவர்கள்-, கொடிய செயல்களால் பிறர் அஞ்சும் படிக்கு இப்பெரிய பூமியில் சில உயிர்களைக் கொன்றும், மற்றும் சிலவற்றை எரித்தும், சேர்த்துக்கொண்ட பாவங்களை,- தீவினைகளை உடையரானாலும், அவர்கள் செய்த அப்பாவச் செயலுக்கென உயிர்பெற்றிருப்பாரல்லர்.-கடுவினைகளையே இயற்றியவராயினும் பெருமானைத்தஞ்சமடைபவர்கள். அவன் மன்னித்தருள்வதால் வீடுபேற்றினை எய்துவர் என்பது கருத்து. இங்கு, குன்றனையகுற்றம் செய்யினும் என்னும் முதல் திருவந்தாதி பாசுரம் உன்னுதற்குரியது-. 40

123 சுவர்க்கம் முதலான உலகங்களிலுள்ள இமையவர்களாலும் அறிந்துணர்தற்கரியனாய் பரமபதத்தில் வீற்றிருந்

தருள்பவனே!, என்றும், தேன்பெருகும் திருத்துழாய் மாலையை முடியில் தரித்திருப்பவனே! என்றும் அழைப்பவர்கள், தாங்கள் இழிதொழில் செய்து, பிறரையும் அத்தொழிலைச் செய்விப்பாராலும், முன்னர் உரைத்தபடி எம்பெருமான் பெயரைச் சொன்னதால், அவர்கள் உண்ட உணவு மிகுதியை உண்பதற்கு அளிப்பரேல், அன்றே தூய்மை உண்டாகும்.- இழிதொழில் செய்பவரானாலும், பெருமான் திருவரங்கன் பெயரைச் சொல்லி யழைப்பதால் புனிதம் பெற்றவராவார். அவர்கள் உண்டு மிகுந்த உணவை உட்கொண்டவர்களும் தூய்மை பெற்றவ ராவர் என்பது கருத்து-. 41

124 ஏழுமதிள்களால் சூழ்ந்து தோன்றும் திருவரங்கத் திருக்கோயிலில் அருள்நல்கும் திருவரங்கனே!- நீ மறையோதியவர்களை நோக்கி,- குறையேதுமின்றி வழி-வழியாய் வருகின்ற குலப்பிரிவுகளிலே பலவானவற்றில் நான்கு வேதங்களையும் பயின்றோதியிருக்கும் வேதியர்களே!, இழிந்தகுலத்தினராயினும், அவர்கள் எமக்கு அடியார்களாயிருந்து, எனக்குத் தொண்டு செய்பவர்களாயிருப்பராகில், நீங்கள் அவர்களை வணங்குவீராக. அவர்கட்குத் தேவையானவற்றைக் கொடுத்து உதவிடுவீர். அவர்களிடமிருந்து அறிவுரைகளைப் பெற்றிடுவீராக.- என்றிவ்வாருக, அவர்களை உன்னடியார்களை-, உனக்கிணையாகவே எண்ணிப் போற்றும்படிக்கு உபதேசித்துள்ளனையோ என எண்ணுகின்றேன். 42

125 திருவரங்கப்பெருகநருறை திருவரங்கநாதனே!, ஆறு அங்கம் நான்கு வேதம் ஆகியவனவற்றை நன்கு தெளிவாகப் பயின்று ஓதி, பெருமானடியார்களில் சிறந்தவர்களான, உயர்ந்த மறையவர்களேயாயினும், நின்னையே அடைக்கலமாகப் பெற்றுள்ள உன்றன் அடியார்களை இழிவுபடுத்தி நிந்திப்பார்களாகில், அக்கணத்திலே அவ்விடத்திலேயே, அவ்வளவு உயர்வு பெற்று விளங்குபவர்களே புலையராவர். 43

126 திருவரங்கப்பேரரசே!,- உன்னைக் கண்டு சேவித்துக் களிப்பெய்தும் பொருட்டு, எண்ணிலடங்காத பலப்பல ஊழிக் காலமாக கங்கையைத்தன் சடையில் பெற்றுத்திகழும் சிவ பிரானும், நான்கு முகத்தோனும், நாணம்கொண்டு நின்றிருக்

கும் நிலையில், திருநாட்டிலுள்ள நித்திய சூரிகளும் ஆச்சரியப் பட்டு நோக்கியிருக்கும் போதே, ஆதிமூலமே! என்று உரத்த குரலில் கூவி அழைத்த கஜேந்திரனென்னும் யானைக்கு அருளிய அண்ணலே! உன்னைப் பாதுகாப்பாளனுக எண்ணியிருக்கும் வகை என்னே? 44

127 இறுதிப்பாடலில், இப்பிரபந்தம் குற்றங்குறைவுள்ளதா யிருப்பினும் எனக்கு உதவியருள்பவன் திருவரங்கப்பெருமான் உகப்புக்குரியதாகவே இருக்கும் என்று மொழிகின்றார்

பொலிவார்ந்த வெண்ணிறமான மாடமாளிகைகளைக் கொண்டுள்ள வடமதுரைப் பெருநகரிலே, மிகப்பெரியதாய் கறுத்துக்கொழுத்திருந்த யானையை அழித்து அருள்செய்த கண்ணபிரான், திருவரங்கத்தில் பெருவிருப்புடன் மன்னியிருந் தருள் நல்கும் திருவரங்கநாதனைப் பற்றியதான, திருத்துழாய் மாலை தொடுத்துப் பணிசெய்யும் தொண்டரடிப்பொடியென்னும் எனது மொழியான இத்திருமாலையென்னும் தமிழ்ப்பிரபந்தம் நன்கு அமையாமல் குற்றங்குறை உள்ளதாகக் காணப்படினும் எனக்கு உதவுயாளனுன திருவரங்கன் உகப்புக்குரியதாகவே அமையும். 45



## திருப்பள்ளியெழுச்சி

128 திருவரங்கராஜனே! சுவாமியே! ஆதவன் கீழ்த்திசை யில் கொடுமுடியில் உதித்தெழுந்து தோன்றுகின்றான். இருண்டு அடர்ந்திருந்த இருளும் அகன்றதாயிற்று. வைகறைப் பொழுதாயிற்று பெரியவையான சிறந்த மலர்கள் மலர்ந்து, அவைகளினின்றும் தேன் பெருகுகின்றது வானுலகிலுள்ள விண்ணவர்களும், மண்ணுலகின்கணுள்ள மன்னவர்களும் மெதுவாக மேன்மேலும் வந்து நெருங்கி உன்னைச் சேவிப்பதற் காக உன்னெதிரே குழுமியுள்ளனர் இவர்கள் ஏறிச்சவாரி செய்து வந்த ஆண்-பெண்யானைகளின் கூட்டமும், முரசும் எழுப்பும் பேரொலி எல்லாத்திக்குகளிலும் அலையொலியாகவே ஒலிக்கின்றது. தேவரீர் திருப்பள்ளியினின்றும் துயிலெழுந்து சேவை தந்தருளவேணும். 1

129 முதலையின் குகை போன்ற வாயிலுள்ள நஞ்சு உமிழும் வெளுத்த பற்களினால் கௌவப்பட்டுச் சிக்கித்தவித்து மீளுகை பெறமாட்டாமல் அழுது அரற்றி உன்னைக் கூவிய கஜேந்திர னின் பெருந்துயரைப் போக்கி அருள் நல்கியவனே! அரங்கத்தில் அருளும் திருவரங்கனே! கீழ்த்திசையினின்று எழும் காற்றானது செழுமையான முல்லைக்கொடியில்மலர்ந்துள்ளமலர்களைத்தழுவி வீசுகின்றது. மலரென்னும் படுக்கையில் படுத்திருந்த அன்னப் பறவைகள் பனிப்பொழிவினால் நனைந்த சிறகுகளை உதறிக் கொண்டு விழித்துப் புறப்பட்டன. தேவரீர் பள்ளியெழுந்தருள வேணும். 2

130 எல்லாத்திசைகளிலும் பகலவனொளி பரவிக்காண் கின்றது. வானத்திலுள்ள நட்சத்திரங்களின் ஒளியும் மங்கிய தாயிற்று. எங்கும் தண்ணென்று ஒளிபரப்பிடும் திங்களும் ஒளி இழந்தாயிற்று. படர்ந்திருந்த இருளும் விலகியது. பசுமையான சோலைகளின் கணுள்ள பாக்கு மர மடல்களினின்றும் காற்று மிகுந்து வீசுகின்றது. பெருந்திறலும் பேரொளியும் பெற்றுத் திகழும் திருச்சக்கரத்தை அகன்ற விசாலமான திருக்கையில் பெற்றுள்ள திருவரங்கச் செல்வனே! பள்ளியெழுந்தருள்க. 3

131 உயர்ந்து வளர்ந்துள்ள இளமையான எருமைகளின் கட்டை - பிணிப்பை - அவிழ்க்கின்ற ஆயர்களின் புல்லாங் குழலொலியும், எருதுகளின் கழுத்தில் கட்டியிருக்கும் மணி யொலியும் இணைந்து எல்லாத்திக்குகளிலும் பரவி ஒலிக்கின்றன வண்டுகளும் கூட்டம் கூட்டமாக வயல்களில் ஒலியெழுப்பித் திரிகின்றன. இலங்கையர் குலத்தையே வாட்டி வதைத்தழித்த சிறந்த வில்லைப்பெற்ற வானவர்கோனே! தலைவனே! மகரிஷி விசுவாமித்திரரின் வேள்வி காத்து, இறுதியில் நடத்தப்பெறும் அவபிரதமெனும் தீர்த்தவாரி-புனலாடுதல்-நிகழ்வை நடத்தி வைத்த, அயோத்தியில் அவதரித்த எங்கள் அரசனே! திருவரங் கனே பள்ளியெழுந்தருளாய். 4

132 மலர்கள் மலர்ந்திருக்கும் சோலைகளில் உள்ள பறவை களும் சல சலத்து ஒலியெழுப்பின இரவகன்று இருளும் அகன் றது. விடியற்காலையாயிற்று. கிழக்குத் திக்கில் கடலின் அலை யொலி பரவியது வண்டுகள் ஒலிக்கும் பலவகையான மணம்

மிகுந்த பூக்களை மாலையாகத் தொடுத்து எடுத்துக்கொண்டு, திருவடிகளில் பணி செய்வதற்கென அமரர்கள் நுழைந்து வந்துள்ளனர். இலங்கை மன்னன் விபீடணன் ஆராதனை பண்ணி வழிபாடு இயற்றும் திருக்கோயிலில் பள்ளிகொண்டரு ளும் பரம புருடனே! திருவரங்க நகருறை இறைவனே பள்ளி யெழுந்தருளாய். 5

133 அரங்கத்திறைவனே! சுவாமியே! அழகிய பெரிய தேர்களில் காணப்படும் இவர்கள் ஈருறு சூரியர்கள், ரிஷபத்தை வாகனமாகப் பெற்றுள்ள பதினோரு உருத்திரர்கள் மயிலை வாகனமாகக் கொண்ட ஆறு முகங்களைக் கொண்டுள்ள சுப்ர மணியன், மற்றும் அரிய பெரிய மலையோ எனஎண்ணும்படிக்கு நின்றன் திருக்கோயில் முன்னே ஆடுவதும் பாடுவதுமாய் உள்ள குதிரைகள் மீதும் தேர்களிலும் வருகிற முருகனது படையானது வெள்ளம்போல் மேன்மேலும் மெதுவாகநெருங்கி வருவதாயுள்ளது. நாற்பத்தொன்பது மருத்துக்களும் எட்டு வசுக்களும் வந்துள்ளனர்., நீர் பள்ளியெழுந்தருளவேணும். 6

134 திருவரங்கநகருறை ரங்காராஜனே!தேவரீர் திருத்தாளி ணைகளைத் தொழுதுய்வதற்கென, எமக்கு சுவாமியான உமது திருக்கோயிலின் முன்னே, கந்தர்வர்கள், வித்யாதரர் யக்ஷர் கள் ஆகியோர் நெருக்கத்தினாலே மோகங்கொண்டு மயங்கிய வராயினர். வான்வெளியில் விண்ணவர் குழாமாகக் காண்கின் றனர். அருமையான தவமியற்றும் ஏழு முனிவரும், மருத்துக் களும் சூழ்ந்துள்ளனர். இந்திரன் தன் யானை ஐராவதத்தின் மேல் ஏறிவந்துள்ளான். இவ்விதம் வானம், பூமி எங்கணும் யாவரும் வெற்றிடமின்றிக் கூட்டமாக காண்கின்றனர். பள்ளி யெழுந்தருள்வாய் பரமனே !

135 ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்டிருந்தருளும் பரஞ்சுடரே பக்தியுடன் அருகம் புல் சேர்க்க. மணம் மிகுந்த விண்ணுலகில் வதிவோரும், நீர், கண் மலர்ந்தவுடன் காண்பதற்குத் தகுந் தனவான பெரியநிதிகள். கபிலையென்னும் காமதேனு, ஒளி வீசும் கண்ணாடி ஆகிய பூசனைக்குரிய கருவிகளுடன், உயர்வு டைய முனிவர்களும், பாடுவதற்கு, தும்புருநாரதரும் அருகி

வந்துள்ளனர். சூரியனும் இருளகலுமாறு ஒளி விளங்க உதய மானான். வானத்தினின்றும் இருள் அடியோடு அகன்றதா யிற்று. பள்ளியெழுந்தருளவேணும். 8

136 அரங்கத்தம்மா! திருவரங்க நகர்ப்பெருமானே !, முழு இரவிலும் குற்றமிராததான சிறிய பேரிகை, ஓர் கம்பியுள்ள வாத்தியம், மத்தளம், வீணை, புல்லாங்குழல்,-ஆகிய இசைக் கருவிகளின் முழக்கத்துடன், திசைகளிலெல்லாம் இசையொலி பரவும் படிக்கு, கின்னரர், கருடர்கள், கந்தர்வர்கள்-ஆகியவர் கள் உன்திருவடிகளை வணங்கித் தொழுவதற்கென பாடல்களை பாடியவண்ணமிருக்கின்றனர்- அவ்விசையொலியைக் கேட்ட வர்களான-பெருந்தவமுனிவர்கள், வானவர், சாரணர், யட்சர் கள், சித்தர்கள், ஆகியோர் மயங்கிமோகித்தவராயினர். இவர் களனைவர்க்கும் நீ பகல் திருவோலக்கத்தை அருள்வதற்குப் பள்ளியெழுந்தருள்க. 9

137 காவிரியால் சூழ்ந்துள்ள திருவரங்கத்தின் பெருமா னே!, மணம் பொருந்திய தாமரை மலர்கள் மலர்ந்தனவாயின ஞாயிறும்,ஒலி செய்யும் கீழ்க்கடலினின்றும் உதித்ததழந்தான் சுருண்ட கூந்தலையுடைய, மெலிந்த இடையையுடைய நங்கை யர், தங்கள் ஆடைகளையும் பிழிந்து உதறி உடுத்திக்கொண்டு கரையேறினர், உனது திருமுடி முதலானவற்றிற்கு ஏற்கும் படி யாக, தொடுத்த திருத்துழாய் மாலையையும் அவற்றிற்கான பூக்கூடலையும் கொண்ட தோளையுடைய தொண்டரடிப் பொடி யென்னும் உமது அடியனை என்னை, இவன் நம் அருளுக்கு ஏற்றவன் உரியவன் என்று அருள் செய்து உன் அடியார் களுக்குத் தொண்டனாக்க அருள வேணும். பள்ளி எழுந்தருள் வாய் திருவரங்கநாதனே ! 10

---

பாண்பெருமாள் என்னும் சிறப்புப்பெயர் பெற்றுள்ள திருப் பாணாழ்வார் திருவரங்கத்தம்மானைப்போற்றி ஏத்தி அமலனாதி பிரான் என்னும் பிரபந்தம் அருளியுள்ளார். இதன் உரையினை ''பழமறையின் பொருள்'' என்னும் தலைப்பில் குறித்துள் ளோம்.

கலியனென்னும், ஆலிநாடனென்றும் சிறப்புப்பெயர்கள் பூண்டு திகழும் திருமங்கையாழ்வார், திருவரங்கச்செல்வனை, தனியே ஐந்து பதிகங்களிலும், மற்றும் நான்கைந்து தனிப்பாடல்களிலும் போற்றிப் பரவுகின்றார்- இவர் இயற்றியருளிய பெரிய திருமொழியை அறிவுதரும், திருமொழி என்று பிரபந்த சாரம் போற்றியுரைக்கும். சுவாமி தேசிகன் வையமெல்லாம் மறை விளங்க வாள்வேலேந்தும் மங்கையர் கோன் என்று அதிகார ஸங்க்ரகத்தில் இவ்வாழ்வாரைப் போற்றி மொழிவார்.-

138 திருவேங்கடத்துறை எழில் கோள் சோதியான, அலர் மேல் மங்கையுறை மார்பனைப்பாடும் பதிகத்தில் பாற்கடலில் போன்று திருவரங்கத்திலும் பள்ளிகொண்டிருப்பவன் என்று ஸ்ரீரங்கநாதப்பெருமானை நினைவு கூர்ந்து ஏத்துகின்றார் பெரியதிருமொழி-1-8-2

139 நாயகியின் தாய் வருந்தி இரங்கி உரைப்பதாக வருணிக்கப்பெறும் திருவாலியம்மான் பற்றிய பதிகத்தில், ''திருவரங்கத்துறையுப் இன் துணைவன்'' திருவரங்கச் செல்வனைப் பேசுவார் பெ. தி. 3-7-6-

பெரிய திருமொழி சதகம் 5-4-,5 ,6-,7-,8, பதிகங்கள் மொத்த பாசுரங்கள்-50

பதிகம்-4

140 உந்திமேல்நான் முகனைப் படைத்தான் உலகுண்டவன்
எந்தை பெம்மான், இமையோர்கள் தாதைக்கிடம் என்பரால்
சந்தினோடு மணியும் கொழிக்கும் புனற் காவிரி,
அந்தி போலும் நிறத்தார் வயல் சூழ்தென் னரங்கமே. 1

141 தன்கொப்பூழ் கமலத்தில் பிரமனைப் படைத்தவனும், உலகை ஊழிக்காலத்தில் தன் திருவயிற்றில் வைத்துப் பாதுகாத்தருளியவனும், எனக்கு எந்தையாயிருப்பவனும், இமையோர்கள் தலைவனுமான எம்பெருமானுக்கு, சந்தனமரங்களையும், மணிகளையும் கரையோரங்களில் ஒதுக்கித்தள்ளும் வெள்ள நீரையுடைய காவிரியால் சூழ்ந்திருப்பதும், மாலைக்காலம் போன்ற நிறமுள்ள தானியங்களைக் கொண்டுள்ள வயல்களால்

சூழ்ந்துள்ளதுமான, தென்திசையிலுள்ளதும் அழகானதுமான ஸ்ரீரங்கமே உறைவிடமென்பார். 1

142 உலகம் யாவற்றையும் உட்கொண்டு தன் திரு வயிற்றில் வைத்துப் பாதுகாத்து ஓர் ஆலிலையில் பள்ளி கொண்டிருந்தமாயனும், நீண்ட மணிமுடிகளைக் கொண்டபடங் களையுடைய ஆதிசேடனைப்படுக்கையாகக் கொண்டுள்ளவனு மான பெருமானுக்கு உகந்ததலம், சுமங்கலி மங்கையரின் கூந்தலில் சூடிய மலர் மாலைகளையும், அம்மங்கையரின் அகன்ற கொங்கைகளில் அணிந்த சந்தனத்தையும் சேர்த்துத்தள்ளிக் கொண்டுவரும் வெள்ள நீரால் சூழ்ந்துள்ள தென்னரங்கம் என்பர். 2

143 வண்டுகள் பாடித்திரிவதும். தேன்பெருகும் வெள்ள நீரைக்கொண்ட காவிரியாறு சூழ்ந்திருப்பதும், வானத்திலும் மணம் பரப்பும் சோலைகளைக் கொண்டு எழில்மிகுந்து விளங்கும் தென்னரங்கமே முன்பு மாவலியிடம் சென்று உலகையெல்லாம் அளந்துகொள்வதற்கு கையில் ஈகை நீரைப்பெற்ற திருவாழி யைப் பெற்றுள்ளவனும், குறளுருவில் வந்தவனுமானவாமன னுறையும் இடம் என்று மொழிவர். 3

144 கொடிய பெரும் போரைத்தான் அழிந்து படும் பொருட்டு மூளச்செய்தவனும், பெரும் வலுவும் வாளையும் பெற்றிருந்தவனுமான இராவணனின் இலங்கை நகரமே அழிவுறும்படிக்கு, நாண்பிடித்து வளைக்கப் பெற்ற வலிமை வாய்ந்த வில்லினை அகன்ற திருக்கையில் கொண்டு சேவை தரும் ஸ்ரீராமபிரானேயான பெருமானுக்குரிய திருத்தலம், துளைகளையுடைய கையை உடைய யானைகளின் தந்தங்களை யும், அகிற்கட்டைகளையும், முன்னே தள்ளிக்கொண்டு வரும் காவிரியால் சூழ்ந்து தோன்றுவதும், செல்வம் மிகுந்து விளங் குவதுமான தென்னரங்கமே என்பர். 4

145 தேவர்கள் தலைவனான பிரமனும் அவன் படைத்த ஏழுலகின்கண்உள்ள மக்கள் யாவரும் வணங்கி வழிபடுமிடமா யிருப்பதும், செம்பொன் மதிள்களால் சூழ்ந்துள்ளதான தென் திருவரங்கமே, வாசனை வீசும் கேசத்தையுடை மண்டோ தரியின் அன்புக்கணவனான இராவணன் மேலுலகம் செல்லு

மாறு சீற்றங்கொண்டு அம்பெய்த ஸ்ரீராமபிரானின் இடம் என்றுரைப்பர். 5

146 குலையுடன் தோன்றும் வாழை மரங்களின் தோட்டங்களின் உள்ளேயும் நுழைந்து முன்னே அவற்றைத் தள்ளும் அலையையுடைய நீர் வெள்ள மிட்டோடும் காவிரியால் சூழ்ந்துள்ள அழகுமிகு தென்னரங்கமே, புலை வேடத்திற்குரிய ஆடையை அணிந்து அகன்ற நிதம்பத்தைப்பெற்றிருப்பவளும், தாயெனவே எண்ணுமாறு பாலூட்டியவளுமான வலியபேய்ச்சி பூதனையின் உயிரை மாய்த்த பிரான் கண்ணனுக்கு உகந்த இடம் என்று இயம்புவர். 6

147 மேகங்கள் தங்கும் வண்ணம் உயர்ந்ததான மாட மாளிகைகளைக் கொண்டதும். நீண்டு எழும் அகிற்கட்டையின் புகையுடையதும், மென்மையாளரான வேதம் பயின்றவர்கள் இயற்றும் நல்லமந்திரச்சொற்களாலான வேள்வியினின்றெழும் புகையுடையதும் மணங்கமழ்வதுமான தென்னரங்கமே, கஞ்சனையும், கடிய கொடிய சாணூரன் முதலான மல்லர்களையும் மாய்த்து, சகடாசுரனையும் காலினால் உதைத்து வெற்றி கொண்டவனான சக்கரக்கையன் கண்ணன் வாழ்ந்தருளுமிடம் என வழங்குவர். 7

148 சிறந்த அறிவாற்றல், தத்துவ ஞானத்துடன், தேனும் பாலும் கலந்தது போன்று ஆன்மகுண நிறைவை உடையவர்கள் சேர்ந்து இருக்கும் தலமாகவும், விண்ணோரும் மண்ணோரும் ஊரெங்கும் கூடியிருந்து வணங்கி வாழ்த்தும் இடமான தெனனரங்கமென்னும் திருத்தலமே, மீன், ஆமை, வராகம், சிங்கம், வாமனன்-ஆகிய உருவில் வந்து உலகுக்கு உதவியருள் செய்த பெருமானும் உலகனைத்துக்கும் தனித்தலைவனுமான திருவரங்கப்பெருமானின் இடம் என்று கூறுவர். 8

149 எக்காலத்தும் வெகுதொலைவிலிருப்பவனென்று எண்ணப்படும் பரமனும். பெரியனயாவற்றினும் மிகப் பெரியனாய் விளங்குபவனும், அணுவினும் அணுவாயிருப்பவனும், இவ்விதமாகப் பெரிய அரியமாயங்கள் செய்வதில் வல்லவனுமான எம்பிரானுக்கு உரித்தான திவ்வியத்தலம், மூங்கிலிலிருந்து

உதிரும் முத்துக்கள், இரத்தினங்கள்,மணிகள் ஆகியனவற்றை எங்கும் நிறைக்குமாறு வெள்ளப்பெருக்கையுடைய காவிரியாற்றாலும், உயர்ந்த பொன்னாலான மதிள்களாலும் சூழ்ந்து விளங்குவதுமான பொலிவார்ந்த தென்னரங்கமே என்றியம்புவர். 9

## பயன்பகரும் பாசுரம்

150 தாமரைமலர்மங்கை மன்னியிருக்கும் திருமார்பையுடைய திருவரங்கனின் திருவரங்கத்தலைத்தினைப் போற்றி, நிலைத்த கல்லாலான மதிள்சுவர் உள்ள திருமங்கை நகர மாந்தரின் தலைவரான ஆழ்வார் கலியன் சொற்களாலான (4+4+2) ஆகிய நல்லிசையுடன் சேர்ந்த பாசுரங்களை சேர்த்துப் பயின்று ஓதவல்லர்கள் உலகை ஆள்பவராகி திவ்விய வடிவம் பெற்று வானுலகாளும் வாய்ப்பினையும் பெறுவர் 10



பதிகம்-5

151 சிறந்ததான வனமாலையையணிந்து மேகவண்ணத்தனுயிருப்பவனும், வானவர்க்குப் பாதுகாவலனுயிருப்பவனும், ஒலியெழும் அலைகளையுடைய நீரைக் கொண்டுள்ள கடலில் தோன்றிய திருமாமகளைப் பெற்றிருப்பவனுமான பெருமான்-திருவரங்கன்-, என் மகளுக்குத் தோற்றுவித்த இன்னல்களை நான் எங்ஙனம் சிந்திக்கக்கூடும்? என் மகளான இவள், எவர்க்கும் அஞ்சாதவளாய்-மாலவன் மன்னியிருந்தருளும்-, வேங்கடமே! வேங்கடமே!! எனக்கூவுகின்றாள். அவளது இந்நிலை வருத்தங்கொள்வதாயுள்ளது. என் மடியில் அமர்பவளாயில்லை. வாளுக்கிணையான கூரிய கண்களைக் கொண்டுள்ள இவள் உறங்குவதையும் மறந்தவளானாள். 1

152 திருவரங்கனிடத்தில்-, காதல் மிகக்கொண்டு விளங்குவதால், அகன்ற மடியை உடைய என் மகளுக்கு இடையில் ஆடை பொருந்துவதாயில்லை. அழகார்ந்த பொன் வளைகளும் அவள் கைகளில் தங்குவதாயில்லை. ''பெருமானே இத்தகைய

அவள் நிலைக்கு நான் யாது செய்வேன்? விலையாளாக இல்லாத அடிமையான என்னை விரும்புகின்றனையோ? விரும்ப வில்லையோ?'' எனப் பேசுகின்றாள். திருமெய்ய மலையிருந் தருள்பவனும், விண்ணவர் நாயகனுயிருப்பவனும், ஏழு சால மரங்களை அம்பால் துளைத்து வெற்றிபெறும் வில்லாளனுமான ஸ்ரீராமன்,- அரங்கத்தழகன்-, என் மகளைப் படுத்திய பாட்டை நான் எவ்விதம் சிந்திக்கக் கூடும்? 2

153 அன்னையருக்கினையான அணங்குகளே! காண்பீராக-மானுக்கிணையாக மெதுவான பார்வையையுடைய என் மகள் தனது வாள் போன்ற நீண்ட கண்களினின்றும் கண்ணீரைப் பெருக்குகின்றாள். அவள் கைவளைகளும் நழுவுகின்றன. தேன் பெருக்கும் மணமுள்ள திருத்துழாய் மாலையின்உயர்தனித் தன்மையைச் சொல்லிய வண்ணம் கண்ணுறங்காமலிருக் கின்றாள்., காடு சென்று வரும் ஆயனும், காவல் காக்கப் பட்டிருக்கும் இல்லங்களில் புகுந்து தயிரும் நெய்யும் பருகு வதற்கென நந்தகோபனில்லத்தில் வளர்ந்தவனுமான கண்ணன் என் மகளைச் செய்தவகையைஅறிகின்றேனில்லை. 3

154 நற்குணம் மிகுந்துள்ள நங்கையீர்!, மற்றும் அண்மை யிருக்கும் மங்கைமீர்! தாயான நான் சொல்லும் சொல்லை, என் மகள் கேட்பவளாயில்லை தன் தோழியர்களுடனும் சேர்ந்து மகிழ்ந்து உரையாடுவதில்லை. உடல் வெப்பம் அகல்வவற்கு அளித்த சந்தனத்தையும் தனது அகன்ற, மென்மைமிகுந்த தனங்களில் பூசிக்கொள்வதில்லை. என் நாயகன் எம்பெருமா னுறைந்தருளும் திருவரங்கம் எங்கே? என்று வினவுகின்றனள். பேய்ச்சி பூதனை மாண்டொழியும்படி அவள் கொங்கையைச் சுவைத்தவனும், உலகினை உட்கொண்டவனும், பெருவயிற்ற னும், மாமாயச் செயல்களில் வல்லவனுமான பெருமான்-திருவரங்கன்-, என் மகளைச் செய்தனவறறை நான் மதிப்பீடு செய்பவளாயில்லையே! 4

155 அம்மையீர்!, என் மகள் அணிகலன்களையும், சந்தனத் தையும் தன் முலைத்தடங்களில் அணிவதில்லை. ஒன்றுக் கொன்று இணையாய்த் திகழும் மீனையொத்த தன் கண்களில் மை தீட்டுவதில்லை. நாம் கொடுக்கும் பூவையும் சூடிக்கொள்

வதில்லை. தன் காதலனின் கருத்தினையும் சிறிதும் உணர்ந்த வளாயில்லை. ''என் எம்பெருமானின் திருவரங்கம் எங்கே உள்ளது?'' என்று கேட்கின்றாள். அப்பொழுதே அலர்ந்த தாமரையிற்றோன்றிய பிராட்டியின் நாதனையும், நாம் அறியும் நிலையில் திருவாய்ப்பாடியில் வளர்ந்த, நற்குணமேமிகுந்துள் ளவனுமான கண்ணன்-ஸ்ரீரங்கநாதன்-, ஆண்மை மிகுந்த வனாய் என் மகளைச் செய்தனவற்றை நான் அறியவில்லை. 5

156 தன்நாதன், தான் அணிந்துள்ள பூந்தாதுகள் நிறைந்த வனமாலையில் ஒரு சிறு பகுதியை எனக்குத் தரமாட் டானோ? என்று சொல்லியே இளைத்தளவளானாள். அவளது இந்நிலையினை மாற்றுவான் வேண்டி நாம் ஏதேனும் மொழிந் தோமாகில் அதற்குரிய மாற்றம் உரைக்காதவளாய், ''என் எம்பெருமான் திருவரங்கம்'' என்று சொல்லிக் கொண்டே தன் பிடிவாதத்தை விடுபவளாயில்லை. பூமேல் மாதான திருமா மகள் நாயகனும், முன்பு ஆயர்பாடியில் வளர்ந்துற்ற காலை குடங்களைக் கொண்டு ஆடியவனும், பரிமுகனாய் வந்து மதுகைடபர்களை சம்ஹாரம் பண்ணியவனும். பஞ்சபாண்ட வர்க்கு உதவியாளனாய் அத்தினாபுர நகர்க்குத் தூதனாய்ச் சென்றவனுமான ஸ்ரீ கிருஷ்ணன்-திருவரங்கநாதன்-, என் மகளுக்கு இழைத்தனவற்றை எங்ஙனம் உரைக்கவல்லேன்? 6

157 கச்சினால் கட்டப்பட்ட இளங்கொங்கைகள் எழில்மாறி பயலை நிறம் தோன்றிய வகையை நினைப்பவளாயில்லை. மோகந் தெளிந்தது நன்னினைவில் இருக்கும் நேரத்திலும் பெரியோனான ஸர்வேச்வரனின் பெயரைத் தவிர்த்து வேறு எதையும் மொழிபவளாயில்லை. இவ்வாறான பெண்ணைப் பெற்றுள்ள நான் யாது செய்வேன்? மணம் மிகுந்த மாலையை அணிந்திருப்பவனும், குளிர்ச்சி பொருந்திய திருக்குடந்தை நகரில் கிடந்தருள்பவனும், பாண்டவர்களின் நன்மைக்காக போர்க்களத்திலே தேர் நடாத்தியவனுமான பார்த்தசாரதிப் பெருமான் என் மகளைச் செய்தனவற்றை நான் எவ்விதம் இயம்புவேன்? 7

158 உறவினருடன் பேசுபவளாயில்லையே என்று பலரும் பேசும் பழிச்சொல்லுக்கு ஆளாகும் நிலையேற்பட்டுவிட்டது.

மறப்பதின்றி எல்லோர் முன்னிலையிலும் ‘‘மாயச்செயல் புரிபவனே!, திருமகள் மார்பனே!’’ என்று சொல்லியவாறே இருக்கின்றனள். பிறரொருவர்குமில்லாப் பெயரைப் பெற்றி ருப்பவனும், பெண்ணைத் தன் வயப்படுத்திக் கொண்டவனும், அவனியை ஆள்பவனும், விண்ணார்களின் அறவழிக்குரிய பணி களைப்பணிக்கின்றவனும் ஆன பெருமான் என்மகளுக்குச் செய்தனவற்றை அறிய முடியவில்லை. 8

159 விளையாட்டுப் பொருள்களான பந்தையம், கழற்சிக் காய்களையும் எடுத்து விளையாடுவதில்லை. தான் வளர்க்கும் பசுமை நிறத்ததான கிளிக்கும் பாலூட்டுவதில்லை. மரப்பாச்சி பொம்மையையும் விரும்புவதில்லை எந்நாதன் திருவரங்கன் வந்தானோ? என்றும், வரமாட்டானோ என்றும் சொல்லி தன் கைவளைகள் நழுவிடும் நிலையில் நிற்கின்றாள். ரிக்வேதமய மானவனும், பௌடியமென்னும் பாகத்தால் அறியப்பட்ட வனும், ஐந்து தீ வளர்க்கும் அறநெறிகளால் ஆராதிக்கப்படு கின்றவனும், ஸாமவேதத்தின் பொருளாய்த்திகழ்பவனும், மேற்சொன்ன வேதங்களை வெளிப்படுத்தி ஓதி மகிழ்ந்தவனு மான பெருமான் என்மகளைச் செய்தனவற்றை தெரிந் தேனில்லை. 9

## பயன்பகரும் பாசுரம்

160 மீன்கள் புரண்டு செல்லும் கழனிகளையுடைய திருவரங்கத்தம்மான் தன்னை நாயகியாக ஏற்றுக்கொண்டரு ளினனில்லையே என்று சிந்தித்தவளாயிருந்த கருநெய்தல் போன்ற அழகான கண்களையுடைய தலைவியொருத்தியின் பெண்மையெழில் குறைவைக்குறித்து அத்தலைவியின் தாய் வருந்தி மொழிந்ததான மொழிகளை, போரில் எதிர்த்து வரு வோர்க்கு காலன் போன்று தோற்றமளிப்பவரான, வேலாயுதத் தைப் பெற்று பரகாலனென்னும் பெயர் கொண்டு கலிபயத் தைப் போக்கும் வல்லமை பெற்றவரான திருமங்கையாழ்வார் வருணித்து இயற்றிய மாலைபோன்றதான பாடல்களைப் பயிலும் வல்லமை பெற்றவர்கள் மாலைகள் அசைந்தாடும் வெண்குடைக்கீழமர்ந்து இவ்வுலக்குஅரசராகி,பரமபதத்திலும்

பகவானுக்குப் பணிவிடை பண்ணும் பேறு பெற்று வாழ்பவ ராவார். 10



பதிகம்-6

161 பெரிய துதிக்கையைப் பெற்றுத்திகழும் இளமையுள்ள யானை போன்றவனும், பாற்கடலில் சயனித்திருந்தவனும், கரிய நீலமணி வண்ணத்திருமேனியனும், மையுடன் சேர்ந்த நிறம்போல் மரகதம் போன்றவனும், மறையை உரைத்து ஓதியவனும், திருமாமகள் கேள்வனும், எனக்கு இறைவனும், எனக்கு எக்காலத்தேயும் இனியனாயிருப்பவனும், மழையைத் தடுத்து நின்று ஆயர்களையும் கறவை கன்றுகளையும் காத்தருளியவனுமான கண்ணன் எம்பெருமானை, காவிரி நீர் அணி செய்யும் அழகார்ந்த திருவரங்கத்தலத்தில் கண்டு கொண்டேன். 1

162 திருப்பேர் நகரில் அப்பக்குடத்தானென்னும் பெயருடன் பள்ளிகொண்டிருப்பவனும், திருக்குறுங்குடியில் அருளும் எம்பெருமானும் பாண்டிநாட்டுத் திருப்பதிகளிலொன்றான திருத்தண்கால் என்னும் திவ்வியத்தலத்தே வாழ்ந்தருள்பவனும், திருக்கரம் பனூரில் உத்தமனென்னும் பெயருடன் அருள் நல்குபவனும், முத்துக்கள் விளைவதான, நிலைத்தே இருப்பதான கருநீலமான ஏழுகடல்களையும், ஏழுமலைகளையும், ஏழுலகங்களையும் உட்கொண்ட பின்னரும், இவைபோதா, என்று பள்ளிகொண்டிருப்பவனுமான பரஞ்சுடரை நான் தென்னரங்கத் திருப்பதியில் கண்டவனானேன். 2

163 நிலவுலகம் நீரின்கள் மூழ்கியஅந்நாளிலே, வராகமாய் வந்து பூமியைக் கீண்டு எடுத்து வந்து நிலைக்கப்பண்ணி, மண்வான், ஆகியன யாவும் தன்னுள் அடங்குமாறு செய்து கொண்ட பெருமானும், தன் தொண்டர்களின் உள்ளத்தில் தேனாகவும், அமுதமாகவும் இருந்து அவர்கட்கு பேரின்ப மூட்டுபவனும் ஒரு காலத்தில் மாடு மேய்ப்பவனாய் கண்ணனாய் திகழ்ந்தவனுமான பரமனை நான் அழகார்ந்த திருவரங்கத்தில் கண்டு கொண்டேன். 3

164 பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனும், வண்டி யுருவில் வந்த அசுரனை உதைத்தழித்தவனும், மேலும் இறுமாந்திருந்த இரணியனை வதைத்தவனும், முன்பு ஒருநாள் தன் இரு திருவடிகளையும் நீட்டி உலகம் எல்லாம் அளந்து கொண்டவனுமான பெருமானை காவிரியால் அணி செய்து திகழும் எழில்மிகு தென்னரங்கத்தில் கண்டு கொண்டேன். 4

165 நீர், நெருப்பு, நிலம் இவற்றின் உள்ளுறைபவனும், தன்னை விடுத்து பிராட்டியைத்தனியாக்கின அன்று அரக்கன் இராவணின் இலங்கையை காண்பவர் காணும் முன்னமேயே ஒரு நொடிப்பொழுதில் எரியூட்டியழித்தவனும், பெருஞ்சோதி யுருவாயும் கலங்காப் பேரின்பப் பெருநகரமான பரமபதத்தில் பரவாசுதேவனாய் வீற்றிருந்தருள்பவனும், இதற்கும் மேலாக மறையோர் மந்திரம் ஓதியளிக்கும் வேள்வி ஹவிஸ்ஸை (வேள்வித்தீயில் இடும்பொருள்) உட்கொண்டருள்பவனுமான எம்பெருமானை-திருவரங்கனை, நான் தென்னரங்கத்திருப்பதி யில் சேவித்தேன். 5

166 சினமெழாமல் தம்மை காத்துக் கொண்டு தோன்றித் தன்னைத்தஞ்சமெனப் பற்றிய அடியவர்கட்கு தவநெறியாயிருந் தருள்பவனும், ஊழிக்காலத்திலே உலகம் யாவற்றையும் உட்கொண்டு, பின்னர் படைப்புக்காலத்தில் உலகை மீண்டும் படைத்தருள் நல்கியவனும், அனைத்து நல்லவைகளையும் அளிப் பவனும், கஞ்சன் இழைத்த கொடுமைகளைப் பொறுக்க மாட்டாதவனாய் மிகுந்த சீற்றத்துடன் அவனை மாய்த்தவனும், போரில், தன் சிறகினை அசைத்துக்கொண்டு வெகுவிரைவாகப் பறந்துசெல்லும் கருடனை ஊர்தியாகக்கொண்டிருப்பவனுமான பெருமானை நான் தென்னரங்கந்தனில் காணப்பெற்றேன். 6

167 சிந்தனைக்குரியனாயிருப்பவனும், தவத்தின் பலனாய்-விளைவாய் விளங்குபவனும், ஸ்ரீநிவாஸனென்னும் பெயருடன் திருமலையில் நின்றருள்பவனும், என் மனத்தை விட்ட கலா திருப்பவனும், திருவேங்கடமாமலையின் ஒப்புயர்விலாத பெருந் தேவனும், வரிகளைக் கொண்ட வண்டுகள் நிறைந்த சோலை களால் சூழ்ந்து தோன்றும் திருக்கோவலூரில் நின்றருள் பவனும், உலகளப்பான் வேண்டித் திருவடியை நீட்டிக்

காண்பித்தவனும், அனைத்துக்கும் அனைவர்க்கும் நாயகனாய், சுவாமியாய் விளங்குபவனுமான விமலனை நான் தென்னரங்கத்தில் கண்டு கொண்டேன். 7

168 காவியுடை உடுத்திய பௌத்தருக்கும், தூய்மை நெறியிலில்லாத சமணர்கள், மற்றும் நாத்திகம் பேசுவோருக்கும் அருளாதவனும், தன்னடியார்கட்கு, பேரருளாளனுய்த் தோன்றுபவனும், நம் போன்றவர்க்கும் அருள்பவனும், அவனொருவனுக்கே அடியனான எனக்கு அருள்பவனும், என் அத்தன், அம்மை, விண்ணவர்க்கும் பரிந்தருள்பவனுமான பரமனை - திருவரங்கப்பெருமானை-, நான் திருவரங்கத்தில் கண்டு களிப்பெய்தியவனானேன். 8

169 தம்மனத்தினின்றும் பொய்மையை விலக்கி மெய்ம்மை நெறியில் ஐம்புலன்களையும் நிறுத்தித்தன்னையே நினைந்திருக்கும் அடியவர்களுக்கு மெய்யாகவே தோற்றமளிப்பவனும், ஆசார்யனாய் நெறியெல்லாமெடுத்துரைத்தவனும், மை போன்ற கருமுகில் வண்ணத்திருமேனியனும், ஒளிவீசிடும் மரகதம் போன்று பசுமை வண்ணமேனியனும்,- இவையாவும் சேர்ந்து திகழும் வண்ணமேனியனுமான மேன்மையோனை நான் தென்னரங்கத்தில் கண்டவனானேன். 9

## பதிகப்பயன்

170 கண்ணனவதாரகாலத்தில், விருப்பங்கொண்டு பசுக்கூட்டங்களை மேய்த்தவனும், பூலோக வைகுந்தமெனத்திகழும் திருவரங்கத் திருத்தலத்தில் பள்ளிகொண்டருள்பவனுமான பரஞ்சுடர்-குறித்து, விரும்பப்பெறும் குணங்களை கொண்டிருப்பவரான கலிகன்றி என்னும் திருமங்கையாழ்வார், அருளிய புகழ் மலிந்துள்ளவையாய் அனைவரும் ஆர்வமுடன் பயில விரும்பும் தன்மைத்தான 8+2= பத்துப்பாசுரங்களையும் தாமே விரும்பிப் பயின்று ஓதுபவரை தீமை அணுகாமல் அகல்வதாகும். 10



## பதிகம்-7

171 அதிமிகத் தொன்மையான, தோன்றிய காலம் இன்ன தென்று அறிய இயலாததான நான்கு வேதங்களாகவும், அவற்றில் கூறப்படும் வேள்வியாகவும்-யாகங்களாகவும், விஞ விற்குரிய சொற்களாகவும், அவ்விஞக்களின் உண்மை விடைப் பொருளாகவும், அனைத்துக்கும் மூலகாரணமான நுண்ணிய பொருளாகவும், பின்னர் விரிந்து பரந்து பேரொளி வீசிடும் பேரொளிப்பிழம்பாகவும், கீழ்நோக்கிப்பாயும் தெளிந்த நீராக வும், மண்ணுகவும், முகிலும் காற்றுமாகவும் ஏழுகடல்களாகவும், ஏழுமலைகளாகவும், வானாகவும் தானே தோன்றிடும் நம் சுவாமியான கடவுள் அரங்க மாநகரில் அமர்ந்தருள் நல்குகின்றான். 1

172 இந்திரன் என்ன, பிரமன் என்ன, ஆகிய இமையோ ரனைவரும் எண்ணிறந்ததான சிறந்துயர்ந்த நல்லியல்புகளை நவின்று துதிக்கும் வண்ணம் அருள்பவனும், தந்தை, தாய், மக்கள், நெருங்கிய உறவினர், மற்றும் சுற்றிலும் இருக்கும் அகலாபிணைப்பெனத் தோன்றுபவனும், இவ்வுலகின் கண் உள்ள உயிர்களனைத்துக்கும், உலகப்பிணைப்பெனும் பிணியை நீக்கி அருளும் மருந்தாயிருப்பவனும், ஊழிக்கு-பிரளயத்திற்கு காரணனாய் விளங்குபவனுமான நம்பெருமான் திருவரங்கப் பெருநகரில் அமர்ந்திருக்கின்றான். 2

173 மனிதர்களும் மற்றுமுள்ள உயிரினங்களும் நிலைத்து வாழ்வதற்கான பெரியதான இந்நிலவுலகும், மலைகள், கடல், வானம், அசுரர்கள். வாழிடம்-ஆகிய எல்லா இடங்களிலும் நெருக்கமான அடர்ந்த காரிருள் மூடியிருக்கும்படிக்கு, ஒளி யிருக்குமிடமெல்லாம், உலக நலத்திற்கான ஞானமே இல்லா மல் அறிவுமங்கி, மிக மிகப் பழமையான காலந்தொட்டே வழி-வழியாய் ஓதி வந்ததான நான் மறைகள் மறைந்திருக்கும் நிலையில், படைப்பின் தொடக்க காலத்திற் போலே, வானவர் மற்றும் முனிவர்க்கும் அருள் நல்கி, அறியாமையென்னும் இருள் அகலுமாறு, பிரமன் முதலானோர் வேண்டி நின்ற அவ்வருமையான நாளிலே, பிரமன் இருந்த இடத்திலேயே

அன்னமாய்த் தோன்றி பெறுதற்கரியதான வேதங்களே மீண்டும் விவரித்து விளக்கி உரைத்த உத்தமன் அரங்க மாநகரில் அமர்ந்திருக்கின்றான், 3

174 பருத்து நீண்டுயர்ந்த மந்தர மலையை மத்தாக நிறுத்தியும், வாசுகியென்னும் பாம்மை மத்தான மலையைச் சுற்றிக் கயிருகக் கட்டி பரந்து ஆழ்ந்து அகன்ற கடல் பேரோலியெழுப்பும்படியும், எழும் வானத்தைத் தொட்டுப் பரவுமாறும், தொலேவிலுள்ள வானுலகம், சந்திரன்-சூரியன், மற்றுமுள்ள இமையவர் அனைவரும் நடுக்கத்துடன் வியப்புடன் நோக்கியிருக்குமாறும், ஆயிரம் தோள்களைக்கொண்டு அலைகளுள்ள பாற்கடலைக் கடைந்தருள் செய்த பெருமான் அரங்க மாநகரில் அமர்ந்திருக்கின்றான். 4

175 இரணியனுடைய, அணிகலன்களால் அணிபெற்றுத் திகழும் மார்பைப் பிளந்து, மேருமலை பிளந்து நீர் பெருகி வருகின்றதோ என எண்ணும்படிக்கு, பொங்கியெழும் வெப்பமான செந்நீர் வெள்ளமிட்டுப்பாயும்படி செய்தவனும், சீற்றங்கொண்ட கண்களைப் பெற்றுள்ளவனும், ஒளிமிகும் கூரிய பற்களையுடையவனும், வெள்ளை வெளேர் என்று ஒளி மிகுந்து வீசும் வெண்மையான ஒப்பிலாதமலை வானெங்கும் பரவுமாறு தீ உமிழும் தன்மையில் சிறிதும் குறைவின்றி அந்நிலையிலேயே தோன்றியவனுமான நரசிங்கநாதனை நினைக்கும் அரக்கர் எவ்விதம் உய்வைப்பெறுவர்?- நரசிங்கனின் வடிவைக்கண்ணுற்ற அக்கணத்திலேயே அச்சம்மிகுந்திட அழிந்துபடுவர். அரக்கர் என்பது கருத்து-இவ்வண்ணம் நரசிங்கமாய்த் தோன்றிய நம் பெருமான் அரங்கமாநகரில் அமர்ந்திருக்கின்றான். 5

176 ஆயிரம் மலைகள் சேர்ந்துள்ளனவோ? என்னும் நிலை தோன்றுமாறு, போருக்குப் பொருந்தியவையான அழகுடன் ஒளிமிகும் தோள்கள் ஆயிரம் பெற்று விளங்கிய கார்த்தவீர்யார்ச்சனனை, அவனது ஆயிரந்தோள்களையும், பரசுராமனாய் வந்து கோடாரி கொண்டு வெட்டி வீழ்த்திடவே, அவ்வரக்கன் வானுலகைச் சென்றடைய,- அவற்றை அறிவித்து, அமரர்கள்-பெருமானின் ஆயிரம் பேர் சொல்லித் தோத்திரம்

பண்ண, அலைகள் பெருகியெழும் கடலிடையே ஒளி வீசிடும் ஆயிரம் முகங்களைக்கொண்ட ஆதிசேடனென்னும் அரவணை யிற்றுயின்றவனான அவ்வமலன் அரங்கமாநகரில் அமர்ந் திருக்கின்றான். 6

177 சுருண்டிருண்ட கூந்தலையுடையவளும், கொவ்வைக் கனிக்கிணையான திருஇதழ்களையுடையவளும், ஆன சீதா தேவியை பிரிந்திருக்கச் செய்தவனும், தீமை புரிவதில் மிகுந்த தீவிரமும் ஆர்வமும் உடையவனான அரக்கன் இராவண னுடைய, தீ போன்று ஒளி மிளிரும் இரத்தின மகுடங்களைப் பொடியாக்கி, அவனது இலங்கையையே அழிப்பதாக உறுதி பண்ணிக்கொண்டு,- அதற்கென-, அழகுடவில் வளைந்து கொடுக்க, கொல்லும் கணையை முதலில் ஏவிப் பிறகு அலை களால் தடுக்கின்ற கடலரசன்-வருணன்-வணங்கி வழிபட்டு நிற்க, வானரக்கூட்டங்கள் செய்த பணியால் மலைகளைக் கொண்டு கடல் நடுவே அணையை அமைத்தவனான ஸ்ரீராமபிரான் அரங்கமாநகரில் அமர்ந்திருக்கின்றான். 7

178 உலகின் ஊழிக்காலத்தில் நிர்வாகம் செய்பவனும், வேள்விக்குரிய பூசனைக்குரியனாயிருப்பவனும், ஒரேசக்கரத்தை யுடைய சூரியனையும் நடாத்துபவனையும், உச்சி நெற்றியுடைய பெரிய யானையான கஜேந்திரனின் துயர் நீக்கியருளியவனும், இலங்கை நகரமே அழியும்படிக்கு வெவ்விய அம்புகளை எறிந்து அழித்தவனும்-கிருஷ்ணவதாரத்தில்-, மிகுந்த வில்லாற்றல் பெற்றவனை விசயனுக்கு அருள்கூர்ந்து, பகல் பொழுது இருக்கும் நேரத்திலேயே, பகலவன் ஒளி மங்கி மறைந்து விட்டான் என்று எண்ணுமாறு, தன் சக்கராயுதத்தை ஏவி, சூரியன் ஒளியையே மறைத்தவனுமான பெருமான் ஸ்ரீரங்க நாதனென்னும் திருநாமத்துடன் அரங்கமாநகரில் அமர்ந்திருக் கின்றான். 8

179 பெரும்பிரளய காலத்திலே பெரியதான இந்த உலகினை விழிங்கியுட்கொண்டு, அவ்வுலகை மீண்டும் படைப்புக்காலத் தில் தோற்றுவித்து, உலகுயிர்களிடத்து அபிமான முள்ளவ னாய், ஆலந்தளிரொன்றில் குழவியுருவில் துயில் கொண்டிருந் வனும், அமரர்க்கும் அரியனாய் தொலைவில் இருப்பவனும்,

என் மனந்தனிலும் புகுந்து, அவனுக்கே அடியனுன நான் அவனை நுகர்ந்து மகிழ்வுறும் வண்ணம் அருளியவனும்,- கண்ணனுய், தேவகிசிங்கமாய் வந்த காலை-, கொடிய துயர் நீக்கும் ஆயனுய் வளர்ந்து, தாயாய் வந்த பேய் பூதனையின் முலையுண்ணும் பிள்ளையாய் இருந்தவனும், மழை தடுக்க கோவர்த்தன மலையைகுடையாகக் கையிலேந்தி நின்றவனுமான நிமலன் அரங்கப் பெருநகரில் அமர்ந்திருக்கின்றான். 9

## பதிகப்பயன்

180 பொன், மணி, முத்து ஆகியனவற்றை அடித்துக் கொண்டு அலைமோதிப் பெருகும் காவிரி இருபுறங்களிலும் சூழ்ந்திருப்பதால், அலைவீசும் பொய்கைகளில் அன்னப்பறவைகள் உலாவுமிடமான திருவரங்கப் பெருநகரில் அமர்ந்துள்ள திருவரங்கப்பெருமானைப் போற்றி, நிலைத்துத் தோன்றும் மாளிகைகளையுடைய திருமங்கை நகர மக்களுக்குத் தலைவராய், பெரிய வேலைப் பெற்றுள்ள திருமங்கையாழ்வார் மொழிந்த, பயில்வதற்கெளியதான இப்பாசுரங்களை நாள்தோறும் ஓதுபவர்கள், முன்பு நேர்ந்தவையான கடுவினைகளினின்றும் விடுபட்டவராவர். 10



பதிகம்-8

181 கடல் வண்ணத்திருமேனியனே! சோலைகளால் அணிகொண்டு திகழும் திருவரங்கத்திருநகருறையும் அம்மானே! ஸ்வாமியே!, நீ கோசலைகுமாரனுய் இராமனுய் அவதரித்து, நின் சிற்றன்னை சொற்கொண்டு நேரிழை சீதையுடனும், இளங்கோவுடனும் கானேகுங்காலையில், உன்பால் பேரன்பும் பக்தியும் கொண்டு உபகாரப் பொருள்களுடன் உன்னைக்கண்டு வணங்கிநின்ற, வேடுவர் தலைவன் குகனைக்கண்டு, இவன் வறியவன், ஏதுமற்றவன், வேடுவ இனத்தவன் என்று கருதாமல், அவனுக்குப் பரிவுடன் அருள் நல்கிக் கனிமொழியில் ''சலமில்லாத-சூது அறியாத-, மானின் அடக்கமானபார்வைக் கிணையான பார்வையைப் பெற்றுள்ள என் இல்லாள் உனக்குத்

தோழியாவாள், என் இளவலான இலக்குவனும் உன்றன் உடன்பிறப்பாவான்'' என்று மொழிந்ததோடு அல்லாமல், அவன் பணிவிடையால் மனமகிழ்ந்து, நீ எனக்குற்ற தோழன், இங்ஙனே இருந்து உன் மக்களுடன் இனிதே இருந்திடுக என்று அருளிய சொற்களைச் செவியுற்ற உன்றன் அடியனுன நான் உன் திருவடிகளைச் சரணமடைந்தவனுனேன். 1

182 காற்றின் மைந்தனுன அனுமனை அவன் மனித இனத்தவனல்லன் என்ற எண்ணங்கொண்டு அவனைப் புறக்கணியாது அவ்வனுமனின் அரிய பெரிய பணிவிடையால் மகிழ்வுற்று, அவனிடம் கடலையொத்த பேரன்பு கொண்டு, அவன் செய்த பேருதவிக்கு, கைம்மாறு ஏதுமில்லையென்று உறுதிகொண்டு, களங்கமேதுமில்லாத சொற்களைக் கொண்டுள்ள உன்னோடு அமர்ந்து உண்பன்'' என்று நீ அனுமனிடம் உரைத்த உரைகள், எனக்கும் நீ உரைத்தருள் நல்கிடவேணும் என்று உன்றன் திருவடியிரண்டையும் தஞ்சமெனக்கொண்டவனுனேன். 2

183 சோலைகளால் சூழ்ந்துள்ள பொய்கையில், உன் ஆராதனைக்கெனத் தாமரைமலர் பறிக்கச் சென்று முதலைவாய்பட்ட, உன்னையே சரணடைந்து கதறியகளிறு கஜேந்திரனுக்கருள்வான் வேண்டி, நீ கடிது விரைந்து, கொடிய விலங்கு மூதலையைச்சீற்றத்துடன் துணித்த வரலாற்றினை அறிந்து, உன்னடியனுன நான் உன்னைச்சரணமடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே! 3

184 சோலைகளால் சூழப்பெற்று அணியெனத் திகழும் திருவரங்கத்துறை அம்மானே! இறைவனே!, நஞ்சைத் தன்னகத்தே கொண்டுள்ள ஸுமுகனென்னும் பாம்பு, கருடனிடம் அஞ்சி நடுங்கி, இந்திரனின் பரிந்துரைபெற்று உன்னையே அடைக்கலமாக வந்தடைந்த காலை, அதற்கு நீ அபயமளித்து அருள் செய்ததை நினைந்தவனாயும், கொடிய சொற்களைக் கொண்டுள்ள யமதூதர்கள் என்னைக் கொடுமை செய்ய இருக்கின்றனர் என்பதையும் நினைந்தும் உன்றன் திருவடிகளை அடைக்கலமாகப் பற்றியிருக்கின்றேன். 4

185 பொழில்கள் சூழ்ந்துள்ள திருவரங்கத்தில் அருள் நல்கும் அரங்கத்தண்ணலே ! நீ உன்றன் திருவடி நிழலில் வந்தடைந்த மறையோதிய மறையவனை விளித்து அன்ப! நீ இன்னும் இவ்வுலகில், உன்மனம் நினைவுறும்படி தோகையைக் கொண்டு விளங்கும் மயில் போன்ற மடந்தையரின் நுகர்வு பெற்றுள்ளவனாயில்லை. ஆகவே மேலும் சில காலம் இவ்வுலகில் வாழ்ந்து, வனிதையருடன் மகிழ்ந்திருந்து பின்னர் என்னை நண்ணுக என்றுரைத்த மொழிகளை எனக்கும் அருளவேண்டும் என்று உன்றன்திருவடிகளை அடைந்தேன். 5

186 நான்கு மறைகளையும் நன்கு ஓதிய மாமுனிவர் மிருகண்டு முனிவர் தவமியற்றிப் பெற்ற மகன் மார்க்கண்டேயன், ஆயுள் முடிவுற்றது என்று யமன் வந்த வேளையிலே, மார்க்கண்டேயன் தன் மனத்துறை தெய்வமான உருத்திரனை வேண்ட, சிவபிரான் வந்து பாதுகாக்க முற்பட்டபோதும் அகந்தையுடன் அகலாமலிருந்த அந்தகனை, கோபம் கொண்டு அவன் உருமாறும்படி செய்து அவனையகற்றி, அம்மார்க்கண்டேயனுக்கு மேலும் ஆயுள் அளித்ததோடன்றி, அவனை உனக்கே அடியனாயிருக்கும்படி அருளிய அணிபொழில் திருவரங்கத்தானே! அம்மார்க்கண்டேயனுக்குப் போல் எனக்கும் அருளவேண்டும் என்று உன்றன் திருவடிகளையடைந்தேன். 6

187 சோலைகளால் அலங்காரம் பெற்று விளங்கும் திருவரங்கத்தம்மானே!, நீ கிருஷ்ணவதாரத்தில் வசுதேவ-தேவகி மைந்தனாய்த் தோன்றியபோது, உனக்கு வேதம் முதலிய கலைகளை ஓதுவித்த சாந்திபினி முனிவரிடம்,நீ குருதக்கணை யாது கொடுக்க? என்று வேண்டி நின்ற காலை, அவர், ''கடலலையில் சென்ற என் மைந்தனை மீட்டுத்தருக. அதுவே நீ எனக்கு குருதக்கணையுருவில் செய்யும் பேருதவியாகும்'' என்று மொழிந்தார் பிழையிலாத மெய்ம்மொழியே பேசும் அம்முனிவர் வேண்டியவண்ணமே அவர் மனக்குறை நீங்கும்படி அவர் சிறுவனை மீட்டுக்கொடுத்து அருள் செய்தனையன்றோ? ஆகையால் நான் உன்றன் திருவடிகளைச் சரணடைந்தவனானேன். 7

188 சோலைகள் சூழ்ந்து விளங்கும் திருவரங்கத்தம்மானே! என்னிறைவனே! நீ கண்ணனாய் வந்து அவனிபாரம் தீர்த்த காலை, வேதம் ஓதிய அந்தணனொருவன் உன் திருவடி யடைந்து, என் மனைவி, அன்பு மதலைகளை ஈன்றெடுத்த வுடனேயே, கொடியதான தெய்வம் ஒன்று எடுத்துச்சென்று ஒளித்துக்கொள்கின்றது. என் மக்கட் செல்வங்களை எனக்கு மீட்டுக்கொடுத்தருள் செய்யவேண்டும் என்று தன்னில்லம் வருமாறு வேண்டிக்கொண்டான். அவன் வேண்டியவாறே, அவனது பகைவர்கட்கு எதிரிலேயே அவனுக்கு அருள் நல்கி அவனது சிறுவர்களை மீட்டுவந்து அவனிடம் சேர்ப்பித்தருள் செய்தனை இவ்விதம் நீ, உன்னை வேண்டி வந்தவர்கட்கு அருளும் அண்ணல் என்றறிந்த உன் அடியனான நான் உன் திருவடிகளை அடைந்தேன். 8

189 அணிபொழில் திருவரங்கத்தம்மானே! நீ ஒளிமிளிரும் நீண்ட முடியணிந்தவனும், தொண்டை நாட்டு மன்னவனுமான உன் பக்தன் ஒருவனுக்கு, உளமாற அன்புகொண்டு, அவனுடன் ஒரு யாமகாலம் இருந்தபோழ்து, நல்ல பலன் தரவல்லதான திருஎட்டெழுத்து மந்திரத்தை உபதேசித்து அருள் செய்தனை அவ்விதம் மந்திரம் உபதேசம் பண்ணிய, உன்றன் உலகமளந்த பொன்னார் திருவடிகளை தேனுளபாதமலரை அடைந்து உய்வைப்பெற்றவனானேன். 9

## பயன்பகரும் பாசுரம்

190 உயர்ந்த மாடமாளிகைகளால் சூழ்ந்து திகழும் திருமங்கை நாட்டு மன்னனானவரும், பகைவர்களை வெல்ப வரும் ஆடல்மா என்னும் குதிரை மீதமர்ந்துவருபவருமான ஆழ்வார் கலிகன்றி, பொழில்களால் சூழ்ந்து அணியுடன் தோன்றும் திருவரங்கத்தம்மானும், பெரியதாயும், தொன்மையும், புகழும் உடையதான திருச்சக்கரப்படையைப் பெற்றிருப்பவனும், நமக்கும் சுவாமியும், பக்தர்களிடம் பேரன்புடன் அருள்பவனுமான திருவரங்கத் திருமாலைப் போற்றிப் பரவிய இந்தப் பத்துப்பாசுரங்களையும் பாடுவீராக. இவ்விதமாகப்பாடும் பக்தர்களே! அடியவர்களே! உங்களிடத்தில் பாவங்கள் நில்லாது அகன்றொழியும். 10

191 ''தாராளன், தண்ணரங்க ஆளன்......மாலையணிந்து குளிர்ச்சி பொருந்திய திருவரங்கத்திருத்தலத்தே ஆளுகை நடத்துபவன்'' என்று திருநறையூர் நம்பி எம்பெருமானைப் போற்றும்பதிகத்தில் திருவரங்கனை நினைந்தேத்துவார். 6-6-9.

192 ''......அரங்க மாளியென்னாளி......-திருவரங்கத்தை ஆளும் திருவரங்கன் என்னையாள்பவன்'' என்று திருநறையூர் பதிகம்7-10-4-ல் அரங்கத்தம்மானை நினைவுகொண்டு பாடுவார்.

193 -8-2-7- கண்ணபுரத்தெம்பெருமானைப்பரவும் பதிகத்தில்

துரங்கம்வாய் கீண்டுகந்தானது தொன்மை ஊர், அரங்கமே ......- கேசியென்னும், குதிரையுருவில் வந்த அரக்கனை வாய் பிளந்து வீழ்த்தி அழித்த கண்ணன்-திருவரங்கன்-, இருந்தருளும் மிகத்தொன்மை வாய்ந்த திருத்தலம் திருவரங்கமே'' என்று அரங்கனைப் பரவுகின்றார்.

194 ''புனைவளர் பூம்பொழிலார் பொன்னி சூழரங்கநகருள் முனைவனை,........- அணியென வளர்ந்திருக்கும் மலர்களுள்ள சோலைகளாலும், காவிரியாற்றினாலும் சூழ்ந்து தோன்றும் திருவரங்கத்திருத்தலத்தில் முதன்முதலான அருச்சா மூர்த்தியாய்த் திகழ்ந்தருளும் திருவரங்கப் பேரரசை'' என்று கண்ணபுரத்துப் பெருமானைத் துதிக்கும் பதிகத்தில் போற்றுவார். 9-9-2.

195 ''......, அவன்மேய அண்ணல் மலையும் அரங்கமும் பாடோமே.—பெருமானுறைந்தருளும் திருவேங்கடத்தண்ணல் மலையையும், திருவரங்கன் திருத்தலத்தையும் பாடுவோம்'' என்று தலைவி,தன் நாயகனை நினைந்திரங்குவதாக வரும் பதிகம், 11-3-7-ல் மொழிந்தேத்துவார்.

196 பொழில்கள் அணியென அழகாகச் சூழ்ந்து விளங்கும் திருவரங்க நகரப்பனே!, நீலமணிமேனியனே!, மாணிக்க மணிவண்ணத் திருமேனியனே!, மதுசூதப் பெருமானே!,

இத்துணை விவேகம் பெற்ற பின்னர் உன்றன் திருவருளின்றி எனக்கு மற்றொரு புகலுள்ளது என்ற எண்ணங்கொண்டுள்ள வனல்லேன். பரஞ்சோதியாய்த்திகழும் திருவரங்கனே! நான் உய்ந்திடும் வகையினை அருள்வாய். 11.8.8.

197 ''......
மெய்ம்மையை விரிந்த சோலை வியன் திருவரங்கம்மேய, ....: — நிலைத்த பயனளிக்கும் தத்துவம் உள்ளதாகவும், சோலைகள் சூழ்ந்து சிறந்துயர்த்த திருவரங்கத்தில் மன்னி யிருக்கின்ற-'' என்று திருக்குறுந்தாண்டகம் பாசுரம் 7-ல் பகர்வார்.

198 அனைத்துயிரினங்கட்கும் உயிராய், ஆன்மாவாய், நல்லோர்களுக்கு அருள்வதற்கெனவே, தூய்மை மிகுந்ததான திருவரங்கத் திருத்தலத்தினை மிக-மிக உகந்து விரும்பி, அத்திருத்தலத்தே மன்னியிருப்பவரான மாமலர் மங்கை மணாளன் ஸ்ரீரங்கநாதப் பெருமானைப் போற்றி, பரிசுத்தமற்ற, ''நான்'' என்னும் எண்ணங்கொண்டுள்ள தொண்டனான நான், அழுக்கு - அசுத்தமான-உடம்புடன் கூடிய எச்சில் நிறைந்த வாயைக் கொண்டு திருவரங்கப் பெருமானின் புனிதமளிக்கும் மிக-மிகத்தொன்மையான திருப் பெயரைச் சொல்லி விட்டேனே என்று, முன்னமேயே பாவியா யுள்ள நான், மேலும் பிழை செய்கின்றேனே என்று, அஞ்சி நடுக்கம் கொண்டிருந்த என்னை, கருங்குவளை மலர் போன்று குளிர்ந்தும் மணம்மிகுந்ததுமான திருமேனியுடன் திருவரங்கன் அணுகி வந்து ''அஞ்சற்க'' என்று கையினால் அபயம் காண்பித்து, பரிதாப மிகுதியால் கண்ணை மூடியிருந்த-என் கண்ணினுள் புகுந்து தோன்றி சேவை தந்தருளினார்.
—திருக்குறுந்தாண்டகம்-12.

199 பிரமனின் சாபத்தால், பிரம்ம கபாலத்தைக் கையில் தாங்கி பிறர் மனை சென்று பிட்சை வேண்டித்திரிந்த சிவ பெருமானின் சாபம் தீர்த்தருளிய தீர்த்தன் அரங்கத்தில் திரு வரங்கனுய்த்திருவருள் புரிகின்றான் தி.குறு.தா.-19

200 ''பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவை பேணாள்
பனிநெடுங்கண் ணீர்ததும்பப் பள்ளி கொள்ளாள்,
எட்டனைப்போ தென்குடங்கால் இருக்க கில்லாள்
''எம்பெருமான் திருவரங்க மெங்கே'' என்னும்,

........— நற்குணம்மிகுந்த நங்கைமீர்!, திருவரங்கநாதனிடம் மோகம் கொண்டுள்ள என்மகள் பட்டாடையை புனைகின்றாள். தன் நாயகன் வாராமையால் மேலும் மோகம் கொண்டு மயங்கி வருந்துகின்றனள். தன் பருவ வயதுக்கேற்ற விளையாடும் பொம்மைகளையும் விரும்பினாளில்லை. குளிர்ச்சி பொருந்திய நீண்டகன்ற கண்களில் நீர் தளும்பி நிற்பதால் படுப்பதுமில்லை. ஒரு நொடிப்பொழுதும் என் மடியில் அமர்பவளாயில்லை என் தலைவனான பரம புருடன் எங்கே? அவன் மன்னியிருந்தருள் நல்கும் திருவரங்கம் எங்கே? என்று தலைவியின் தாய்மொழிவதாகப் பேசுகின்றார். -தி.நெ.தா 11.

201 ''......அணியரங்கம் ஆடுதுமோ? தோழீ!...
நாம், என் நாயகன் திருவரங்னென் உறைந்தருள்வதான திருவரங்கம் சென்று அவன் புகழ்பாடி ஆடுவோமா தோழீ!'' என்று மொழிகின்றார். — தி.நெ.தா. 12.

202 ''......மூவாமூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற, அளப்பரிய ஆரமுதை அரங்கமேய அந்தணனை. . . . . என்றென்றும் அழிதல் என்பதில்லாத மூன்று உலகங்களையும் கடந்து அவற்றிற்கு அப்பால் உள்ள நித்திய விபூதியெனும் திருவைகுந்தத்திலே அனைத்துக்கும் மூலகாரணனாய்த்திகழ்பவனும், அளவிட்டு-மதிப்பிட்டறிதற் கரியனாயிருப்பவனும், இனிமை மிகுந்த அமுதமாய் விளங்குபவனும், திருவரங்கத்தில் பள்ளியிருந்தருள்கின்ற திருவரங்கனென்னும் தூய்மை மிகுந்தவனை. . . .'' தி.நெ.தா. 14

203 ''. . . .
ஏர்வண்ண என் பேதை யென் சொற்கேளாள் எம்பெருமான் திருவரங்கம் எங்கே என்னும்...... —திருவரங்கத்தேவிடம் காதல் மிகுந்துள்ளவளான, எழில் நிறத்துடன் தோன்றும், சிறுவயதினளான என் மகள் நான் கூறும் நன்மொழிகளைக்

கேட்காதவளாய், என் காதல் தலைவன் ஸ்ரீரங்கநாதன் மன்னி யிருக்கும் திருவரங்கம் எங்கே என்று வினவுகின்றனள்.
........'' தி.நெ.தா-18

204 ''........
......., தன்நிறை வழிந்தாள் ஆவிக்கின்றாள்.
அணியரங்கமாடுதுமோ தோழீ! என்னும்,......
தன் எழில் குணத்தை அழித்துக்கொண்டு, நெடுமூச்சுவிட்ட வளாய், என் தலைவன் எம்பெருமான் இருக்கும், அணி மிகுந்த திருவரங்கம் சென்று ஆடிப்பாடுவோமா? தோழீ!
. . . .'' தி.நெ.தா. 19

205 என்னைத்தன்பால் மோகித்து மயங்கப்பண்ணி, அவனைப்பற்றியே சிந்தனை செய்திருக்குமாறு செய்து, எனது எழிலொளியையும், கைவளையையும் கவர்ந்து,தென்னைமரங்கள் நிறைத்துள்ளதும், மீன்கள் துள்ளித்திரியும் வயல்களும் சூழ்ந்த திருவரங்கமே நாம் வதியும் தலம் என்று கூறிச்சென்ற என் அன்புத்தலைவனை நான் கனவினில் காண்பேனாகில், புள்ளூர்ந்து வந்து-கருடன் மேல் ஏறிவந்து-என் உள்ளம் கவர்ந்து சென்ற என் கள்வனே! இனி நீ, என்னை விடுத்து, பிரிவு வேதனையால் நான் நோவுறும் வண்ணம், என்னைத் தவிக்கவிட்டு செல்லாதே என்றுகூறினாலும், நமக்குஇது வருத்தமேயாம். தி.நெ.தா.23

206 என் காதல் தலைவனை எம்பெருமான் திருமங்கை மணாளன், மின்னல் போன்று ஒளிமிகும் தன்திருவுருவத்தையும், பெரியதான நீண்டுயர்ந்த தோள்களையும், கறுமைக்கு நேர் மாறான சிவந்ததான தன் கையையும், செந்தாமரைக்கண்ணை யும், பவளம் போன்ற வாயையும், தனது திறனால் மலர்ந்த திருத்துழாய்மலர் மாலைகீழே காதுகளில் அசைந்து திகழும் மகர குண்டலங்களையும் காண்பித்து, என் எழிலையும், என் அடக்கமான பண்பையும், என் உள்ளத்தையும், என்றன் கைவளைகளையும், கவர்ந்து கொண்டதோடன்றி, என்னையும் தனக்கு அடிமையாக்கிக்கொண்டு. பொன்வண்ணத்ததான மணம் மிகுந்த சுரபுன்னைப்பூக்கள் நிறைந்த சோலைகளின்

இடையில் காவிரி நீரால் சூழ்ந்து விளங்கும் திருவரங்கமே நமது ஊர் என்று சொல்லிக்கொண்டே சென்றார். தி.நெ.தா. 25

207 ''. . . . ஆராமம் சூழ்ந்த அரங்கம், . . . .
தலைவி நவில்வது-என் தலைவன் அமர்ந்து அருள் நல்குமிடம் சோலைகள் சூழ்ந்து தோன்றும் திருவரங்கம். . . .''—
சிறியதிருமடல்-71-35

208 ''. . . . மன்னும் அரங்கத்தெம் மாமணியை. . . . .—
தலைவியுரை - மாமணிவண்ணத் திருமேனியுடன் சேவை தந்தருளும் என் எம்பெருமான் திருவரங்கத்தில் மன்னி யிருக்கின்றான்.'' —பெரியதிருமடல் -118-63



குலபதி, குருகேசன், மகிழ்மாறன், அணி குருகை நகர் முனிவர், குருகைப்பிரான், குருகூர் வந்த பண்ணவன், ஞானத்தெம்மூர்த்தி, குருகூர்ச்சடகோபன், குருகைக்கரசன், குருகைக்கோன், வேதம் தமிழ் செய்த மாறன், வேதந்தமிழ் செய்த நின்மலனே!, வேதந்தமிழ் செய்த மெய்ப்பொருளே!, ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும் ஈன்ற, முதற்றாய்!-என்றும் இன்னும் பலபடியாகப் புகழும் சொற்றொடர்களாலும் போற்றப் படுகின்ற நம்மாழ்வார், நம்பெருமாள் ஸ்ரீரங்கநாதப்பெருமானை தாம் அருளிய திருவிருத்தத்தில் ஒரு பாசுரத்திலும், திராவிட வேத ஸாகரம் எனப்படும்திருவாய்மொழியில் ஒரு பதிகத்திலும் துதித்துப் போற்றிப் பரவுகின்றார். முன்னதில் தலைவி தன் நிலையில் உரைப்பதாகவும், பின்னதில் தலைவியின் அன்னை மொழிவதாகவும் அருள்கின்றார்.-இருப்பினும், திருவாய் மொழி ஆயிரம் பாடல்களுமே திருவரங்கனைப்பற்றியதே என்று தனியன் கூறும்-

வான் திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்,
ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும். . . .—.

திருவாய்மொழியில் ஏனைய திவ்விய தேசத்தெம்பெருமான் களைத் துதிப்பதாகவும், பரத்துவ நிர்ணயம் பற்றியதாகவும் பதிகங்கள் அருளியிருப்பினும், அவையாவுமே, முதற்றிருக் கோயிலான திருவரங்கத்திருத்தலத்தருளும் ஸ்ரீரங்கநாதனைக்

குறித்தே அருளிச் செய்தவை என்பது மேற்சொன்ன ஈரடிகளின் முடிவான கருத்து.

209 தண்ணந் துழாய்வளை கொள்வது யாமிழப் போம், நடுவே
வண்ணம் துழாவியோர் வாடை யுலாவும்வள் வாய்அலகால்,
புள்நந் துழாமே பொருநீர்த் திருவரங் கா!அருளாய்!,
எண்ணந் துழாவு மிடத்து, உளவோபண்டும் இன்னன்ன வே?
-திருவிருத்தம்—28

கூர்மையான அலகின் நுனியினூலே, கொக்கு, மற்றும் அதைப்போன்ற நீர்ப்பறவைகள், நத்தையைக் கொத்திக் கிளறாதபடிக்கு, அந்த நத்தைக்குப் பாதுகாப்பாக-, போர் செய்கின்றதாக அலையெழும்புகின்ற காவிரி வெள்ளத்தால் சூழ்ந்து தோன்றும், திருவரங்கத்தில் திருவருள் நல்கும் திருவரங்கநாதனே!, தண்மை மிகுந்த திருத்துழாயானது, கைவளைகளை நழுவச்செய்வது தகுதியுடைத்தே. நாமும் வளை முதலான அணிகலன்களை இழப்பது சரியானதே. இதன் நடுவே தொடர்பின்றிக்கே, முன்பின் அறிந்திராத ஓர் வாடைக் காற்றுனது, என் உடல் வண்ணத்தை, பொலிவை துடைத்துக் கொண்டு, பலமுறையும் உலாவுகின்றது. இதற்கு முன்னர், இப்படியும், அவ்விதமாகவும் இருந்தனவா? என்று மனமும் எண்ணிப்பார்ப்பதாயுள்ளது. -திருவரங்கத்திருமாலே! உள்ள நிலையினைத் தெளிவித்தருள வேணும். 28



210 கங்குலும் பகலும் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளால்
இறைக்கும்,
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும் தாமரைக்கண் என்றே
தளரும்,
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டெ'ன்னும் இருநிலம் கைதுழா
விருக்கும்,
செங்கயல் பாய்நீர்த் திருவரங்கத்தாய் ! இவள்திறத் தென்செய்-
கின்றுயே?

211 என்செய்கின்ருய் என் தாமரைக்கண்ணு? என்னும் கண்ணீர்
மல்க இருக்கும்,
'என்செய்கேன் எறிநீர்த் திருவரங் கத்தாய் ! என்னும்வெவ்
வுயிர்த்துயிர்த் துருகும்,
'முன்செய்தவினையே ! முகப்படாய்' என்னும் 'முகில்வண்ணு!
தகுவதோ? என்னும்,
முன்செய்திவ் வுலகம் உண்டுமிழ்ந் தளந்தாய் ! என்கொலோ
முடிகின்ற திவட்கே?

212 வட்கிலள் இறையும் 'மணிவண்ணு!' என்னும் வானமே
நோக்கும்மையாக்கும்,
'உட்குடையசுரர் உயிரெல்லாம் உண்ட ஒருவனே!' என்னும்
உள்ளுருகும்,
'கட்கிலீ! உன்னைக் காணுமா றருளாய் காகுத்தா! கண்ணனே!'
என்னும்,
திட்கொடி மதிள்சூழ் திருவரங் கத்தாய்! இவள்திறத்தென்செய்
திட்டாயே?

213 இட்டகால் இட்ட கையளாய் இருக்கும் எழுந்துலாய் மயங்கும்
கை கூப்பும்,
'கட்டமே காதல்' என்றுமூர்ச் சிக்கும் 'கடல்வண்ணு! கடியை
காண்' என்றும்,
'வட்டவாய் நேமிவலங்கையா!' என்னும் 'வந்திடாய்' என்றென்றே
மயங்கும்,
சிட்டனே! செழுநீர்த் திருவரங் கத்தாய்! இவள்திறத் தென்சிந்தித்
தாயே.

214 சிந்திக்கும்; திசைக்கும்; தேறும்;கை கூப்பும்; 'திருவரங்கத்
துள்ளாய்'! என்னும்,
வந்திக்கும், ஆங்கே மழைக்கண்ணீர் மல்க 'வந்திடாய்'
என்றென்றே மயங்கும்,
அந்திப்போ தவுணன் உடலிடந்தானே! அலைகடல் கடைந்தஆ
ரமுதே!
சந்தித்துன் சரணம் சார்வதே வலித்த தையலை மையல்செய்
தானே!

215 'மையல்செய் தென்னை மனம்கவர்ந்தானே!' என்னும்; மாமாயனே!
என்னும்,
'செய்யவாய் மணியே' என்னும்; தண்புனல்சூழ் திருவரங்கத்
துள்ளாய்!' என்னும்,
'வெய்யவாள் தண்டு சங்குசக் கரம்வில் ஏந்தும்விண் ணோர்முதல்'
என்னும்,
பைகொள் பாம்பணையாய்! இவள்திறத் தருளாய் பாவியேன்
செயற்பா லதுவே.

216 'பாலதுன் பங்கள் இன்பங்கள் படைத்தாய்! பற்றிலார்
பற்றநின்றானே!
காலசக் கரத்தாய்! கடலிடங்கொண்ட கடல்வண்ணா! கண்ணனே!
என்னும்,
சேல்கொள்தண் புனல்சூழ் திருவரங்கத்தாய்!' என்னும், 'என்
தீர்த்தனே!' என்னும்,
கோலமா மழைக்கண் பனிமல்க இருக்கும் என்னுடைக் கோமளக்
கொழுந்தே.

217 'கொழுந்துவா னவர்கட்கென்னும், 'குன்றேந்திக் கோநிரை
காத்தவன்!' என்னும்,
அழும் தொழும்; ஆவி அனலவெவ் வுயிர்க்கும்; அஞ்சனவண்
ணனே!' என்னும்,
எழுந்துமேல் நோக்கி யிமைப்பிலள் இருக்கும்; 'எங்ஙனே
நோக்குகேன்?' என்னும்,
செழுந்தடம் புனல்சூழ் திருவரங்கத்தாய்! என் செய்கேன்
என்திரு மகட்கே?

218 'என்திரு மகள்சேர் மார்வனே!' என்னும்; 'என்னுடை யாவியே!'
என்னும்,
'நின் திருஎயிற்றால் இடந்துநீ கொண்ட நிலமகள் கேள்வனே!'
என்னும்
'அன்றுரு வேழும் தழுவிநீ கொண்ட ஆய்மகள் அன்பனே!'
என்னும்,
தென்திரு வரங்கம் கோயில் கொண்டானே! தெளிகி லேன்
முடிவிவள்தனக்கே.

219 'முடிவிவள் தனக்கொன் றறிகிலேன்;' என்னும் 'மூவுல காளியே!'
என்னும்,
'கடிகமழ் கொன்றைச் சடையனே' என்னும் 'நான்முகக் கடவுளே!'
என்னும்,
'வடிவுடை வானோர் தலைவனே!' என்னும்; வண்திரு வரங்கனே!'
என்னும்,
அடியடை யாதாள் போலிவள் அணுகி அடைந்தனள்
முகில்வண்ணன் அடியே.

220 முகில்வண்ணன் அடியை அடைந்தருள் சூடி உய்ந்தவன்
மொய்புனல் பொருநல்,
துகில்வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன்வண் பொழில்சூழ் வண்குரு
கூர்ச்சடகோபன்,
முகில்வண்ணன் அடிமேல் சொன்னசொன் மாலை
ஆயிரத்திப்பத்தும் வல்லார்,
முகில்வண்ண வானத் திமையவர் சூழ இருப்பர் பேரின்ப
வெள்ளத்தே.

தலைவியின் தாய், தன் மகளின் நிலையினை, அவள் காதலனும் நாயகனுமான திருவரங்கனுக்கு உணர்த்துவதாக பதிகம் முழுவதும் அருளிச் செய்கிறார்-

210 செந்நிறம் வாய்ந்த மீன்கள் அலைந்து திரியும் காவிரி வெள்ளம் அலையடித்துக் கொண்டிருக்கும் திருவரங்கனே! உன் மீது மையல் கொண்டு உன்னை விட்டுப் பிரிந்து, உன்னைச் சேர்ந்தாலன்றி உயிர் தரியேன் என்றிருக்கும் என் வண்ண மகளின் நிலையைக் கூறுகின்றேன் கேட்பாயாக- இரவும் பகலும் ஒரு நொடிப்பொழுதுகூட கண்ணுறக்கம் கொள்ளாத வளாக இருக்கிருள். உன்னையே நினைந்து உன்றன் பிரிவாற்ரு மையால் இவள் பெருக்கிடும் கண்ணீர் வழிந்தோடுவது என்பதின்றி, ஆற்றுவெள்ளய் மடைதிறந்து பாய்வதற்கொப்பா யிருக்கின்றது அக்கண்ணீர் துடைத்து மாளாது என்று எண்ணிய என்மகள், கைகளால் வாரி வாரி இறைத்துக் கண்ணீரைத் தடுக்க முயற்சிக்கின்ருள். இருப்பினும் கண்ணீர் வெள்ளம் பெருகிக் கொண்டேயிருக்கின்றது. நீ, கைக் கொண்டுள்ள சங்கு-சக்கரம் என்று சொல்லிக்கொண்டேஎழுந்து நின்று கைகூப்பி அஞ்சலி செய்யாநிற்கிருள். உன்தன் கண்களின் எழில் நினைவினல் 'தாமரைக்கண்கள்' என்று சொல்லிய வண்ணம் சோர்வடைகின்றாள். நான், ''என் காதலனும் நாயகனுமான திருவரங்கனை விட்டகன்று எப்படித்தான் உயிர் வாழ்ந்திருப்பனே?'' என்று மனம் நொந்து பேசுகின்ருள். நிலத்தில் உட்கார்ந்து கொண்டே இருகைகளாலும் மண்ணைக் கிளறிக் கொண்டே மயங்கியவளாயிருக்கின்றனள். இவ்வாறு, நினைவு, சொல், செயல் மூன்ருலும் நின்னையே நினைந்து தவித்துக் கொண்டிருக்கும் திருமகளைப் போன்ற என் திருமகளான பராங்குசநாயகி விஷயத்தில் நீ என்ன செய்ய நினைத்திருக்கிருய்? திருவரங்கனே! திருவாய் திறந்து மொழிந்தருள வேணும்.

211 திருவரங்கச் செல்வனே! என் மகள் நிலையை மேலும் கூறுவேன் கேட்டருளவேணும்- ''என்னையுனக்கேயடிமை யாக்கியருளிய செந்தாமரை மலரினையொத்த கண்ணனே! செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களைப் பெற்றுள்ளவனே!

நீ என் பொருட்டு என்ன செய்ய இருக்கின்றாய்? என்று தனக்குத்தானே பேசுகின்றாள். கண்களில் கண்ணீர் பெருகிக் கொண்டு எந்த ஒரு பணியும் செய்ய இயலாதவளாயிருக்கின் றனள். ''காவிரிப்புனல் அலைமோதிக் கொண்டிருக்கும் திருவரங்கநாதனே! நான் என் செய்வேன்?'' என்று பேசு கின்றாள். வெப்பம் மிகுந்த நீண்ட பெருமூச்சு விட்டவளாக ஏங்கிக் கரைகின்றாள். அவள் எத்த ஒரு தீங்கோ அல்லது பாவமோ செய்யாதவளாயிருந்த போதிலும், ''நான் செய்த முந்தைய பாவங்களே! நீங்கள் என் முன்னே வந்து நிற்பீர் களாக. என் நாயகன் திருவரங்கன் எனக்கு அருளினனில்லை. நீங்களாவது என்முன்னே வந்து நில்லுங்கள்'' என்று விளித்துப் பேசுகின்ருள். இவ்வாறு இருப்பவள் மீண்டும் தன் நாதனான உன்னையே நினைந்தவளாய் ''நீலமேகவண்ணு! என்னிடத்தில் நீநடந்து கொள்ளும்முறை உனக்குத்தகுமோ?'' என்று வினவுகின்றாள்.-இதற்குமேல் தாய்தானே நேராகவே பெருமானை விளித்துப் பேசுகின்றாள்.-இந்த ஞாலத்தை ஆதியில் தோற்றுவித்து, பிரமனின் இரவுக்காலத்தில் பிரளயம் ஏற்படுத்தி உலகினையுண்டு பாதுகாத்து, மீண்டும் பிரமனின் பகற்காலத்தில் பழைய நிலையிலேயே உலகினையுமிழ்ந்து படைத்து, திரிவிக்கிரமனாய்த் தோன்றி அவனியை அளந்து கொண்டவனே! உன்னை நினைத்து கரைந்தேங்கும் என்னுடைய மகளைப்பற்றி என்ன முடிவைக் கொண்டுள்ளனையோ? நான் அறிந்துள்ளேனில்லை. தெரிவிப்பாய் தேவ தேவனே!

212 உறுதி வாய்ந்தனவாகவும், கொடிகளால் அலங் கரிக்கப் பட்டிருப்பனவுமான ஏழுமதிள்களால் சூழப்பெற்றுள்ள திருவரங்கமென்னும் திருக்கோயிலில் பள்ளிகொண்டருளும் ஸ்ரீரங்கனே! என் மகளிடத்தில் இப்படி அவள் வருந்துமாறு ஏன் செய்துள்ளனை? 'என்ன' என்று வினவுகின்றனையோ? உரைப்பேன் கேட்பாயாக-என் மகள், தன் செய்கையைக் கண்டு, பிறர் நகைப்பார்களே என்று கூடக்கருதாமல், சிறிதும் நாணமில்லாதவளாய் உன்னை நினைந்து பிதற்றுபவளாயிருக் கின்றனள் 'நீலவண்ண ஒளி வீசும் நீலவண்ணனே!' என்று உன்னைக் கூவியழைக்கின்றாள். வானின் வண்ணமும், உன் நிறமும் ஒன்ருக இருப்பதால் விண்ணை நோக்கி உற்றுப்பார்த்த

வண்ணமிருக்கின்றனள். நீ வாராமற்போகவே மயங்கிக் கிடக்கின்றனள். ஒப்பற்றவனாகவும், ஒருவனாகவுமே இழிந்து கொண்டு, ''தங்களுக்கு அழிவில்லையென்று இறுமாந்து செருக்குடன் சாதுசனங்களை நலிந்து கொண்டிருந்த அசுரர் களின் உயிர்களை மாய்த்தவனே!'' என்று உன்தன் பேராற் றலையும் பெருவீரத்தையும் பேசுகின்றாள். இவ்வளவு சொல்லி உன்னை அழைத்தும் நீ வாராததினால், உள்ளம்,- கரைந்திடும் நீர்ப்பண்டமானாள். கண்களுக்குத் தோற்றமளிக்காதவனே! நான் உன்னைக் காணுமாறு நீயே அருள் புரிந்திடுவாய் அப்பனே! என்கின்ருள். இராமனுய்த் தோன்றி அறநெறியைத் தன் வாழ்வில் அனுசரித்துக் காண்பித்தவனே! யதுகுல திலகனுய்த்தோன்றி அறநெறியை அறியச் செய்தவனே! என்றவாருக உன்தன் அவதார விபவங்களையும் மொழிந்த வண்ணமிருக்கின்றாள்.

213 திருமாமகள் விரும்பியுறையும் ஸ்ரீநாதனே! காவிரி நீரால் செழுமையடைந்துள்ள திருவரங்கத்துறை ஸ்ரீரங்க நாதனே! என் மகளிருக்கும் நிலையினைக் கூறுகின்றேன். செவி சாய்த்தருளி, அவள் பொருட்டு தேவரீர் யாது செய்ய நினைத் துள்ளீர்? என்பதை அறிவித்தருளவேணும். என் மகள், கை-கால் போட்டது போட்டபடியாக அசைவின்றி, இயக்க மின்றி நின்னையே நினைந்து படுத்துக் கிடக்கின்றனள். இவ்வாறு இருக்கின்ருளே என்று நான் எண்ணிக் கொண்டிருக் கும் நிலையிலேயே அடுத்தநொடியில் எழுந்து உலாவத் தொடங்கி, இயலாமையால் மயக்கமுற்று உட்கார்ந்து விடு கின்றாள். உடனேயே தன்னுடைய வலுவின்மையையும், உனக்கு அடிமையாயிருப்பதையும் நினைந்து அஞ்சலி செய் கிருள். நின்னிடம் காதல் கொண்டுள்ளதால் 'தனக்கு அல்லலே' என்று எண்ணியும் சொல்லியும், உணர்விழந்து தன் நிலையை யும் மறந்து விடுகின்ருள். 'கடல் போன்ற நீலவண்ணனே! நீ என்னைத் துன்புறுத்தவே எண்ணங்கொண்டுள்ளனை போலும்!' என்று உன்னை நிந்திக்கின்றனள். உடனேயே வட்ட வடிவ மானதும், கூர்மையானதுமான திருவாழியை வலத்திருக் கரத்தில் கொண்டுள்ளவனே! தாமதியாமல் விரைவிலேயே என்னருகில் வந்து என் கைத்தலம் பற்றி என்னை ஏற்றுக்கொள்

என்று கூவிக்கொண்டும், பலபடியாகப் பிதற்றிக் கொண்டும் இருந்தவள் நீ வாராமையால் மயக்கமுற்று நிலத்தில் விழுகின்றனள்.

214 அசுரர்களின் வலிமை மிகுந்திடும் மாலை நேரத்தில், தனயனை நலிந்திடும் தந்தையான பொன்னாகத்தானின் உரம்பிளந்து, அவன்தன் மகனான பிரகலாதனுக்கருளியவனே! அமரர்கட்கு அமுதம் ஈயவும், தனக்கெனவே அவதரிக்க இருந்த பெண்ணமுதான திருமாமகளைப்பெறவும், அலைகள் ஆர்த்து மோதியெழும் கடல் கடைந்த வள்ளலான ஆரா வமுதமே! உன்னையணுகி உன்தன் திருவடிகளைப் பெறு வதையே பெருநோக்காகக் கொண்டுள்ள என் மகளை உன்பால் மோகம் கொண்டு மயங்கியிருக்குமாறு செய்துள்ளனை. என் மகள் இதற்கு முன்னர் உன்னாலேற்பட்ட நன்மைகளை நினைந்து உருகுகின்றனள். இப்பொழுது உன்னாலுண்டான கொடுமையை-நீ அவளை அணுகாமலிருப்பதே கொடுமை-நினைந்து மனம் திகைப்பவளாயிருக்கிறாள். 'நீ வந்து அருள் செய்வாய்' என்று உறுதியாய் நம்பி ஆறுதலும் அடைகின்றாள். தன் கைகளைக்கூப்பி வணங்குகின்றாள். 'திருவரங்கத்தலத்தில் மன்னியுறைந்து பள்ளி கொண்டிருப்பவனே!' என்று அழைக் கின்றாள். மேலே ஒன்றும் கூறமாட்டாதவளாய் குனிந்து வணக்கம் செய்கின்றாள். மழைபோல் கண்ணீரைப் பெருக்கிய வண்ணம் திருவரங்கா! வந்தருள்வாய் என்று சொல்லிக் கொண்டே பலமின்மையால் களைப்பு மேலிட்டு மயங்கி விடு கின்றாள்.-இப்பாசுரத்தில், தாய் பெருமானின் இருவிபவங் களைப் பேசிப்புகழ்ந்து, பின்னர் தன் மகளின் நிலையை அவனுக்கு உணர்த்துகின்றாள்.-

215 இப்பாசுரத்தில், 'தன் மகளுக்குத் திருவரங்கன் திருவருள் புரியாததற்குத் தான் செய்துள்ள தீவினைதான் காரணமாயுள்ளது' என்று மொழிகின்றாள் அன்னை-

விரிந்து அகன்ற படங்களைக் கொண்டுள்ள அரவரசான ஆதிசேடன் மீது பள்ளி கொண்டுள்ள பரமனே! என் மகள் கூறு வதைக் கேட்பாயாக- 'உன்னிடத்தில் காதல் வளருமான

வாய்ப்பினையளித்து, அதனால் உன்னிடம் மனதைப் பறிகொடுந்து ஈடுபட்ட என்னை உள்ளத்துடன் கொள்ளை கொண்டவனே!' என்று பேசுகின்றாள். 'பிறர்க்கரிதான மாயச் செயல்களை அனாயாசமாகச் செய்யும் பேராற்றல் மிகுந்த மாமாயனே!' என்று கூவுகின்றாள். 'பவளம் போல் சிவந்தும் வனப்பு மிகுந்துள்ளதுமான திருவாயையுடைய நீல இரத்தி னமே!, என்று அழைக்கின்றாள். 'தண்ணெனும் காவிரியால் சூழப்பெற்ற திருவரங்கத்தை உறைவிடமாய்க் கொண்டுள்ள வனே!' என்று போற்றுகின்றாள். 'வெப்பம் மிகுந்ததான வாளும், தண்டமும், திருவாழி. திருச்சங்கு, திருச்சார்ங்கம் என்னும ஐம்படைகளையுடையவனாய், பரமபதவாசிகளான நித்தியசூரிகளின் நாதனாயிருப்பவனே!' என்றும் புகழ்ந்து துதிக்கின்றாள். இவ்வளவிருந்தும், நீ என் மகளை அணுகி வந்து பரிந்தருளினயில்லை நான் செய்துள்ள தீச்செயல்களின் பொருட்டே என் மகள் இத்தனை இன்னலுற நேர்ந்துள்ளது.

216 எனது அன்புக்குப்பாத்திரமானவளும், மிகுந்த மென்மையான தளிர்போன்ற, வனப்பு மிகுந்த உடம்பைப் பெற்றுள்ளவளுமான என் மகள் உன்னை விளித்து அழைத்துப் போற்றும் வகைகளைச் சொல்கிறேன் கேட்டருள்வாய் திருவரங்கனே! அநதந்த இடங்களுக்கு ஏற்றவாறு இன்ப-துன்பங்களை நுகர்வித்தருள்பவனே! புகலிலார்க்குப்புகலளித்த ருளும் புண்ணியனே! அல்லது உலகப்பற்றை விடுத்தவர்கள் பற்றுக்கு இலக்கானவனே! முக்காலங்களுக்கும் மூலகாரண மானவனே! திருநேமியைக்கைக்கொண்டுள்ளவனே! திருப்பாற் கடலை, பள்ளிகொள்வதற்கேற்ற இடமாக்கிக் கொண்ட இறைவனே! கடல்நிற வண்ணனே! திருவாய்ப்பாடியில் நந்தன்-யசோதை குலமதலையாய் வளர்த்த கண்ணனே!- இவ்வாறாக உன்னுடைய உயர் குணங்களை முறைப்படுத்தி மொழிகின்றாள். மீன்கள் துள்ளித்திரியும் தட்பமுள்ள காவிரி வெள்ளத்தால் சூழ்ந்துள்ள திருவரங்கத்தரசே! என்றவாறாக உன்திருநாமத்தைச் சொல்லுகின்றாள். இவ்வளவு, தான் அழைத்த பின்பும் நீ வந்தருள்செய்து அழைத்துச் சென்றா யில்லையே என்று தன்னுடைய அழகார்ந்த, அகன்று மலர்ந்த கண்களில் கண்ணீரை. மழைநீர்போல் பெருக்கிக் கொண்டே

ஒன்றும் செய்ய இயலாதவளாய் அசையாமல் நிலேத்து நின்றிருக்கின்றாள்.

217 திருவைகுந்தத்தில் நித்திய சூரிகளால், மிகுந்த பக்தி ஆர்வத்துடன் ஆராதிக்கப்பெறுபவனே!'' என்று என் மகள் உன்னைக்கூவி அழைக்கின்றாள். மேலும் இந்நிலவுலகிலுள்ள மக்களின் துன்பங்களேக் கண்டு பொறாதவனாகி, கோவர்த்தன மலேயைக் கையிலேந்தி நின்று கறவை கன்றுகளின் கூட்டத் தைக் காத்தருளினவனே! என்று கூவுகின்றாள். நின்தன் வரவு காணாமையால் அழுது புலம்புகின்றாள். அழுதவாறே வணங்கி னால் பலன் பெறுவோம் என்று எண்ணியவளாய் விழுந்து வணங்குகின்றாள். அப்படியும் அவள் விருப்பம் ஈடேருமற் போகவே தன்னுடைய ஆத்மாவே நெருப்பாக எரியுமாறு வெப்பம் மிகுந்த பெருமூச்சு விடுகின்றாள். அடுத்த கணமே வெப்பம் தணிப்பான் பொருட்டு மைவண்ணத்த குளிர்ந்த திருமேனியனே! என்று பேசுகின்றனள். நீ வருவதாகவே நினைந்தவளாய் மரியாதையுடன் எழுந்திருந்து நீ வரும் வழியைப் பார்த்தல் வேண்டி வான்மீது கண்களேப்பதித்து இமைகளே இமைக்காமல் அசைதலின்றி நின்றிருக்கின்றனள். இந்நிலேயில் அவளுக்குக் கண்கள் இருண்டு விடவே நான் எவ் வண்ணம் என் நாயகனே நோக்குவேன்? என்றியம்புகின்றாள். இந்நிலேயில், காவிரி நீர்ப்பெருக்கால் செழுமை படைத்துள்ள திருவரங்கத்துறை திருவரங்கனே! திருமகள் போன்ற என் மகளின் விருப்பத்தை நிறைவு செய்யக்கூடியது யாது? என்று எனக்கருள்வாய் அப்பனே!

218 என்மகள், ''நான் போற்றித்தொழுதேத்தும் பெரிய பிராட்டியாரான திருமாமகளேத் தன் திருமார்பில் கொண்டிருப் பவனே!'' என்று உன்னே விளிக்கின்றாள். ''உன்னேயே நினேந்து உயிர் வாழ்ந்திருக்குமாறு செய்துள்ளவனே!'' என்று செப்புகின்றாள். ''ஆதிவராகமாய்த் தோன்றி நீரில் மூழ்கி யிருந்த இம்மண்ணுலகை, அண்டபித்தியினின்றும் நின்தன் அழகிய கோட்டினல் பெயர்த்தெடுத்து வந்து நிலேநிறுத்திய நிமலனே!'' என்று பேசுகின்றாள். ''நிலமடந்தையான பூமிப் பிராட்டிக்கு இணேயான நாதனே!'' என்றியம்புகின்றாள்.

''கண்ணனுய் வந்துற்ற காலேயில் நப்பின்னே நாயகியைக் காதலித்து, அவளே அடைதற்பொருட்டு இடிபோன்று முழக்க மிட்டுக் கொண்டே நின்னே எதிர்த்து வந்த ஏழு எருதுகளேயும், சின்னஞ்சிருர்கள் விளேயாடுவதைப் போன்று பிரயாசையேது மின்றிக்கே எதிர்ந்து வீழ்த்தி, நீளாதேவியெனும் நப்பின்னே நாயகியின் பேரன்புக்குப் பாத்திரமானவனே!'' என்று உன்னே அழைக்கின்றாள். உன்னுடைய, ஸ்ரீதேவி, பூமிதேவி, நீளா தேவியென்னும் மூன்று பட்டத்தரசிகளுடன் சேர்ந்தவனுய் உன்னேக்கூவியழைத்தால், அவர்கள் பரிந்துரைப்பர். அப்பரிந் துரைக்குப் பின்னராவது நீ நெருங்கி வந்து நேசமுடன் தன் கைப்பிடித்து அழைத்துச்செல்வாய் என்று உறுதியுடன் உரைக் கின்றாள். தென்திசைக்குத் திலகமென விளங்கும் திருவரங்கத் தில் நிலேயாகக் கோயில் கொண்டிருக்கும் திருவரங்கப் பெருமானே! என் மகளின் முடிவு என்னவாகுமோ? யானறிந் தேனல்லேன். உன்னையடைந்து தன் உள்ளமுள்குளிர மகிழ்வளோ! அன்றி காலமெல்லாம் இவ்வண்ணமாகவே உன் பெயரைப் பலபடியாகப் பேசியே உடலும், உள்ளமும். உயிரும் கரைந்தேங்கியிருப்பளோ? அறிந்தேனில்லே. என் மகள் மீது இரக்கங்கொண்டு அருள்புரிவாய்! அரங்கத்தண்ணலே!

219 என்மகளான இவ்வெழில் நங்கை, ''என் காதலனே விட்டுப்பிரிந்து துயருற்றிருக்கும் நான், எனக்கோ அல்லது எனது துன்பத்திற்கோ முடிவுகாணும் வழியைக்கண்டு அறிந் தேனில்லை'' என்று அறிவிக்கின்ருள். ''மூவுலகுக்கும் நாதனே! எனக்கருள்வாய், இந்திரன் என்ன, மணங்கமழும் கொன்றை மாலேயைச் சடைமுடியிலணிந்து தோன்றும் சிவபிரான் என்ன, நான்முகன் என்ன-ஆகியோரின் உள்ளத் துறையும் உத்தமனுயிருந்து அவர்களே வழி நடத்திச் செல்ப வனே!- அதாவது அனேத்து தேவர்கட்கும் உயர்வற உயர்ந்து உயர்தனித் தலேவனுயிருப்பவனே!-'' என்று மொழிகின்றாள். ''நின்னேப்போன்ற வடிவம் பெற்றுள்ளவர்களான, பரமபத வாசிகளான நித்திய சூரிகளின் நாதனே!'' என்று நவில் கின்றாள். ''எனக்கு அருள் நல்கிடும் திருவரங்கன்'' என்று புகல்கின்ருள். இவ்வாறு, ''தன்னுடைய காதலனை திருவரங் கனின் தாமரைத் தாளிணைகளேப் பெற்றுய்யும் பேறு பெறமாட்

டேனே?'' என்று பேசிக்கொண்டிருந்த என் கோதை, தன் நாயகனை நீலமேகவண்ணனையணுகிச் சென்று அவனுடைய திருவடிகளைச் சேர்ந்தவளானுள்.- இது எனக்கு வாய்த்த நல்வாய்ப்பே-திருமாமகள் நாதன் திருவருள் பெறும் பொருட்டு அவனை அழைத்து இறைஞ்சி வேண்டிக் கொண்டிருந்த ஆழ்வார், தாம் அவன் திருவடிகளை அடைந்து பேரானந்த மெய்தியதாகப் பேசுகின்றார்.-

220 பெருவெள்ளம் கொண்டுள்ளதான, வெண்மை வண்ணத்த ஆடைபோல் தெளிந்த நீரையுடைய தாமிரபரணி நதிக்கரையில் அமைந்துள்ள, வளம் மிகுந்த சோலைகளால் சூழப்பெற்றுள்ளதும், உதாரகுணம் படைத்துள்ளவர் வாழ்ந்து வருவதுமான திருக்குருகூர் நகரில் அவதரித்த ஆழ்வார் சடகோபன், நீலமேகமேனியனுன திருவரங்கனின் திருவடிகளைப் பெற்று, அவனது திருவருளையே தலைதனில் ஏற்றுப் பிறவிப் பயன் பெற்றவர். அவர், முகிலொத்த திருவுடம்பைப் பெற்றுள் ளவனுன திருவரங்கன் திருவடிகளைப் போற்றி, தீந்தமிழ்ச் சொற்களைக்கொண்டு ஆயிரம்பாசுரங்கள் புனைந்தருளியுள்ளார். அவ்வாயிரம் பாசுரங்களில் அடங்கியுள்ள இவ்வீரைந்து பாடல்களையும் ஓதியுரைப்பவர்கள் கலங்காப் பெருநகரமான, மேகநிறத்தையொத்து விளங்கும் பரமபதத்தில் நித்திய சூரி களின் குழாங்களுடன் சேர்ந்திருந்து பேரின்ப வெள்ளத்தில் மன்னியிருப்பவராவர்.



வானப்பிரான் மணிவண்ணன் கண்ணனின் கழலிணை
பணிவோம்.



''பொருள் மிகுத்த மறை விளங்கப் புவியோருய்ய பொய்கைதனில் வந்துதித்த புனிதா!'' என்று பிரபந்தசாரம் போற்றும் பொய்கையாழ்வார் தாம் புனைந்தருளிய முதற்றிரு வந்தாதியில், ஓர் பாசுரத்தில் திருவரங்கனைப்பரவி ஏத்து கின்றார். இம்மாமுனிவர் அருளிய முதல் திருவந்தாதியை, ''திருவிளக்காமென வையந்த களிநூறு'' என்று நம் ஆசார்யன்

புகழ்ந்து மொழிவார். இவ்வாழ்வாரை ''கவிஞர் போரேறு என்று'' தனியன் போற்றியுரைக்கும் இவர் பிரபந்தத்தை ''அருந்தமிழ் நூற்றந்தாதி'' என்று பேசும்.

221 பெருமானிடம் பக்தி கொண்டிராத மனிதர்களே! தண்மை பொருந்திய நீர்வண்ணத் திருமேனியனை எம்பெருமானை, நான் எந்த ஒரு நாளிலும் மறந்திருந்தேன் என்பதில்லை. இன்று அவ்வெம்பெருமானை மறந்து வாழ்வனோ? ஏனெனில் நான் கருவில் இருந்த காலத்திலேயே சிறந்தஞானம் பெற்றிருந்ததால், பெருமானின் தேசுமிகுத்திருமேனியைக் கண்டுகளிப் பெய்தி கைகூப்பி வணங்கினேன். மேலும் எம்பெருமான் திருவரங்கன் அரவணையிற் பள்ளி கொண்டருள் நல்கும் திருவரங்கத்தையும் கண்டு அத்திசை நோக்கி அஞ்சலி செய்தேன் —முதற்றிருவந்தாதி-6

முதலாழ்வார்கள் மூவரில் நடுவரான பூதத்தாழ்வாரை ''கடன் மல்லைப்பூதத்தார்.'' என்று இம்மகாமுனியருளிய பிரபந்தத்தனியன் புகழ்ந்து புகலும். சுவாமி தேசிகன், இவ்வாழ்வாரை, ''கடன் மல்லைக் காவலனே! பூதவேந்தே!'' என்றும், இவர் அருள் மொழியை ''நந்தா ஞானச்சுடர் விளக்கேற்றிய அன்பே தகளியான தொடைநூறு'' எனவும் புகழ்ந்து மொழிவார். இம்மகான் திருவரங்கச் செல்வனாரைப் போற்றி ஈரிரண்டு பாசுரங்கள் அருளியுள்ளார்,-

222 நான், துதித்துப் போற்றி ஏத்தி வழிபடும் எம்பெருமான், -ஸ்ரீமந்நாராயணன்-என்மனத்தே மன்னியிருக்கின்றான். அவன் கடல்வண்ணத்திருமேனியன். திருவேங்கடமலையில் நின்றருள்பவன், நினைத்தற்கரியதான பெருமையும் மேன்மையும் மிகுந்த நீண்டு பெரியதான திருவரங்கத்தில் அருள்கின்றான், தேவர்க்கெல்லாம் தேவன்-என்றிவ்வாறாக பலபடியாகவும் பலராலும் போற்றப்படுவன் அவ்வெம்பெருமானே, கிருஷ்ணவதாரத்தில், பெரிய குதிரையுருவில் தன்னை நலிய வந்த கேசியென்னும் அரக்கனின் வாயைப் பிளந்தழித்த மைந்தனாவான். -இரண்டாம் திருவந்தாதி-28

223 நீலமணிவண்ணத் திருமேனியனும், வள்ளற்றன்மை யுடைய அகன்ற திருக்கையைப் பெற்றிருப்பவனுமானதிருமால் காலங்காலமாக, திருவரங்கம், திருக்கோட்டியூர், திருவேங்கட மாமலை சோலையால் அணிபெற்றுத்திகழும், திருமாலிருஞ் சோலை, பொலிவார்ந்த திருநீர்மலை-ஆகிய திருத்தலங்களில் நிலைத்திருந்து அடியவர்கட்கு அருள் நல்குகின்ருள்.-எம் பெருமான், தன்னடியார்கள் உய்வடையும் பொருட்டு அருச்சை யுருவில், இவ்விதமாகப் பற்பல திவ்வியத்தலங்களில் தோன்றி அருள்கின்றான் என்பது கருத்து-. -இ.தி.-46

224 கணை ஏவுவதில் ஆற்றல்மிகுந்தவனான என்னப்பன் திருமாலவன், தன்னடியார்களின் இதயத்திலும், தஞ்சையின் கணுள்ள மாமணிக்கோயிலிலும்,-வைணவத்தின்-, முதன்மை வாய்ந்த திருத்தலமான திருவரங்கத்திலும், திருத்தண்கால் திவ்வியத்தலத்திலும், பக்தர் மனத்தால் சிந்தனை பண்ணும் தண்மை மிகுந்த திருவேங்கடமாமலை, திருக்கடன்மல்லை, திருக்கோவலூர், மதிள் சூழ்ந்து விளங்கும் திருக்குடந்தை ஆகிய புனிதத்தலங்களிலும் இருந்து அருள் செய்கின்ருன்.- -இ.தி. 70

225 வனப்பு மிகுந்த திருவரங்கத்தில் மன்னியிருந்தருளும் என்னப்பன் ஸ்ரீரங்கநாதப் பெருமானுடைய, நிலைத்ததான நல்வழியிலே சென்றவர்க்கன்றி,- தீமையற்றதான நன்னெறி யைக் கடைப்பிடித்தொழுகுவோர்க்கன்றி-, மற்றவர்க்கு, அசை யாததான கொடுமைகளும் துன்பங்களுமே நிறைந்துள்ள, நரகங்களை அகற்றி, அவர்கள் சென்றடைவதற்குள்ளாகவே பரமபதவாசிகளான நித்தியசூரிகள் வாழும்,-ஏழு-சுற்றுக்களைக் கொண்டுள்ள திருவைகுந்த நாட்டின் நுழைவாயிலின் கதவுகள் அசைந்து, அவர்கள் உள்ளே நுழைய இயலாமல் மூடிக்கொள் வனவாகும். இதை இனித்தெரிந்து கொண்டவனாயுள்ளேன்.- பெருமானிடம் உண்மையான பக்தியும் பேரன்புங்கெண்டு, உண்மையுள்ளதாயும், தீமையற்றதுமான நன்னெறியில் நிற்பவர்களே, கலங்காப்பெருநகரமென்னும் பேரின்ப வீட்டில் நுழைந்து பேரின்பம்பெறும் வாய்ப்பினைப் பெறுவர் என்பது கருத்து. இ.தி. 88

மாமயிலே வந்துதித்த பேயாழ்வார் திருவரங்கப்பெருமாளே தாம் இயற்றியருளிய மூன்ருந்திருவந்தாதியில் இரண்டு பாசுரங்களில் போற்றுகின்றார். ''......சேமமுடன் நெடுமாலேக் காணப்புக்குத் திருக்கண்டேனென உரைத்த தேவே!.......'' என்று நம் தூப்புல்பிள்ளே புகழ்ந்துரைப்பர்தாம் அருளிய பிரபந்த சாரத்தில்.

226 மிக-மிகத்தொன்மை காலந்தொட்டே, திருவேங்கட மாமலேயையும், பாற்கடலேயும், கோயிலென்னும் திருவரங்கத் திருப்பதியையும், திருவைகுந்தமெனவே எண்ணங்கொண்டு, மேற்சொன்ன தலங்களிலும் நிலேத்திருந்தருள் நல்கும் நம் பெருமானுக்கு, வண்டுகள் அலேந்து திரிகின்றதான சோலே களிலுள்ள பூக்களால் மணம் வீசப்பெறுகின்ற, கடிகாசலமும், திருவிண்ணகரமும், எப்பொழுதும் இளமையுடனே காட்சி நல்கும் நம்சுவாமி உறைந்தருளும் திருக்கோயில்களாகின்றன.
மூன்ருந்திருவந்தாதி-61

227 மண்ணவர்க்கும், விண்ணவர்க்கும், ஒத்தார் மிக்காரு மிலாத நாயகனும் சுவாமியுமானவனும், தன் உள்ளங்கையிலே மாவலியிடம் சென்று ஈகைநீர் பெற்றவனுமான எம்பெரு மானின்-நாராயணனின்-, எளிமை தோன்றுமிடங்கள்-திரு விண்ணகரம், திருவெஃகா, அலேவீசும் அருவிகளேக்கொண்டுள்ள திருவேங்கடத்திருமலே, திருவேளுக்கை, திருக்குடந்தை, தேன் நிரம்பிய சோலேகளே உடைய திருவரங்கம் மற்றும் எழிலார்ந்த திருக்கோட்டியூர்-ஆகிய திருத்தலங்களாம். -மூ.தி.62

காவேரீ வர்ததாம் காலே காலே வர்ஷது வாஸவ:!
ஸ்ரீரங்கநாதோ ஜயது ஸ்ரீரங்கஸ்ரீச்ச வர்ததாம்!!



ஸ்ரீரங்ம மங்கள நிதிம் கருண நிவாஸம்
ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராலேய காளமேகம்!
ஸ்ரீ ஹஸ்தி சைல சிரஸோஜ்வல பாரிஜாதம்
ஸ்ரீ ஸங்நமாமி சிரஸா யதிசைல தீபம்!!



திருவரங்க நாச்சியார், திருவரங்கப்பெருமான்
திருவடிகளே சரணம்,



ஸ்ரீ :

இன்னமுதத்திருமகள் இணையடி சரணம்.
கோலத்திருமாமகள் கேள்வன் கோவிந்தன்
குரைகழல் சரணம்

## பதினெண்ணூறு திருப்பதியுறை தாயார்-பெருமாள் திருநாமங்கள்.

| | திருப்பதியின் பெயர் | தாயார்-பெருமாள் பெயர் |
|---|---|---|
| | சோழநாட்டுத்திருப்பதிகள்-40 | |
| 1 | ஸ்ரீரங்கம் (திருவரங்கம்) | திருவரங்கநாயகி-திருவரங்கன் ஸ்ரீ ரங்கநாதன்-நம்பெருமாள் |
| 2 | உறையூர் (கோழி) | வாஸலக்ஷ்மி அழகியமணவாளன்! |
| 3 | தஞ்சை மாமணிக்கோவில் | செங்கமலவல்லி-நீலமேகப்பெருமான்! |
| 4 | அன்பில் | அழகியவல்லி-வடிவழகியநம்பி! |
| 5 | கரம்பனூர் (உத்தமர் கோவில்) | பூர்வாதேவி-புருஷோத்தமன்! |
| 6 | திருவெள்ளறை | பங்கயச்செல்வி-புண்டரீகாக்ஷன்! |
| 7 | புள்ளம்பூதங்குடி | பொற்றாமரையாள்-வல்வில்லிராமன்! |
| 8 | திருப்பேர்நகர் (கோயிலடி) | இந்திராதேவி-அப்பக்குடத்தான்! |
| 9 | ஆதனூர் | ஸ்ரீரங்கநாயகி-ஆண்டளக்கும் ஐயன்! |
| 10 | திருவழுந்தூர் (தேரழுந்தூர்) | செங்கமலவல்லி-ஆமருவியப்பன்! |
| 11 | சிறுபுலியூர் | திருமாமகள் நாச்சியார்-அருமாகடலமுது! |
| 12 | திருச்சேறை | ஸாரநாயகி-ஸாரநாதன்! |
| 13 | தலைச்சங்க நாண்மதியம் | தலைச்சங்கநாச்சியார்-வெண்சுடர்ப்பெருமான்! |
| 14 | திருக்குடந்தை | கோமளவல்லி-ஆராவமுதுதன் |

| | | |
|---|---|---|
| 15 | கண்டியூர் | கமலவல்லிநாச்சியார்-ஹரசாபஹரன் |
| 16 | திருவிண்ணகர் | பூமிநாச்சியார்-ஒப்பிலியப்பன் |
| 17 | திருக்கண்ணபுரம் | கண்ணபுரநாயகி-சௌரிராஜன் |
| 18 | திருவாலி (திருநகரி) | அமிருதகடவல்லி-வயலாலிமணவாளன் |
| 19 | திருநாகை | ஸௌந்தர்யவல்லி-ஸௌந்தர்யராஜன் |
| 20 | திருநறையூர் | நம்பிக்கைநாச்சியார்-நறையூர் நம்பி |
| 21 | நந்திபுரவிண்ணகரம் | செண்பகவல்லி-விண்ணகரப்பெருமாள் நாதன்! |
| 22 | இந்தளூர் | புண்டரீகவல்லி-மருவினிய மைந்தன் |
| 23 | திருச்சித்திரகூடம் (சிதம்பரம்) | புண்டரீகவல்லி-கோவிந்தராஜன் |
| 24 | காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி) | மட்டவிழுங்குழலி-தாடாளன் |
| 25 | கூடலூர் | பத்மாஸனவல்லி-வையங்காத்தபெருமாள் |
| 26 | திருக்கண்ணங்குடி | அரவிந்தவல்லிநாச்சியார்-சியாமளமேனிப்பெருமாள் |
| 27 | திருக்கண்ணமங்கை | அபிஷேகவல்லித்தாயார்-பக்தவத்ஸலப்பெருமாள் |
| 28 | கவித்தலம் | பொற்றாமரையாள்-கஜேந்திரவரதன் |
| 29 | திருவெள்ளியங்குடி | மரகதவல்லி நாச்சியார்-கோலவல்விலிராமன்! |
| 30 | மணிமாடக்கோவில் (நாங்கூர்-1) | புண்டரீகவல்லி-நந்தாவிளக்குப்பெருமாள் |
| 31 | வைகுந்தவிண்ணகரம் (நாங்கூர்-2) | வைகுந்தவல்லி-வைகுந்தநாதன் |
| 32 | அரிமேய விண்ணகரம் [நாங்கூர்-3] | அமிருதகடவல்லி-குடமாடு கூத்தன் |
| 33 | திருத்தேவனார்தொகை [நாங்கூர்-4] | கடல்மகள் நாச்சியார்-தெய்வநாயகப்பெருமாள் |
| 34 | வண்புருடோத்தமம் [நாங்கூர்-5] | புருஷோத்தமநாயகி-புருஷோத்தமன் |
| 35 | செம்பொன்செய் கோயில் [நாங்கூர்-6] | அல்லிமாமலர்நாச்சியார்-பேரருளாளன் |
| 36 | திருத்தெற்றியம்பலம் [நாங்கூர்-7] | செங்கமலவல்லி-செங்கண்மால் |
| 37 | திருமணிக்கூடம் [நாங்கூர்-8] | திருமாமகள் நாச்சியார்-மணிக்கூடநாயகன் |

| | | |
|---|---|---|
| 38 | காவளம்பாடி [நாங்கூர்-9] | மடவரல்மங்கை-கோபாலகிருஷ்ணன் |
| 39 | திருவெள்ளக்குளம் [நாங்கூர்-10] | பூவார்திருமாமகள்-கண்ணன்நாராயணன் |
| 40 | பார்த்தன்பள்ளி [நாங்கூர்-11] | தாமரைநாயகி-தாமரையாள் கேள்வன் |
| | **நடு நாட்டுத்திருப்பதிகள்-2** | |
| 41 | திருவகீந்திரபுரம் [திருவயிந்தை] | ஹேமாம்புஜநாயகி,செங்கமலத்தாயார்-தெய்வநாயகன் அடியவர்க்கு மெய்யன்-தாஸஸத்யன் மூவராகிய ஒருவன்-அச்சுதன் |
| 42 | திருக்கோவலூர் | பூங்கோவல்நாச்சியார்-திரிவிக்கிரமன் தேகளீசப்பெருமாள்-ஆயனுர் |
| | **தொண்டை நாட்டுத்திருப்பதிகள்-22** | |
| 43 | திருக்கச்சி-அத்திகிரி | பெருந்தேவித்தாயார்-தேவாதிராஜன் |
| 44 | அட்டபுயகரம் | பத்மாஸனி-ஆதிகேசவப்பெருமாள் |
| 45 | திருத்தண்கா [தூப்புல் ஸ்ரீஸ்வாமி தேசிகன் அவதாரத்தலம்] | மரகதவல்லி-விளக்கொளிப்பெருமாள் |
| 46 | திருவேளுக்கை | வேளுக்கைவல்லி-அழகியசிங்கர் |
| 47 | திருநீரகம் | நிலமங்கைவல்லி-ஜகதீச்வரர் |
| 48 | திருப்பாடகம் | [உருக்குமிணி உருப்பிணி]-ஸத்யபாமா-பாண்டவதூதன் |
| 49 | திருநிலாத்திங்கள் துண்டம் | நேரொருவரில்லாவல்லி சந்திரசூடப்பெருமாள் |
| 50 | திருஊரகம் | அமுதவல்லிநாச்சியார்-உலகளந்தபெருமாள் |
| 51 | திருவெஃகா | கோமளவல்லிநாச்சியார்-யதோக்தகாரி |
| 52 | திருக்காரகம் | ரமாமணிநாச்சியார்-கருணாகரப்பெருமாள் |
| 53 | திருக்கார்வானம் | தாமரையாள்-கள்வா |
| 54 | திருக்கள்வனூர் | அஞ்சிலைவல்லிநாச்சியார்-ஆதிவராஹப்பெருமாள்! |

| | | |
|---|---|---|
| 55 | திருப்பவளவண்ணம் | பவளவல்லி-பவளவண்ணன் |
| 56 | திருப்பரமேச்சுரவிண்ணகரம் | வைகுந்தவல்லி-பரமபதநாதன் |
| 57 | திருப்புட்குழி | மரகதவல்லித்தாயார்-விஜயராகவப்பெருமாள் |
| 58 | திருநின்றவூர் (தின்னனூர்) | ஸுதாவல்லி-பத்தராவிப்பெருமாள் |
| 59 | திருஎவ்வுள் (திருவள்ளூர்) | கனகவல்லி-வீரராகவப்பெருமாள் |
| 60 | திருவல்லிக்கேணி | வேதவல்லி-வேங்கடகிருஷ்ணன் |
| 61 | திருநீர்மலை | அணிமாமலர்மங்கை நீர்வண்ணன் |
| 62 | திருஇடவெந்தை | கோமளவல்லிநாச்சியார்-லக்ஷ்மிவராஹப்பெருமாள் |
| 63 | திருக்கடன்மல்லை (மஹாபலிபுரம்) | நிலமங்கைத்தாயார்-தலசயனப்பெருமாள் |
| 64 | திருக்கடிகை | அமிருதவல்லி-யோகநரஸிம்ஹப்பெருமாள் |

## வட நாட்டுத்திருப்பதிகள்-11

| | | |
|---|---|---|
| 65 | திருவயோத்தி | ஸீதாபிராட்டி-சக்கரவர்த்தித்திருமகன் |
| 66 | திருநைமிசரணியம் | ஸ்ரீ ஹரிலக்ஷ்மி-தேவராஜன் |
| 67 | திருப்பிரிதி (ஜோஷிமட்-நந்தபிரயாக்) | பரிமளவல்லிநாச்சியார்-பரமபுருஷன் |
| 68 | திருக்கண்டமென்னுங்கடி நகர் (தேவபிரயாகை) | புண்டரீகவல்லி-நீலமேகப்பெருமாள் |
| 69 | திருவதரியாச்சிரமம் (பத்ரிநாத்) | அரவிந்தவல்லி-பதரிநாராயணன் |
| 70 | திருச்சாளக்கிராமம் | ஸ்ரீதேவிநாச்சியார்-ஸ்ரீமூர்த்தி |
| 71 | திருவடமதுரை (பிருந்தாவனம்-கோவர்த்தனம் அடங்கியது) | ஸத்தியபாமைநாச்சியார்-கோவர்த்தன நேசன் |
| 72 | திருவாய்ப்பாடி (கோகுலம்) | உருக்குமிணி-ஸத்தியபாமை-நவமோகனகிருஷ்ணன் |
| 73 | திருதுவாரகை | கலியாணநாச்சியார்-கலியாணநாராயணன் |
| 74 | திருச்சிங்கவேள் குன்றம் | அமிருதவல்லி-லக்ஷ்மிநிருஸிம்ஹன் |
| 75 | திருவேங்கடம் (திருமலை) | அலர்மேல்மங்கை-ஸ்ரீநிவாஸன் திருமலைவாழிறைவன் திருமலையப்பன் |

| | | |
|---|---|---|
| | **மலைநாட்டுத் திருப்பதிகள்-13** | |
| 76 | திருநாவாய் | மலர்மங்கை நாச்சியார் - நாவாய் முகுந்தன் |
| 77 | திருவித்துவக்கோடு | பத்மபாணி நாச்சியார்-உய்யவந்தபெருமாள் |
| 78 | திருக்காட்கரை | பெருஞ்செல்வநாயகி-காட்கரையப்பன் |
| 79 | திருமூழிக்களம் | மதுரவேணிநாச்சியார் ஸ்ரீஸூக்தி நாதப்பெருமாள் |
| 80 | திருவல்லவாழ் | செல்வத்திருக்கொழுந்து நாச்சியார் திருவாழ்மார்பன் |
| 81 | திருக்கடித்தானம் | கற்பகவல்லி-அற்புதநாராயணன் |
| 82 | திருச்செங்குன்றூர் | செங்கமலவல்லி-இமையவரப்பன் |
| 83 | திருப்புலியூர் | பொற்கொடி நாச்சியார் - மாயப்பிரான் |
| 84 | திருவாறன்விளை | பத்மாஸனி நாச்சியார் - திருக்குறளப்பன் |
| 85 | திருவண்வண்டூர் | கமலவல்லி நாச்சியார் - பாம்பணையப்பன் |
| 86 | திருவனந்தபுரம் | ஸ்ரீஹரிலக்ஷ்மி - அனந்தபத்மநாபன் |
| 87 | திருவாட்டாறு | மரகதவல்லி நாச்சியார் - ஆதிகேசவப்பெருமாள் |
| 88 | திருவண்பரிசாரம் | கமலவல்லி நாச்சியார் - திருவாழ்மார்பன் |
| | **பாண்டி நாட்டுத் திருப்பதிகள்-18** | |
| 89 | திருக்குறுங்குடி | குறுங்குடி நாச்சியார் - நின்றநம்பியே |
| 90 | திருச்சிரீவரமங்கை (வானமாமலை) | சிரீவரமங்கைத்தாயார் - தெய்வநாயகன் |
| 91 | திருவைகுண்டம் (ஆழ்வார் நவதிருப்பதிகள்-1) | வைகுந்தவல்லி - ஸ்ரீவைகுந்தநாதன் |
| 92 | திருவரகுணமங்கை (ஆ.ந.தி. 2) | வரகுணமங்கை - விஜயாஸனப் பெருமாள் |
| 93 | திருப்புளிங்குடி (ஆ. ந. 3) | பூமகள் நாச்சியார் - காய்சினவேந்தன் |

94 திருத்தொலைவில்லிமங்கலம்
[ஆ.ந.தி. 4, 5 இரட்டைத்திருப்பதி
95 திருக்குளந்தை [ஆ.ந.தி-6]
96 திருக்கோளூர் [ஆ.ந.தி-6]
97 திருப்பேரை [ஆ.ந.தி-8]
98 திருக்குருகூர்-ஆழ்வார் திருநகரி [ஆ.ந.தி-9]
99 திருவில்லிபுத்தூர் [ஸ்ரீவில்லிபுத்தூர்]
100 திருத்தண்கால்
101 திருக்கூடல்
102 திருமாலிருஞ்சோலை (அழகர்கோவில்)
103 திருமோகூர்
104 திருக்கோட்டியூர்
105 திருப்புல்லாணி (தர்ப்பசயனம்)
106 திருமெய்யம்
107 திருப்பாற்கடல் (வியூகம்)
108 திருப்பரமபதம் (ஸ்ரீவைகுண்டம்,
தெளிவிசும்பு திருநாடு,கலங்காப்பெருநகரம்
நலமந்தமில்லதோர்நாடு, அந்தமிலாப்
பேரின்பவீடு சுடரொளியாய் நின்றதன்னு
டைச்சோதி-பரம்)

(1) உபயநாச்சியார்-தேவப்பிரான்
(2) கருந்தடங்கண்ணி நாச்சியார்-செந்தாமரைக்கண்ணன்
அலர்மேல்மங்கைத்தாயார்-ஸ்ரீநிவாஸன்!
குமுதவல்லி-வைத்தமாநிதி!
குழைக்காதுவல்லி-மகரநெடுங்குழைக்காதன்!
ஆதிநாதவல்லி-ஆதிநாதன் [ஆதிப்பிரான்]
கோதைநாச்சியார்-வடபத்ரசாயி-ரங்கமன்னார்
செங்கமலத்தாயார்-நின்றநாராயணன்
மதுரவல்லி-கூடலழகர்
ஸுந்தரவல்லி-மாலிருஞ்சோலைநம்பி சுந்தரன்
மோகனவல்லி-திருமோகூர் ஆத்தன்
திருமாமகள் நாச்சியார்-உரகமெல்லணையான்
கலியாணவல்லி-தெய்வச்சிலையார்
உய்யவந்தநாச்சியார்-ஸத்தியமூர்த்தி
கடல்மகள்நாச்சியார்-ஸ்ரீபூதேவிபாற்கடற்பரமன்
பெரியபிராட்டியார்-பரமபதநாதன்! போற்றி! போற்றி!! போற்றி!!!

அலர்மேல்ம்ங்கைத்தாயார் தாமரைத்தாளிணைகளே சரணம்.

திருமலையப்பன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே நாராயணாய நம : ஸ்ரீமதே ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸாய நம :

ச்ரியை நம:! ச்ரிய: காந்தாய நம:!! ஸ்ரீ தயா தேவீ நமேஸ்துதே!!!

ஸ்ரீதரங்கமுக நந்தினி ஹேமாப்ஜநாயி-காஸமேத ஸ்ரீதேவநாத பரப்ரம்ஹணே நம:

நூற்றெட்டுத் திருப்பதியுறை தாயார்-பெருமாள் தாமரைத் தாளிணைகளே தஞ்சம்

ஸ்ரீ அலர்மேல்மங்காநாயிகாஸமேத ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரம்ஹணே நம:

திருமலையப்பன் திருவேங்கடநாதன் திருவடிகளே தஞ்சம்-துணை.

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

செல்வநாரணன் நலங்கழல் சரணம்.



ஸ்ரீ :

(கண்ணுக்கினிய கண்ணனை நண்ணி நாளும் நலம்பெறுவோம்)

## கண்ணு! கண்ணு!! கண்ணு!!!

''அறத்திற்கு நலிவு ஏற்படும் போதெல்லாம் நான் தோன்றி அறம் தழைக்கச்செய்வேன்'' என்பது கீதாசார்யனின் கீர்த்தியுரை. மேலும் சாதுசனங்களைக் காத்தருளற்பொருட்டும், தீயவர்களை ஒடுக்கவும், தருமத்தை நிலை நிறுத்தவும் யுகந் தோறும் தோன்றுவேன் என்றும் கழறுகின்றான் கண்ணன். பிறப்பிலியான எம்பெருமான் உலகம் தழைத்தற்பொருட்டு, மறைகளை மீட்க மீனுகவும், அமரர்க்கமுது ஈவான் வேண்டி ஆமையாகவும், நிலமங்கையினிடர் நீக்க ஏனமாகவும், தந்தை யின் கொடுமையினின்றும் தனயனைக் காத்தருளற்பொருட்டு மானுட மடங்கலாகவும், இந்திரனுக்குதவுவான் வேண்டி வாமனனுகவும், ''வடிவாய் மழுவே படையாக வந்து தோன்றி மூவெழுகால்படியார் அரசுகளை கட்ட பாழியானையம்மானை'' என்றபடி பரசுராமனுகவும், ''நாட்டிற்பிறந்து படாதனபட்டு மனிசர்க்கா'' என்றபடி இராமனுகவும் ''ஒற்றைக்குழையும் நாஞ்சிலும் ஒருபால் தோன்றத்தான் தோன்றி'' என்றபடிக்கு பலராமனாகவும், ''துவரிக்கனிவாய் நிலமங்கை துயர் தீர்ந் துய்யப் பாரதத்துள், இவரித்தரசர் தடுமாற இருள்நாள் பிறந்த'' அம்மானான கண்ணனாகவும், கற்கியாகவும் அவ தரித்தருள் செய்தான். உலகை உய்வித்தான். மற்றும் பெண்ணுருவாகி அமுதமளித்த மோகினியாகவும், அருமறை கள் அருளிச்செய்த அமலனான அன்னமாகவும், பன்னுகலை நால்வேதப்பொருளையெல்லாம் அருளிய பரிமுகனாகவும் வந்து தோன்றி உலகைக்காத்தருளினான், அவதாரங்கள் பத்தையும்.

''மீனோடாமை கேழல் அரிகுறளாய் முன்னுமிராமனுய்த் தானுய்ப் பின்னுமிராமனுய்த் தாமோதரனாய்க் கற்கியும் ஆனான்.......'' என்று பேசுவார் நம் கலியன்.

பரமனின் அவதாரங்கள் பத்தினுள் கண்ணனவதாரந் தவிர்த்து ஏனையவை ஒவ்வொன்றுக்கும் ஒரே நோக்கம் காண் கின்றது. உதாரணமாக நரசிங்காவதாரத்தின் நோக்கம் இரணிய ஸ்ம்ஹாரம். இராமாவதார நோக்கம் இராவணவதம் கண்ணனவதாரத்திலோவெனில். சாது சனத்தை நலியும்

கம்சனேவதைத்தல், சகடாசுரன், கேசி, பகன், அகன் ஆகிய கொடியவர்களை அழித்தல், இந்திரன் அகந்தை அழித்தல், பார்மகள் துயரம் தீரப்போர் நடத்துதல், பஞ்சவர்க்கு உதவி அவர்களேக்காத்தருளுதல் ஆகிய பலநோக்கங்களேக் காண் கிறோம்.

வலம், இடம் அறியாத ஆயர்குல மக்களோடு இரண் டறக்கலந்து உறவாடிய அவதாரம் கண்ணனவதாரம். இதனே கண்ணனின் ஸௌலப்யம்-எளியோரிடம் வேற்றுமையின்றி உறவாடும் தன்மை-என்பர் பெரியோர். மற்ற அவதாரங்களில் இவ்வரிய பண்பினேக் கண்டோமில்லே. இராமன் குகனேடு தோழமை கொண்டிருந்தாலும், கண்ணனவதாரத்தில் போல் எளிமை முழுக்க முழுக்கப் பளிச்சிடவில்லே. இவ்வவதாரத்தின் எளிய தன்மையில், ஆழ்வார்கள் மனம் கசிந்துருகித் தங்களே மறந்து கண்ணனேப் போற்றி ஏத்துவர். மற்றும். சூர்தாஸர், கிருஷ்ணசைதன்யர் மீராபோன்ருேரும் கிருஷ்ணபக்தியில் மூழ்கித்திளேத்துப் பரவசமெய்துவர். நம் ஆசார்யரும் கண்ண னின் எளியதன்மையில் ஈடுபட்டு ''கோபாலவிம்சதி'' என்னும் நார்ன்கைந்து சுலோகங்களில் வருணித்துப் புளகாங்கிதம் அடைவர். மேலும் யாதவகுலத்தோன்றல் கண்ணன் சரிதையை ''யாதவாப்யுதயம்'' என்னும் பெருங்காப்பியமாகயாத்துள்ளார் திருவேங்கடமாமலை திருமலையப்பனைப் பாடிப்பரவும் ''தயாசதகம்'' என்னும்தோத்திரத்தில்தசாவதாரத்தைப்பேசும் முகத்தான் கண்ணனவதாரத்தை விவரிக்கும் சுலோகம்—

ப்ரபூத விபுதத்விஷத்பரண கின்ன விச்வம்பரா-
பராபநயந ச்சலாத் த்வமவதார்ய லக்ஷ்மீதரம்!
நிராகிருதவதீ தயே நிகம ஸௌத தீப ச்ரியா
விபச்சிதவிகீதயா ஜகதி கீதயாந்தம் தம: !!

உரை :- தயாதேவியே! அம்மையே! வானேர்க்குப் பகைவர் களான, தீமையே செய்பவர்களரன அசுரர்களே சுமந்திருந்த தால் வருத்தமுற்ற மண்மடந்தையின் சுமையைப்போக்குவான் வேண்டி நீ, உன் நாயகனை திருமலேயப்பன் ஸ்ரீநிவாஸனே கண்ணனுய் அவதரிக்கச் செய்தனே கண்ணன் தீயவர்களே அழித்து நன்மக்களேக் காப்பாற்றி அருளியதோடன்றி, கீதா

சார்யனாய்த்தோன்றி, மறையாகிய பெரிய மாளிகைக்கு விளக்கின் ஒளிபோன்றதாயும், பெரும்புலவர்களால் ஒரு மனதாகப் போற்றப்பெற்றதாயிருப்பதுமான ஸ்ரீமத்பகவத் கீதையை உபதேசித்தருளினான். இவ்விதமாக உன்றன் திரு வருளால் உலகில் படர்ந்திருந்த அஞ்ஞானமென்னும் பேரிருள் அகன்றொழிந்தது.

கோபால விம்சதியிலிருந்து ஒரு சுலோகம்-இதில் ஸ்வாமி, தனது இறுதிக்காலத்தில் கண்ணபிரானின் தோற்றமே காணப்பெற வேண்டும் என்று தனது பெரு விழைவை உரைக்கின்றார் —

அதராஹித சாரு வம்ச நாளா:
மகுடாலம்பி மயூர பிஞ்ச்ச மாலா:!
ஹரிநீல சிலா விபங்க நீலா:
ப்ரதிபாஸ் ஸந்து மமாந்திம ப்ரயாணே!!

திருவதரத்தில் கொண்ட எழில்மிகு புல்லாங்குழலை உடையவனாயும், திருமுடியில் சரிந்து திகழ்கின்ற மயிற்பீலி, மாலைகளை உடையவனாயும், உள்ள கண்ணபிரானின் இந்திர மணித்துண்டம் போன்ற நீலவண்ண உருவொளித்தோற்றங் கள் எனது இறுதிநாளில் என் முன்னே சேவைதந்தருள வேணும்.

ஸ்வாமி அருளிய தசாவதார தோத்திரத்தில் கண்ணன வதாரவருணனை —

நாதாயைவ நம: பதம் பவது ந:
சித்ரை: சரித்ர க்ரமை:
பூயோபிர் புவநாங்யமுனி குஹ நா
கோபாய கோபாயதே!
காளிந்தீ ரஸிகாய காளியபணி
ஸ்ப்பார ஸ்ப்படா வாடிகா
ரங்கோத்ஸங்க விசங்க சங்க்ரம துரா
பர்யாய சர்யா யதே!!

உரை :-

பரஞ்சுடரும் பரஞ்சோதியுமான ஸ்ரீமந்நாரயணன் கண்ணனவதாரத்தில் தனது எளிய தன்மையை எண்பிப்பான் வேண்டி ஆய்ப்பாடியில் இடையனாய்த்திகழ்ந்தான். மற்றவர் மனத்தில் நினைத்துப்பார்க்கவும் அரியதானபற்பல அற்புதமான பேராற்றல் மிகுந்த அரும் பெருஞ்செயல்களைச் செய்தான். தாயாய் வந்த பேயின் பெருமுலை சுவைத்து அவளுயிரை மாய்த்தது, குன்றமேந்திக்குளிர்மழைகாத்தது, காலால் சகட முதைத்தது,புணரேய் நின்ற மருதமரமிரண்டினூடே சென்றது முதலியன-. யமுனையாற்றங்கரையில் திருவிளையாடல் புரிவதிலேயே பெருவிருப்புடனிருந்தான். அவன் தன் லீலா வினோதங்களைக்கண்ட அக்காலத்தே வாழ்ந்த மக்கள் மகிழ் வெய்தினர் பிற்காலத்தவர் அவற்றை மனனம் பண்ணி நற்கதி பெற்றவராயினர். மற்றும் யமுனையாற்றின் மடுவில் காளிய னென்னும் பேரரவரசன் நஞ்சைக்கக்கிக் கொண்டு மக்களை அணுகவெட்டாமல் செய்து கொண்டிருந்தான். கண்ணன் மடுவினுள் குதித்து அவனை மேலே இழுத்து வந்து அவன்தன் நீண்முடி ஐந்திலும் நின்று நடனம் பயின்று காண்போரைக் களிப்பித்தான். அரவின் செருக்கையும் அடக்கினான். இதற்கு மேலும் ஆற்றல் மிகுந்த பல செயல்கள் புரிந்து உலக மக்களைக் காத்தருள் செய்தான். இவ்விதமாகப் பற்பல திருவிளையாடல் களை நடத்தும் நம் கண்ணபிரானுக்கு நம் வணக்கம் உரியதாகுக.

வேதவியாசர், கண்ணபிரான் சரிதையை விவரிக்கும் ஸ்ரீமத்பாகவதத்தையாத்த பின்னரே மன அமைதிபெற்றார் என்று அறியப்படுகின்றது. இனி, ஆழ்வார்கள், கண்ணா! கண்ணா!! கண்ணா!!! என்று விளித்து அருளிய பாசுரங்களில் சிலவற்றை உன்னுவோம்-

பட்டர்பிரான்

கிருஷ்ணவதார ஜனனகால-பிறந்தநேரம்-வருணனை யைப் பேசும் பதிகம் முதற்பாசுரத்தில் கண்ணன் பிறந்தான் என்று குறிப்பிடுவார். இப்பாசுரத்தில் திருக்கோட்டியூர் பெருமானிடம் ஈடுபட்டு இயம்புவார். திருக்கோட்டியூரில் சேவைதந்தருளும் பெருமான் அவதரித்தான்.அவன் கண்ணன்,

கேசவன், நற்பண்புகளையே கொண்டுள்ள நம்பியவன். அவன் பிறந்த காலை ஆய்ச்சியர் சேரியிலிருக்கும் ஆயர்குல மக்கள் ஒவ்வொருவரும் நறுமணம் மிகுந்த வண்ண-சுண்ணப் பொடி களைத்தூவி இறைத்தனர். எண்ணெயையும் தூவித்தெளித் தனர்- இதனால் கண்ணன் பிறந்த இல்லம் எங்கும் ஒரே சேருக ஆயிற்று.

உரியபாசுரம்—

வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்,
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்,
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிட
கண்ணன் முற்றம் கலந்தள றுயிற்றே.

''கராவிடம்-முதலை-சிக்கித்தவித்த கஜேந்திரனென்னும் கரியும் தன்துதிக்கையை உயரே தூக்கி என் கண்ணு! கண்ணு!! என்று கூவிக்கதறிற்று. அக்கரிக்கு உதவுவான் பொருட்டு கண்ணன் தனது புள்ளின்-கருடன்-மீதேறி அங்கு விரைந்து வந்து அதன் துயர்நீக்கி அருள் செய்தான். அவன் அதகன்.- பகைவரை அழிக்கும் ஆற்றல்-மிடுக்கு பெற்றுள்ளவன். அவன் என்னிடம் வந்து பூச்சி காண்பித்து பயமுறுத்துகின்றான்'' என்று அன்னை யசோதை கூறுவதாக வரும் பதிகத்தில் பகர்வார்-

பதக முதலைவாய்ப் பட்ட களிறு,
கதறிக்கை கூப்பிஎன் கண்ணு!கண்ணு! என்ன,
உதவப்புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த
அதகன்வந் தப்பூச்சி காட்டுகின்றுன்,
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்.

குன்றைக்குடையாக ஏந்தி நின்று ஏழுநாள் தொடர்ந்து பொழிந்த கல்மாரியினின்றும் ஆய்ப்பாடி மக்களையும், கறவை யினங்களையும் காத்தருள் செய்தவன் கண்ணன். அதன் பின்னரே ஆயிரங்கண்ணன் அகந்தை அற்றவனாய், கண்ண னின் அரும்பெரும் ஆற்றல் அறியப் பெற்றவனாய், கண்ண பிரானுக்கு கோவிந்த பட்டாபிஷேகம் பண்ணி உய்வைப் பெற்றுன். அதுமுதல் கண்ணனுக்கு ''கோவிந்தன்'' என்னும்

சிறப்புப்பெயர் உண்டாயிற்றென்பது ஸ்ரீமத்பாகவதத்தின் வாயிலாக அறியப்படுகின்றது.

உலக மக்களுக்கு, எம்பெருமான் பெயரையே உங்கள் குழந்தைகளுக்குச் சூட்டுவீராக என்று ஒருபதிகம் பாடியுள்ளார். அப்பதிகத்தில் ஓர் பாசுரத்தில் உங்கள் மழலைகளுக்கு ''கோவிந்தன்'' என்னும் பெயரிட்டு. கோவிந்தா! கோவிந்தா!! என்றழைத்திடுவீர் இதனுல் நீங்கள் பெறும் பயனுவது-நரக நலிவினின்றும் விடுபட்டுப் பேரின்ப வாழ் வெய்துவீர்.-

......

குலமுடைக் கோவிந்தா! கோவிந்தா! என்றழைத்தக்கால்
நலமுடை நாரணன் தம்மன்னை நரகம்புகாள்

<u>பூங்கோதை நாச்சியார்</u>

பட்டர்பிரான் கோதை கண்ணனையே தன் மணுளனாக வரித்து, அவனுக்கும் தனக்கும் நிகழ்ந்த திருமண விபவத்தைக் கனவினில் கண்டு, கண்ணனான திருவரங்கப்பெருமானின் பெருஞ்சோதியுருவில் கலந்தொன்றினார்-நாச்சியார் அருளிய பாசுரங்களில் கண்ணனைத்துதித்துப்பேசும் பனுவல்கள்-

ஸ்ரீமந்நாராயணனே அசோதையிளஞ்சிங்கமாய் கண்ண னாய்-வந்தவன். அவனே நமக்கு அருள்செய்வான் என்பது திருப்பாவை முதல்பாசுரம். கண்ணனை, கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா!,குறைவொன்றுமில்லாத கோவிந்தா!இற்றைப் பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா! என்று விளித் தழைத்து உன்றன்னோடு உறவு எங்கட்கு ஏழேழ்பிறவிக்கும் வேண்டுவது என்று மொழிவார்.

.. கண்ணனின் பீதகவாடை கொண்டு விசிறி என் வருத்தத்தைப் போக்கிடுவீர், அவன் அணிந்த தண்ணந்துழாய் மாலையை எனது அடர்ந்த கூந்தலில் சூட்டிடுவீர், அவன் அணிந்திருக்கும் வனமாலையைப்பெற்றுவந்து என்றன் மார்பில் அணிவித்திடுவீர், அவன்தன் அமுதவாய் நீர் பருக்கி என் இளைப்பை நீக்கிடுவீர், கண்ணன் ஊதிய குழலின் நீர் கொணர்ந்து என் முகத்தில் தடவி என்னை குளிர்விப்பீர் ,அவன்

நடந்து சென்ற இடத்தில் உள்ள மண்பொடிகளை என் எழிலுடம்பில் பூசிடுவீர்.-என்றிவ்வாறாக கண்ணனிடம் தனக்குள்ள காதலை வெளிப்படுத்துகின்றார் நாச்சியார்,

நாச்சியார் திருமொழி இறுதிப்பதிகத்தில் தன் தோழியரிடம், என் கண்ணன் பலதேவரின் இளவல்,கோவர்த்தனன், பொருத்தமிலாப் பொய் உரைப்பவன், என்னை ஈர்த்து என்னுடன் விளையாடும் ஈசன், மாதவன், மணிநிறவண்ணன், தருமமறியாக்குறும்பன், அழகார்ந்த புருவம் படைத்துள்ளவன், அவன் எனக்குப் பொருத்தமானவன், நம்பி, புறத்தே போன்று உள்ளத்தாலும் கரியவன், பளிச்சிடும் வெண்மையான பாஞ்சசன்னியமென்னும் சங்கைப் பெற்றிருப்பவன், பொன்னிறமான பீதகவாடை அணிந்து விளங்குபவன், பிரமனைத்தன்னுந்தித் தாமரையிற்றோற்றுவித்து உலகைப்படைக்குமாறு உத்தர விட்டவன், விளையாடும் விமலன்-என் நாயகன் கண்ணனை நீங்கள் கண்டீரோ என்று வினவுகின்றாள். தோழியர், உன் காதலன் கண்ணனை நாங்கள் பிருந்தாவனத்தே கண்டோம் என்று மொழிகின்றனர்.

பதிகப்பயனாக, விஷ்ணு சித்தன் கோதை மொழிந்த இப்பதிகத்தை, மருந்தெனக்கொண்டு தன் மனத்திலிருத்தி வாழும் மெய்யன்பர்கள் திருமாலின் திருவடியின்கீழ் அகலகில்லா வாழ்வைப் பெறுவர் என்று அருள்கின்றார்.



மெய்யன்பர்கள் மெய்யர்களே என்பதை மெய்ப்பிக்கும் முகத்தான் குடப்பாம்பில் கையிட்ட குலசேகர ஆழ்வார்.



கண்ணனை ஈன்றெடுத்த அன்னை தெய்வத்தேவகி, சீதக்கடலுள் அமுதன்ன தேவகி, தான் பெற்ற மதலையைப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்து மழலைச்சொற்கேட்டு மகிழ்வுறும் பேறு பெற்றேனில்லையே என்று புலம்புவதாக, தன்னை, தேவகி அன்னையாக சித்தரித்துக்கொண்டு ஒரு பதிகம் அருளியுள்ளார் பெருமாள் திருமொழியில் குலசேகரப்பெருமான். அப்பதிகத்தினின்றும் ஓர் பாசுரம்—

குழக னே!என்றன் கோமளப் பிள்ளாய்!
கோவிந் தா!என் குடங்கையில் மன்னி,
ஒழுகு பேரெழி லிளஞ்சிறு தளிர்போல்
ஒருகை யாலொரு முலைமுகம் நெருடா,
மழலை மென்னகை யிடையிடை யருளா
வாயிலேமுலை யிருக்கவென் முகத்தே,
எழில்கொள் நின்திருக் கண்ணிணை நோக்கந்-
தன்னை யும்இழந் தேன் இழந்தேனே!

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் குழந்தையே! மேன்மை மிகுந்த என் மைந்தனே! கோவிந்தா!-நீ-எனது உள்ளங்கையில் நிலைத்திருந்து கொண்டே, வழியும் எழில் மிகுந்ததும் தளிர் போன்றதான உன்றன் ஒரு கையினால் முலையின் குவட்டைப் பிடித்துக்கொண்டும், ஒரு முலையை வாயில் வைத்துப்பால் பருகிக்கொண்டும் நடுநடுவே இளம் புன்னகை புரிந்துகொண்டும் என்னைப்பார்க்கும், உன்தன் அழகார்ந்த கண்களின் நோக்கை, பார்வையை என் முகத்தி லேயே பதியும் வண்ணம் இருக்கும் வாய்ப்பினைப் பெறும் பேறு பெருமலொழிந்தேன். உன்றன் அழகினைப் பார்த்து மகிழ்வுறும் பாக்கியம் இழந்தவளாகவே ஆனேன்.



## திருமிசைப்பிரான் - திருச்சந்த விருத்தம்

கண்ணா! நீ மருத மரங்கிளினூடே சென்று அவற்றை விழுமாறு செய்தனை. உனை எதிர்த்து வந்தது குவலையான பீடம் என்றும் யானை. அதன் கொம்பினை ஒடித்து அதனை அழித்தாய். நீ உத்தமன். கேசியெனும் குதிரையின் வாய்கீண்டு அப்பரியை அழித்தொழித்தனை நீயே முன்பு வாமனனாய் மாவலிபாற்சென்று மண்வேண்டிப்பெற்று திரிவிக்கிரமனாய் ஓங்கிவளர்ந்த உத்தமனாய், உன்றன் தாளினைகளால் மூவுல கையும் அளந்து கொண்டனை. நின்னைப்பரவும் வேதியர்கள் நின்றன் திருவருள் பெறும் வண்ணம் திருக்குடந்தையம் பதியில் பள்ளிகொண்டு திகழ்கின்றனையன்றோ!-

மரங்கெட நடந்தடர்த்து மத்தயானை மத்தகத்து,
உரங்கெடப் புடைத்தொர் கொம்பொசித்துகந்த வுத்தமா!.
துரங்கம்வாய் பிளந்துமண் ணளந்தபாத!, வேதியர்
வரங்கொளக் குடந்தையுள் சிடந்தமாலு மல்லையே!
காரொடொத்த மேனிநங்கள் கண்ண! விண்ணின் நாதனே!
நீரிடத் தராவணைக் கிடத்தியென்பர் அன்றியும்,
ஓரிடத்தை யல்லை எல்லை யில்லையென்பர் ஆதலால்,
சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சு மாசொலே.

கரிய மேகவண்ணத் திருமேனியனே! எங்கள் கண்ணனே! பரமபதத்தில் வீற்றிருந்தருளும் விமலனே! பரமனே! நீ, அலை கடல் நடுவே அரவரசின்மீது பள்ளிகொண்டிருப்பதாகப்பகர்வர் அதன்றியும் நீ ஒரே இடத்தில் நிலைத்திருப்பவனில்லை. எங்கெங்கும் எல்லா இடம் தனிலும் இத்தனைகாலம், இன்ன உருவம் என்னும் எல்லையற்றவனாய்த்திகழ்கின்றனை. இவ் வண்ணம் நீ அளவிடற்கரியனுயிருப்பதால். நீசனுன, உன்னடி யனுன நான், உன்னை அடைந்து உனக்கு அடைக்கலமாகும் வழியை எனக்கு உரைத்தருளவேணும்.



## மண்டங்குடி வந்த மாமுனிவர்
## தொண்டரடிப்பொடி ஆழ்வார்

இவ்வாழ்வார் திருவரங்கப் பெருமானிடம் பக்திகொண்டு, பக்தி வெள்ளத்தில் ஆழங்கால்பட்டு மூழ்கித்திளைத்தவர் தாம் அருளிய திருமாலை, திருப்பள்ளியெழுச்சி இரண்டு பிரபந்தங் களிலும் தம்மனத்துறை திருவரங்கநாதனையே போற்றி ஏத்துவர். திருமாலை ஒவ்வொரு பாசுரத்திலும் ''அரங்கமா நகருளானே!'' என்றும், திருப்பள்ளியெழுச்சி ஒவ்வொரு பனுவலிலும் ''அரங்கத்தம்மா'' என்றும் விளித்துப்பேசுவர். திருவரங்கச்செல்வனே கண்ணனுய் வந்தவன் என்று கொண்டு கண்ணன் குன்ற மேந்தி நின்றதை மொழிவார்—

மழைக்கன் று வரைமு னேந்தும்
மைந்தனே! மதுர வாறே!,
உழைக்கன்றே போல நோக்கம்
உடையவர் வலையுள் பட்டு,
உழைக்கின்றேற் கென்னை நோக்கா
தொழிவதே, உன்னை யன்றே
அழைக்கின்றேன் ஆதிமூர்த்தி!
அரங்கமா நகரு ளானே!

—திருமாலை—36.

அனைத்துக்கும் மூலகாரணமாய் விளங்கும் ஸ்வாமியே! திருவரங்கநகருறை நாதனே! இந்திரன், தனக்கு ஆயர்குல மக்கள் பூசனை செய்யவில்லையே என்று சினந்து கல்மாரி பொழிவித்த அன்று ஆய்ப்பாடி மக்கள் உன்னை இறைஞ்சு வதன் முன்னமேய கோவர்த்தன மலையைக் கவிழ்த்துக் குடை யாகப்பிடித்து அவர்களைக்காத்தருளிய கண்ணனே!இனிமையே வெள்ளமிட்டு வருவது போன்று காண்பவனே! -நான்- மான் குட்டியின் கண்களைப் போன்ற அழகான நோக்கையுடைய மங்கையரின் வலையிற்பட்டு துன்புற்றுத்தவத்திடும் போது, என்பால் உன்றன் அருள்பார்வையைச்செலுத்தாமலிருப்பதோ? உன்தன் இச்செயல் என்ன காரணம் தொட்டோ? நீதானுகவே வந்து என்னைக் காத்தருள் செய்யவேண்டியிருக்க, நான் அழைத்த பின்னரும் வாராதொழிவதோ? உன்னையே அழைக் கின்றேன். வந்தருள் செய்திடுவாய் ஆதிமூர்த்தியே!



## உறையூரிற்றோன்றிய உத்தமர்
## திருப்பாணாழ்வார்

இவ்வாழ்வாரைப் பாண்பெருமாள் என்று போற்றுவர் நம் தூப்புல் வள்ளல். இவ்வாழ்வாரும் திருவரங்கச்செல்வனரி டமே அளவிறந்த பக்தி பூண்டொழுகி ''அமலனுதிபிரான்'' என்னும் பதிகம் பாடி திருவரங்கனின் தேசுவடிவில் கலந் தொன்றியவர். ''மந்திகள் பாய்ந்து விளையாடும் திருவேங்கட

மாமலையுறையும் திருவேங்கடத்தேவனே திருவரங்கத்தில் கண் வளர்ந்து அருள்பவன்'' என்று மூன்றும் பாடலில் பகர்வார். ஈற்றுப்பாட்டில், ''திருவரங்கப்பெருமானே ஆய்ச்சியர் சேரியில் வளர்ந்து அளைதயிர் பாலுண்ட கண்ணன், கோவலன் அவன் மேகவண்ணத் திருமேனியன். வெண்ணெய் விரும்பிப்பு சித்தவாயன், அவன் என் உள்ளம் முழுவதையும் கவர்ந்து கொண்டவன். அவன் அமரர்க்கெல்லாம் தலைவன். அவன் அணியெனத்திகழும் திருவரங்கத்துறையும் அரங்கன். அவன் எனக்கு ஆராவமுதமாயினிப்பவன். அவனை என் கண்களாரச் சேவித்துப் பெருமகிழ்வும் பேருவகையும் பெற்றவனுனேன். இனி, என்கண்கள் பிறிதொன்றையும் காண விழைவு கொள்ள மாட்டா'' என்று உணர்ச்சி ததும்பப்பாடி பதிகத்தைத் தலைக் கட்டுகின்றார்.

கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன், என் னுள்ளம் கவர்ந்தானை,
அண்டர் கோனணி யரங்கன்என் னமுதினைக்
கண்ட கண்கள்,மற் றொன்றினைக் காணுவே.

## வாள்வேந்தன் பரகாலன்-குறையலூர்வந்தகலியன் திருமங்கையாழ்வார்

இவ்வாழ்வாரும், பெரியாழ்வாரைப் போலவே, கண்ண பிரானின் லீலைகளில் பக்திகொண்டு சப்பாணிப்பருவம் போன்ற வற்றைப் பாடிப்பரவுவார். தாய் யசோதை கண்ணனை அம்ம முண்ண அழைப்பதாகவும், ஆய்க்குலப்பெண்டிர் கண்ணனின் குறும்புகளை அன்னை யசோதை முன்னே முறையிடுவதாகவும் மொழிவார்.

திருநாங்கூர்த்திருப்பதிகளில் ஒன்றான திருக்காவளம் பாடியுறை கண்ணனைப் போற்றிப்பரவும் பதிகத்தில்ஒவ்வொரு பாடலிலும் கண்ணனை விளித்து நீயே எனக்கு அடைக்கலம் அளிப்பவன் என்பார். முதற்பாசுரத்தில், பொய்கை முதலை வாய்ப்பட்டுத் தவித்து நின்றகரிக்கு அருளியவன் கண்ணனே என்று பாடுவார்.

ஏவிளங் கன்னிக் காகி இமையவர் கோனைச் செற்று,
காவளம் கடிதிறுத்துக் கற்பகம் கொண்டு போந்தாய்,
பூவளம் பொழில்கள் சூழ்ந்த புரந்தரன் செய்த நாங்கை,
காவளம் பாடி மேய கண்ணனே! களைகண்நீயே.

கண்ணனே! இந்திரனின் மனைவி இந்திராணியைவிட இளமையும் பேரெழிலும் கொண்டுதிகழும் சத்யபாமைக்காக இமையவர் தலைவனை இந்திரனைப் போரில் தோல்வியுற்று ஓடுமாறு பண்ணி தேவருலகத்திலிருந்த கற்பக மரத்தை துவாரகையில் கொண்டு சேர்த்தாய். இந்திரனால் நிறுவப் பெற்றதும், பூக்களுடன் சேர்ந்து திகழும் பொழில்களால் சூழப் பெற்றதுமான திருக்காவளம் பாடியம்பதியில் மன்னியிருந்தருளும் கண்ணனே! நீயே எனக்குச்சரணம் நீயே எனக்குத் தஞ்சமளித்துக் காத்தருள்பவன்.

குன்றால் குளிர்மாரி தடுத்து காத்தானே!, கானார் கரி கொம்ப தொசித்தகளிறே! கோலால் நிறைமேய்ந்த எங் கோவலர் கோவே' என்றபடியாக, கண்ணனின் அற்புதச் செயல்களைக் கூறி விளித்துப்பேசுவார்.



நம்மாழ்வார் :

கிருஷ்ணாவதாரத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டு திளைத்தவர் நம்மாழ்வார். முதற்பத்து மூன்றும் பதிகம் முதற் பாசுரத்தில் கண்ணனின் எளிய தன்மையைப்பேசுவார் கண்ணன் ஆயர்கொழுந்தாய்த் திகழ்ந்தான். ஆய்ச்சியரால் அடியுண்டான், அவன் மாயப்பிரான் எனக்கு மாணிக்க சோதியாய் விளங்குபவன். அவனே அமரர்க் கமுதீந்தவன் வேங்கடம் மேவி நிற்கும் நிமலன் கண்ணனே. அவனே குன்ற மேந்திக் குளிர்மழைக்காத்தவன், சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத் திங்குப் பிறந்த வேதமுதல்வன் கண்ணன், ஐவர்க்குத் திறங்கள் காட்டி மாயமாய் பெரியபாரதம் கைசெய்தவன், மதுவை வார் குழலாருடன் குரவை பிணைந்தவன். கெண்டையொண் கண் வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்த மணாளன் கண்ணன், தேவர் வேண்டி இரக்க வந்து வீங்கிருள்வாய் பிறந்து, அன்னையத்தனுக்குச் சேவை தந்து, கஞ்சனுக்கு

அஞ்சிய அன்னையின் புலம்பல் காரணமாக ஆய்க்குலம் புகுந்து வஞ்சனை கஞ்சனறியா வண்ணம் வளர்ந்து கஞ்சனைத் துஞ்சுமாறு வஞ்சம் செய்தவன் கண்ணன், உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன், புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே போன முதல்வன் கண்ணன்- திருவேங்கடமாலவனே!., என்றெல்லாம் கண்ணனின் பேராற்றல் மிகுந்த அரும்பெருஞ்செயல்களைச் செப்புவார். ஆநிரைபாடி யங்கேயொடுங்கும் வண்ணம் தீமழை காக்கக் குன்றமெடுத்த அப்பன் கண்ணன், என்பார் கண்டும் தெளிந் தும் கற்றூர் கண்ணற்காளன்றியாவரோ? என்று வினாக்குறி யுடன் வினவுவார்.

கண்ணு! கண்ணு! என்று கூவிஅழைக்கும் பாசுரம்-இங்கு ஒருநாள் என் முன்னே தேன்றி, நான் உன் திருவடியைச் சேவித்துக்களிப்பெய்தும் வாய்ப்பினை நல்கியருள்க என்று வேண்டுவார்-

'கொண்டல் வண்ணு! குடக்கூத்தா! வினையேன் கண்ணு! கண்ணு!, என்
அண்டவாணு!' என்று உன்னை ஆளக் கூப்பிட் டழைத்தக்கால்,
விண்தலை மேல்தான், மண்மேல்தான் விரிநீர்கடல்தான் மற்றுத்தான்,
தொண்ட னேன்உன் கழல்காண, ஒருநாள்வந்து, தோன்றாயே.

என்னை உன் அடிமையாக்கி ஆட்கொள்வான் பொருட்டு, நான் உன்னை கொண்டல் வண்ண மேனியனே! குடக்கூத் தாடிய கூத்தனே! வினையேனாகிய எனக்குக் **கண்ணாயிருப்** பவனே! கண்ணனே! உலகங்கட்கெல்லாம் தலைவனே! என்றிவ் வாறாக கூவிக்கூவி அழைக்கும் காலையில், நீ, பரமபதத்தில் ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் கோலத்திலோ, இம்மண்ணுலகில் விளங்கும் அருச்சை வடிவிலோ, பரந்தகன்று திகழும் பாற்கடலில் பள்ளிகொள்ளும் நிலையில் பாற்கடற்பரம னாகவோ மற்றும் பிறவான உன்றன் திவ்விய சோதித்திரு மேனியினுடனேயோ ஒரு நாளைக்கேனும் என்முன்னே தோன்றி சேவை தந்தருள வேணும்.



## பொய்கைதனில் வந்துதித்த புநிதன் பொய்கையாழ்வார்

அன்னை யசோதை உன்மேல் வெகுண்டு உன்னை உரலோடு இறுக்கிப் பிணைத்திருந்த வேளையில் குரலெடுத்து அழவும் துணிவின்றி அயலகத்தார் காணும்படி நின்றிருந்த னையே? இதன் காரணம் உரைப்பாய் கண்ணனே! என்றியம்புகின்றார்.

விரலோடு வாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு, ஆய்ச்சி
உரலோ டுறப்பிணித்த ஞான்று,—குரலோவாது
ஏங்கி நினைந்தயலார் காண இருந்திலையே?,
ஓங்கோத வண்ணா! உரை.

ஓதம் சூழ்ந்த நீர் வண்ணா! கண்ணா! நான் உன்னிடம் ஒன்று வினவுகின்றேன், விடையிறுத்தருள்வாய்-உன் அன்னை யசோதை உனக்குப்புலப்படாவண்ணம் வெண்ணெயையொளித்து வைத்திருந்தனள் நீ அவளறியாமற் சென்று வெண்ணெயை வாரி வாரி புசித்துக் கொண்டிருந்தனை அப்பொழுது அங்கு வந்து நின்ற நின் அன்னை, உன்றன் கைவிரல்களிலும் வாயிலும் வெண்ணெய் இருப்பதைக்கண்டு சினங்கொண்டு உன்னை உரலோடு இறுகப்பிணித்துக்கட்டினள். அந்நிலையில் நீஅன்னையின் கையில் பிடிபடாமல் விரைந்து சென்றிருக்கலாம். ஆனல் நீ அவ்வண்ணம் செய்தாயில்லை. மாருகக் குரல் விட்டு அழவும் மாட்டாமல் அயலகத்துப் பெண்டிர் யாவரும் காணும் நிலையில் கட்டுண்டிருந்தனையே! இதன் காரணம் யாதென விளம்புவாய்.



## கடன்மல்லைப்பூதத்தார் - பூதத்தாழ்வார்

கதையின் பெரும்பொருளும் கண்ணா!நின் பேரே,
இதைய மிருந்தவையே ஏத்தில்,— கதையும்
திருமொழியாய் நின்ற திருமாலே!, உன்னைப்
பருமொழியால் காணப் பணி.

கண்ணா! இதிகாசம், புராணம் முதலானவையும், அவற்றின் சிறப்பும், முக்கியமுமான பொருள்களும் உனது பேராகவே

உள்ளன. உள்ளத்தை ஒருமுகப்படுத்தி ஈடுபடச்செய்து துதித்தால், அத்துதியும் உன்றன் புனிதப்பெயராகவே இருக்கும். கதையின் சிறந்த சொற்களாய்த் திகழ்ந்திடும் திருமாமகள் மணாளனே! விரிவாக வருணித்துப் போற்றித் துதிக்கப்பட வேண்டிய உன்னை, மிகப்பெரிய சொற்களைக் கொண்டு போற்றி நுகரும் வண்ணம் அருள் நல்கிடுவாயாக.



மாமயிலையிற்றோன்றிய மாமுனிவர் பேயாழ்வார்

கண்ணபிரானின் திருமேனியை மாலைக்காலத்து வானின் நிறத்தோடு ஒப்பிட்டு உரைக்கின்றார்-

கலந்து மணியிமைக்கும் கண்ணா! நின்மேனி
மலர்ந்து மரகதமே காட்டும்,— நலந்திகழும்
கொந்தின்வாய் வண்டறையும் தண்துழாய்க்கோமானை,
அந்திவிரன் காட்டும் அது.

கண்ணபிரானே! ஒளிச்சிதறலடைந்து மரகதப்பச்சைக்கல் காண்பிக்கும் திருமேனிவண்ணத்தனே!, நற்குணங்களே கொண்டு நன்மையே நல்கிடும் நற்பண்புடையோனே! மலர்க் கொத்தில் வண்டுகள் இறைச்சலிடும் குளிர்த்த திருத்துழாயை திருமேனியெங்கும் அணிந்து சேவைத்தந்தருளும் தலைவனே! சுவாமியே! கௌத்துவமணி சேர்ந்து ஒளிவீசிடும் உன்றன் எழில்மிகு திருமேனியை, மாலை நேரத்து வானில் தோன்றும் மேகம் நினைப்பூட்டும்.



வைணவம் தழைக்க வந்த வள்ளல் எம்பெருமானார் கண்ணன் அருளிய பகவத்கீதைக்கு ''கீதாபாஷ்யம்'' என்னும் உரையருளியுள்ளார்.



ஆழ்வார்கள் காலத்துக்குப் பிற்காலத்தே வடநாட்டில் தோன்றிய பற்பல மகான்கள் கிருஷ்ணபக்தியில் மூழ்கித் திளைத்து தங்கள் மொழிகளில் கண்ணனின் சரிதையைப் பாடிப்

பெருமிதமும் பூரிப்புமடைந்து கண்ணனருள் பெற்றுய்ந்த வராவர். அவர்களில் முக்கியமானவர்கள்-ஸ்ரீகிருஷ்ணசைதன்யர், வல்லபாசார்யர், சூர்தாஸர், நந்தாஸர், கிருஷ்ணதாஸர் பரமானந்த தாஸர், கும்பன்தாஸர், சதுர்புஜதாஸர், சீதஸ்வாமிகோவிந்தஸ்வாமி, ஹிதஹரிவம்சர், கதாதர்பட்டர், மீராபாயி, ஸ்வாமிஹரிதாஸர், ஸ்ரீபட்டர் வியாஸஜீ, ரஸகான், துருவதாஸர் ஆகியோர்.

இவர்களில் ரஸகான் என்பார் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தவராயிருப்பினும் கிருஷ்ணபக்தியில் பெரிதும் ஈடுபட்டு ஒன்றி செய்யுள்கள் யாத்துள்ளார்.

சூர்தாஸர் அந்தகராயிருந்தவர் ஓர்நாள் இவர், செல்லும் வழி தவறிச்சென்று எதிரே இருந்த கிணற்றில் விழுந்து விட்ட தாகவும் கண்ணபிரான் வந்து காப்பாற்றியதாகவும், தன்னைக் காப்பாற்றியவனின் கையை இறுகப்பிடித்துக்கொண்டு அவனைக்காண விழைந்ததாகவும், இவர் விழைவுக் கேற்ப கண்ணன். வில்லாளன் விசயனுக்கு மெய்க்கண் கொடுத்துத் தன் விசுவ ரூபதரிசனத்தைக் காண்பித்தது போன்று இவருக் கும் கண்பார்வையளித்துத் தன் சோதியுருவைக் காண்பித்த தாகவும், கண்ணனின் பேரொளியுருவைச் சேவித்துக் களிப் பெய்திய இம்முனிவர், 'கண்ணு! உன்றன் திருமேனியைக் கண்டு களிப்பெய்திய பின்னர் நான் யிறிதெதனையும் காண விழையேன் என்று திருப்பாணாழ்வார் திருவரங்கனைச் சேவித்த பின்னர் ''என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே'' என்று கூறியதைப் போல் மொழிந்ததாகவும், அவ்வாறே மீண்டும் பார்வையிழந்தவரானார் என்றும் இவர் தம் வரலாற்றால் உணர்கிறோம்.

இவரும் பட்டர்பிரானைப் போலவும், குலசேகரப்பெரு மானைப் போலவும், கலியனைப்போலவும் கண்ணனின் பிள்ளைப் பருவத்தை வருணித்துப் பாடியுள்ளார்.

இவர் இயற்றிய, கண்ணன், தன் யசோதையிடம் வினவுவதாக வரும் பாடலின் கருத்து-(பாடல்

அம்மா! என் தலைமுடி எப்பொழுது நீண்டு வளரும்? நீ தினமும் தான் எனக்கு பால் ஊட்டுகின்றனே. இருப்பினும், குழல்கள் குட்டையாகவே இருக்கின்றன. அண்ணன் பலராமனின் குழல் நீண்டு வளர்ந்துள்ளது. நீ அவனுக்கு மட்டும் நன்றாகக் குளிப்பாட்டி, தலைவாரிப்பின்னி விடுகின்றனை. அது போல் எனக்குச் செய்வதில்லை. நீ எனக்கு நிறைய பாலும் வெண்ணெயும் தருவதில்லை. அதனாலேயே எனக்கு முடி நீண்டு வளரவில்லை-ஈற்றடியில் கவி சூர்தாஸர், பலராமனும் கண்ணனும் சிரஞ்சீவியாக வாழ்கவென வாழ்த்தி முடிக்கின்றார்.

மீராபாயீ

மீரா அரச குடும்பத்தில் தோன்றி மன்னனை மணந்து அரசியாக இருப்பினும், அரச சுகங்களில் மனம் செலுத்தாமல் கண்ணனையே தனது காதலனாகவும் மணாளனாகவும் கொண்டு பக்தியில் திளைத்து, கோதை நாச்சியார் திருவரங்கனின் பெருஞ்சோதியில் ஒன்றியதைப்போன்று, பிருந்தாவனத்தில் கண்ணன் திருவுருவில் கலந்தொன்றியவர்.

இவர் இந்தியில் இயற்றிய ஓர் பாடலின் கருத்து—

நந்தகுமாரா! கண்ணா! உன்றன் திருவுருவம் எப்போதும் என் கண்களில் லயித்திருப்பதாக உன்றன் எழிலார் திருமேனியில் நான் மோகம் கொண்டவளானேன். உன்றன் மேனி வண்ணம் மேகநிறத்தை ஒத்துள்ளது. நீ உன்றன் திருமுடியில் மயிற்பீலி அணிந்து, காதுகளில் மகர குண்டலங்களுடனும், நெற்றியில் திலகத்துடனும், அமுதம் பொழியும் இதழில் புல்லாங்குழலை வைத்து இனிய கீதம் இசைத்துக்கொண்டும், மார்பில் வைஜயந்தி மாலையணிந்து கொண்டும், இடுப்பில் சலங்கையொலிக்கும் ஒட்டியாணத்துடனும், கால்களில் சிலம்பொலியுடனும், உன் அடியாளான எனக்குச் சேவை தந்தருளி என்னை மகிழ்விப்பாயாக. நீ பக்தவத்ஸலனன்றோ? உன்றன் நாயகியான எனக்கு அருள்வாய் கோபாலா!

நாமும் கண்ணன் கழலிணை நண்ணி அவனைப்போற்றிப் பரவி ஏத்தி அவன் திருவருள் பெற்றுய்ந்திடுவோமாக.

மணிவண்ணன் கண்ணன் மலர்ப்பதங்களே தஞ்சம்
ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!
செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ :

(நீலமணி வண்ணனை நெஞ்சிற்கொள்வோம்)

## ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## நெஞ்சே! நெஞ்சே!! நெஞ்சே!!!

'நெஞ்சு' என்னும் சொல் மனம், உள்ளம், இதயம் ஆகிய பொருள்களைக்கொண்டது. ஆறறிவு படைத்த மனிதனுக்கே இது மிகவும் துணைசெய்வதாயும், நல்வழிப்படுத்துவதாயும், அல்வழிப்படுத்துவதாயும் அமைகின்றது. இந்த மனமே ஐம்பொறிகளையும் தன்பால் ஈர்த்மி அலைக்கழிக்கின்றது ஒருவன் நல்லவனாவதும் தீயவனாவதும் நெஞ்சத்தின் எண்ணங்களைப் பொறுத்ததேயாம். ''மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்,, என்பது மூதுரை. இந்த நெஞ்சு துணை செய்யவில்லையெனில் நாம் எந்த ஒரு செயலிலும் வெற்றி பெறுதல் அரிது. வெளியுலகப் பணிகளானாலும், ஆன்மீகத் துறையானாலும் மனம் ஈடுபாடு கொள்ளவில்லையெனில் செய்யும் செயல் பயனற்றதாகி விடுகின்றது. இவ்விதம் ஒரு செயலில் மனம் ஈடுபடுவதையே கவனம் என்கிறோம்.மாணவன் படிப்பில் கவனம் செலுத்தவில்லையெனில் தேர்வில் தோல்வியைத்தழுவுகின்றான், இல்லையெனில் அதிகமதிப்பெண் பெறும் வாய்ப்பினை இழந்து அல்லலுறுகின்றான். விஞ்ஞானிகளும் ஏனைய துறையினரும் முழு அளவுக்குத்தம் உள்ளத்தைச் செலுத்தித்தம் பணியில் வெற்றி பெறுகின்றனர்.''இப்பொழுது என் நெஞ்சம் எந்த ஒரு செயலிலும் ஈடுபடாது'' என்று சொல்பவரைக் காண்கிறோம்.

கீதை மொழிந்த கண்ணனிடம் உபதேசம் பெறும் பெருவாய்ப்பினைப் பெற்ற வில்வீரன் விசயன், ''மனம் குழப்பமடைகின்றது. காற்றால் அலைப்புண்டதாக உள்ளது. நெஞ்சத்தினை ஒரு முனைப்பாக நிலைப்படுத்த இயலவில்லையே!என்செய்வேன்'' என்று தன் உள்ளம் இருக்கும் நிலையினை எடுத்தியம்புகின்றனன்.

அவன் கூற்றினை ஆமோதித்தே கண்ணன் மொழிவான் வலுவார்ந்த தோள்படைத்தவனே! நீ சொல்வதில் ஐயமேதுமில்லை. உள்ளம் உழன்று கொண்டேயிருக்கும் தன்மையுடையது. குந்தியின் மைந்தனே! ஆனால் ஆன்மாவின் நிலையினை நன்கு உணர்ந்து பயின்று பராமரிப்பின் மூலமாகவும்,

பிறபொருள்களின் குற்றங்குறைகளையுணர்ந்து, அவற்றின் பயனற்ற தன்மையையும் தெளிந்து தெரிந்து, அவற்றின் மீதுள்ள பற்றினை அறவே உறுதியாக விலக்குவதன் வாயிலாக வும் நெஞ்சம் வசப்பட்டு நிலைபெறுவதாகும்.

எவனொருவன் தன் நெஞ்சத்தினை தன் வயப்படுத்தி அடக்கிடும் திறமையற்றவனோ அவன் யோகம் பெறுவதில் சமர்த்தனல்லன். இதுவே எனது முடிவான எண்ணம். கர்ம யோகத்தைச் செய்வதால் மனம் உயர்நிலையடைந்து, மனதை வசப்படுத்தியவன் யோகம் பெறுவதில் வெற்றி பெறுவான் என்பது திண்ணம்.

—இங்கு நம்மாழ்வார் அருளிய ''அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்......'' என்னும் பாசுரத்தொடர் உன்னற் பாலது.—

உரிய சுலோகங்களாவன—

அருச்சுனன் கூறியது—

சஞ்சலம் ஹி மந: கிருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்।

தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்॥ 6—34

பகவான் - கண்ணன் - பகன்றது-

அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்।

அப்யாஸேநது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே॥ 6—35

அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி:।

வச்யாத்மநா து யததா சக்யோ வாப்தும் உபாயத:॥ 6—36

உலகப்பற்றினை அறவே துறந்த மாமுனிவர்களான ஆழ்வார்களும் திருஉறையுப் மார்பன் பால் பக்தி பண்ணு வதற்கு தன் நெஞ்சை துணையாயிருக்குமாறு இறைஞ்சுகின்ற னர். சில பாசுரங்களில் தமக்கு நெஞ்சம் துணை செய்ததற்காகப் போற்றுகின்றனர் மற்றும் சிலவற்றில் நெஞ்சம் ஒத்துழைக்க மறுத்ததால் வருந்தியும் ஏங்கியும் மொழிவர்.

நம்மாழ்வார், தம்நெஞ்சுக்கு ஆர் விகுதி கூட்டி நெஞ்சினார் என்று குறிப்பிடுவார். தன் நெஞ்சை கண்ணன் வைகுந்தனிடம் தூது அனுப்பினார். அந்நெஞ்சு பெருமான் பேரழகில் ஈடுபட்டு அவனிடமே, ஒன்றியிருந்து விட்டது

மீண்டும் ஆழ்வாரை நாடி வரவில்லை. இந்நிலையில், நாரைகளும் அன்னங்களும் பறந்து செல்வதைக் காண்கிறார். அவைகளிடம். அன்னங்களே!, நாரைகளே! நீங்கள் வைகுந்தன் கண்ணனைக் காண்பீர்கள். அவனருகே என் நெஞ்சு இருக்கும். அதனிடம், ''நீ, ஆழ்வாரிடமிருந்து தூதாக வந்தனையே! இங்கேயே இருந்து விட்டனையே! அங்கு ஆழ்வார் உன்னைக் காணாமல் பரிதவிக்கின்றார். நீ வந்து எத்தனை நாட்கள் ஆயிற்று. இன்னமும் திரும்பிச் செல்லாமலிருக்கின்றனையே! இது தகவாமோ?'' என்று வினவி என் நெஞ்சை என்னிடம் வரச்செய்வீராக என்று மேற்சொன்ன பறவைகளிடம் வேண்டுகின்றார். (திருவிருத்தம்30)

திருவாய்மொழி முதற்பாசுரத்தில், உயர்வற உயர் நலமுடையவனும், மயர்வற மதிநல மருளியவனும் அயர்வறும் அமரர்கள் அதிபதியுமான பெருமானின், துன்பங்களை அறவே நிக்கவல்லதான சரண கமலங்களை வணங்கி எழுவாய் என் நெஞ்சமே என்று நெஞ்சுக்கு உணர்த்துகின்றார்.

நெஞ்சை உயிரே! என விளித்துப்பேசுவார். உயிரே நீ எனக்கு நல்லையாகவே இருக்கின்றனை. உன்னைப் பெற்றதால் விண்ணோர் தலைவனான பெருமான் மது சூதனனும் நானும் ஈருடல் ஓருயிரானோம். எவ்வாறெனில் தேன், பால், நெய், வெல்லம் மற்றும் அமுதமும் கலந்துள்ளதைப் போல் ஒன்றியவர்களானோம். (திருவாய்மொழி 2-3-1)

என்னுடன் இரண்டறக்கலந்த எம்பெருமான் நாரணற்கு கைம்மாறாக எனதாவியையே அவனுக்கெனவே தந்துவிட்டேன் அவனை விடுத்து மீண்டுவருவதென்பதில்லையாம். (2-3-4)

நெஞ்சே! பயனற்ற செயல்களைச் செய்வதால் பயனேதுமில்லை. பயன் யாது என்றியம்புவேன் உன்னுவாய் - திருமாலிருஞ்சோலையம்பதியில் புயல்மழை மேனியனான பெருமான் சுந்தரத்தோளன் சேவை தந்தருள்கின்றான். அவன் வதியும் பதியில் சோலைகள் சூழ்ந்துள்ளன. அங்கு சென்று அம்மேக வண்ணனைச் சேவித்தின்புறுவதே நாம் செய்யவேண்டிய செயலாம். (2-10-3)

நெஞ்சமே! எத்தனை காலம் தான் நாம் மெய்ஞானத்தைப் பெறாதவர்களாய் வினைகள் காரணமாக மீண்டும் பிறப்பிடர் பட்டு ஏங்கி வருந்திக்கொண்டிருப்பது! எங்கெங்கும் எல்லாக் காலங்களிலும் நீக்கமறத் தோன்றித்திகழ்பவனும் மெய்ஞ் ஞானச்சோதியுமான கண்ணனின் தாளிணையடைந்து உய்வைப் பெறுவோம். (3-2-7)

கண்ணா! நீ கோவைப்பழம் போன்ற சிவந்த எழிலார்ந்த வாயுடையவளான நப்பின்னை நங்கையின் கைத்தலம் பற்று வான் பொருட்டு, உன்னை எதிர்த்து வந்த ஏழு அடலேறுகளை அடக்கியொடுக்கி வீழ்த்தினை. மதிள்களால் சூழப்பட்ட இலங்கை அழிந்து படுமாறு நீயே இராமனாய் வந்துற்ற காலை வில்வளைத்து அம்பு எய்தினை. நின்னை எதிர்த்து வந்த குவலயாபீடமெனும் கரியின் கொம்பொசித்து அதனை வீழ்த்தி அழித்தனை. இத்துணை வீரமும், மாண்பும், பேராற்றலும் கொண்டு திகழும் உன்னை, உனக்கே அடியனான நான் முப் போதுகளிலும், அன்றலர்ந்த மலர்களையும், நீரையும் கொண்டு விதிமுறைப்படி அருச்சித்து வணங்கி வழிபடாமல் இருப்பே னாகிலும், நின்றன் மலரினும் மென்மையான திருமேனிக்கு எனது நெஞ்சத்தையே மணம் மிகுந்த சந்தனமாக சமர்ப்பிக் கின்றேன். காணிக்கையாக்குகின்றேன். (4-3-1)

எனக்கு எந்தையாயும், அனைத்துலகங்கட்கும் ஒரே இறைவனான இன்னமுதத்திருமகள் நாதன் நாரணனுக்கு, என் நெஞ்சம், திவ்வியத்திருமேனியில் பூசுவதற்குரிய மணம் கமழும் சந்தனமாயிற்று. நான்சொல்லும் பண் பொருந்திய செந்தமிழ்ச் சொற்களாலான பாக்கள் அவன் அணிந்திடும் மாலையாயிற்று. அவன் அணியும் பட்டாடையும் அப்பனுவல்களேயாம். தேசு நிறைந்த அவனது வண்ணத்திருமேனியில் அணிந்திடும் அணி கலன்கள், நான் அவன் முன்னே நின்று என் கைகளைக்கூப்பிச் செய்திடும் அஞ்சலியேயாம். (4-3-2)

கட்டழகும் பேரெழிலும் கொண்டு விளங்குபவளான மாமலர் மங்கையுறையும் திருமார்பைக்கொண்டு திகழ்பவனும், அழகும் மதிப்பும் மிடுக்கும் உடைய மலை போன்றதான திருத் தோள்களைக் கொண்டு தோன்றுபவனும், பேராற்றல் படைத்

துள்ள திருவாழியைக் கையதனில் பெற்றுள்ளவனும், அவனுக்குச் செய்யும் பணிவிடைகளில் பிழையேற்படாவண்ணம் இருக்கும் என்னைத்தன் அடியனாக ஏற்றருளியவனும் நீலமணிவண்ணத்திருமேனியனுமான பெருமாஞல் விரும்பப்படாத பேதை நெஞ்சால் நாம் பெற வேண்டுவது ஒன்றுமில்லை-இப் பனுவலில் பெருமானிடம் ஈடுபடாத உள்ளத்தால் நாம் பெறக் கூடியது ஏதுமில்லை என்றியம்புகின்றார்-(4-8-2).

தலைவி நிலையில் பேசுகின்றார்-

என் கண்ணன் என்னைஅணுகி வாந்தானில்லை. அவன் பேரெழில் கொண்ட செங்கண்ணன். என் உயிர்காப்பார் ஒருவருமிலர். ஆழ்ந்த கடல், வான், மண் ஆகியன யாவற்றையும் மூடிக்கொண்டு இருள் கொண்ட இரவு நீண்டதாகவே உள்ளது. இந்நிலையில் பாவியேனான எனது நெஞ்சமே! நீயும் எனக்கு அனுகூலமாக உதவிடும் நிலையில் இல்லையே! நான் யாது செய்வேனே? (5-4-2)

என் நெஞ்சமே! நீயும் எனக்கு உதவுவதாய் இல்லை. பொழுதோவெனில் யுகக்கணக்கில் வளர்ந்து விட்டது. பொழுதும் விடிவதாயில்லை. விற்பிடித்த மாவீரனை என் நாதன் காகுத்தன்-ஸ்ரீராமபிரான்-என்னை அருகினானில்லை. நான் ஏன்தான் பெண்ணாய்த் தோன்றினேனே? மாய்ந்தொழியும் வழியையும் அறிந்தேனில்லையே. (5.4.3)

என் நாயகன் கண்ணன் பால் எனக்கு உண்டான காதலெனும் நோயால் என் நெஞ்சம் பெரிதும் வாதிக்கப்பட்டதாயுள்ளது. ஊழிக்காலந்தானே? என ஐயுறும் வண்ணம் நீண்டதேயான இரவும் என் கண்கட்கு எது ஒன்றும் புலப்படாமல் செய்துவிட்டது. தனது திருக்கரத்திலே நேமியைநிலையாகப் பெற்றிருக்கும் மாயனை என் நாதன் என்னை நண்ணி வந்தானில்லை. இந்நிலையில் வருத்த முறுவதற்கெனவே தோன்றியவளான என் உயிர்காப்பார் இங்கு யாருளர்? ஒருவருமில்லையே! (5-4-6)

தோழி, நாயகியின் நிலையினை அவள் தாயிடம் உரைப்பதாகத்தன் பக்தி மேம்பாட்டினை உரைக்கின்றார்-இங்கு

சிந்தை என்று குறிப்பிடுவார்-அன்னைமீர்! என் தோழியான உங்கள் செல்வி பெருமானின் மூன்று பிராட்டிமார்களான திருமாமகள், நிலமகள், நப்பின்னை-ஆகியர்வளோ? எனத் தோன்றும் வண்ணம் எம்பெருமான் மேல் காதல் வயப்பட்ட வளாய் நெடுமாலே! என்னை அணுகிவாராய் என்று உரத்த குரலில் கூவுகின்றனள். இது மாயந்தானோ? நான் அறிகின் றேனல்லேன். தன்காதலனான ஸ்ரீமந்நாராயணன் நின்றிருந் தருள் நல்கும் தோலைவில்லி மங்கலம் நோக்கித்தலை தாழ்த்தி வணங்குகின்றனள். மற்றும் அவ்வூரின் பெயரைப் பேசுவ தையே சிந்தையில் கொண்டுள்ளனள். (6-5-10)

நம்மாழ்வார் இயற்றியருளிய பெரிய திருவந்தாதியை ''மன்னிய நற்பொருள் பெரிய திருவந்தாதி'' என்று போற்று வார் நம்வேதாந்தகுரு.அவ்வந்தாதியில் மூவொன்பது பனுவல் களில் தன் நெஞ்சை விளித்துப்பேசுவார். முதற்பாசுரத்திலேயே நெஞ்சை விளிக்கின்றார். விரிவைத்தவிர்ப்பான் பொருட்டு சில பாடல்களின் உரை உரைக்கின்றனம். முயற்சி மேற்கொண்டு எழுச்சியுடன், எனக்கும் முன்னமேய பெருமானிடம் பற்றுக் கொண்டுள்ள என் நெஞ்சமே! நீ என்னையும் துணையாக்கிக் கொண்டு கவிபாடுவாயாக. ஈரமுடைய நாவினால் தோற்று விக்கப்பெறும் இணையும் சொற்களைக்கொண்டு, காயாம்பூ வண்ண மேனியனை பெருமானின் புகழ்களை-பெருமைகளை-போற்றித்துதித்திடுவோம். 1.

பெருமான் எனக்கு அருள் நல்கினான். அதன் உதவி யால், நானும், எனது நெஞ்சும் சேர்ந்து கடுவினைகளை அணுக வொட்டாமல் காடு, மலைகளிலெல்லாம் புகுந்தோடுமாறு விரட்டியடித்தோம். பெருமான் அளித்த அருள், வினைகளை விலக்கி விரட்ட தண்டாகப் பயன்பட்டது என்று ''அருளென் னும் தண்டாலடித்து'' என்றியம்புவார். 26

நெஞ்சே ஒருகண் அதனால் பெருமானைக் கண்டு உணர லாம் என்கிறார்-

எந்தவொரு நாளிலும் 'கண்' எனப்பெயர் கொண்ட புலன் புறக்கண்களால் கண்டு தெளியகில்லா எம்பெருமானின் எழில்

கொள் சோதித்திருவுருவை, நெஞ்சு-மனம்-எனப்படும் அக உறுப்பான கண்ணுனது நினைந்து-நினைந்து தியானத்தால் நிதர்சன காட்சி பெற்றால், அக்கணத்திலேயே நமது புறக் கண்கள் கொண்டும், திருவாழி கொண்டு திகழும் மேக வண்ணத்திருமேனியனைக் காண இயலும். நெஞ்சு நினைந்து தியானம் செய்யாவிடில் பெருமானைக்காண்பது அரிதாம். 28.

என் மனமே! உள்ளமே! நீ நம் தலைவனான எம்பெருமானைமறந்திருப்பாய், அல்லது மறக்காமலுமிருப்பாய். (இருப்பினும்) நெஞ்சமே! நீ தகாதனவற்றையே செய்வதாக உணர்கின்றேன். ஆகவே உன்நிலை கண்டு அஞ்சியவனுனேன் தன்னை எதிர்த்து வந்த மல்லர்களின் வாழ்நாளை மாய்த்தொழித்த கண்ணபிரானையே நீ வாழ்த்தவேண்டும் நாம் உய்வதற்குரியவழி இதுவேயாகும். உனக்கு இதனை அறிவித்தேன். 84.

''கடலையொத்த நெஞ்சே! உள்ளமே! மாவலி வேள்வியில் மாணுருவில் சென்று தன் அழகிய திருக்கையில் நீர் வார்க்கச் செய்து நிலம் பெற்று உலகனைத்தையும் மூன்றடியால் அளந்து கொண்ட செந்தாமரைக்கண்ணனும், தன்பால் மால் கொள்ளப்பண்ணுபவனுமான பெருமானுக்குப் படையாக விளங்குவது பேரொளி வீசிடும் திருநேமியாம். அவன் ஏறிச் செல்வது கருடனென்னும் புள்ளரசனாம் அவன் பள்ளிகொள்வது அனந்தனென்னும் அரவரசின்மீதாம். நீ இதனை அறிந்து அவ்வெம்பெருமானின் கமலப் பாதங்களை அடைவாயாக.

''என் மனமே!, இன்று தொடங்கி இனிவரும் நாள்களிலெல்லாம் பொன்னொளி வீசிடும் சக்கரப்படையைக் கைதனிற் கொண்டுள்ள எம்பெருமானைப் பற்றியதான புகழுரைகளையே ஈடுபாடின்றியேயாயினும் மேலெழுந்தவாருகிலும் சிந்தித்த வண்ணமே இருந்திடுவாயாக. அவ்வாழியான் உன்பால் உள்ள மலைபோன்ற குற்றங்களைக் காணுமல், உன்னிடம் உள்ள நற்குணங்களையே கண்டு அருளும் பண்பினன்.

''எனது மனமே!, வானுலகோரான தேவர்கள் திருமகள் மார்பனுன பெருமானின் பெருமையை அறியக்கூடும். இது

இவ்வாருக நாமும் அப்பரமனின் அற்புதத்தை அறியவல் லோம். எதனையென்னில்-பூவில் வீற்றிருக்கும் பெருமைமிக்க தவசியான பிரமனின் தாள்களில் வீழ்ந்து வணங்கிய வாளேந் திய அரக்கனை இராவணனின் சிரங்களை தன் பாதத்தால் பத்து என அளந்து அப்பிரமனுக்குணர்த்திய பெருமானின் மாண்பினை அறியவல்லோம்

''படத்தைக்கொண்டுள்ள ஆதிசேடன்மீது அறிதுயில் கொள்ளும் பரமன் கொடிய முதலையால் இடர்ப்பட்ட களிற்றின் துயர்நீக்க முதலையைத் துண்டித்து அக்கரியினுக்கு அருள் நல் கினன். என் உள்ளமே! எழுவாய்! நாம் எம்பெருமான் பாத கமலங்களில், கொய்த புன்னைப்பூவால் அருச்சித்து கைகூப்பி வணங்குவோமாகில் நமக்கு இடர் என்பது இல்லையாம். பெரு மானைப் பணிபவர் எவருமே இடருறுவர் என்பது இல்லை.

''ஐம்புலன்களையும் தன்வசத்தில் கொண்டு நிறுத்தி, பூக்களையும், புனலையும் பூசனைக்கென எடுத்துக்கொண்டு, ''எல்லாம் எம்பெருமானே''என்னும் உறுதியான நினைவுடன், வணங்கி வழிபடும் மனமே! நீ அரவரசனைப்படுக்கையாகக் கொண்டுள்ள பெருமானின் அருமை பெருமைகளை நன்கு அறிந்துள்ளனையோ? அவனது கருடக்கொடியின் சிறப்பையே னும் தெரிந்துள்ளனையோ? நீயே பகர்ந்திடுவாயாக'' என்று பொருள் மிகுத்த மறைவிளங்கப் புவியோருய்யப்பொய்கை தனில் வந்துதித்த புனிதனெனும் பொய்கையாழ்வார் தாம் அருளிச்செய்த முதற்றிருவந்தாதியெனும் பிரபந்தத்தில் முறையே 21,41,45,78,85 ஆகிய பாசுரங்களில் தம்நெஞ்சுக்கு உணர்த்துவார்.

கடன் மல்லைக் காவலலெனெனும் பூதத்தாழ்வார்,

''நல்ல தன்மையுள்ள நெஞ்சமே!, தன்னடியார்க்கருள்பவனும், தீயவர்கட்குத் தண்டனை அளிப்பவனும். அல்லது முழுவதும் அழிப்பவனும் அப்பரமனை வாமனப்பெருமானே என்றுணர் வாய், அவனே காற்றும் தீயுமாகவும், நீரும் வானமாகவும், மலைகளுள்ள மண்ணுலகமாகவும் உள்ளான் என்பதை நோக்கு வாய் மற்றும் படைப்புக் காலம் முடிந்து ஊழியின் முடிவில்

கருங்கடலில் சீறிப்பரவும் படபாக்கினியாக பேரொளிப்பிழம் பாய்த் தோன்றுபவனும் அவனே என்பதையும் அறிவாய்.

''என் நெஞ்சே!, முலைதனில் நஞ்சினைத்தோய்த்துக் கொண்டுவந்த வஞ்சகி, வலிமை மிகுந்தவளான பூதனையிடம் மழலைப்பேச்சு பேசியவண்ணம் கொங்கை சுவைத்து அவளு யிரையும் உண்டொழித்த நாவினை உடையவனென்று நினைத்து, இந்நாளிலந்தனில் எங்கெங்கும் கேட்கும்வண்ணம் அதிர்குரலில் அச்சமேதுமின்றி அஞ்சாது கூவி அழைத்திடு வாயாக.

''மனமே! நீலமணிவண்ணமேனியனான பிரானின் திருவடியிணைகளை நினைந்திருப்பாயாக. மேலும் புனிதமளித் திடும் அவன் திருநாமத்தையும் எண்ணியிருப்பாயாக. பெரிய பாற்கடலினின்றும் எழுந்து அலையெழும் கடலைக் கடைந் தருளிய, நீர்க்கடல் வண்ணத்தனான அவனது எழில் நிறத்தை யும் மதித்து நினைந்திடுவாயாக.

''விவேகம் பெறும் நிலையிலுள்ள மனமே!, இப்பிறவிக் கடலில் உழன்றுபடுவதற்கு இந்தப்பாபமே காரணம் என்பதைக் காண்பாயாக. பிறவிபெரும் இந்நிலவுலகின்கண் நாம் பெறுவ தனைத்தும் துக்கமே என்பதையும் கண்டிடுவாய். நெஞ்சமே! நீ அறியும் திறன் கொண்டுள்ளாயாகில், நம்மை நரகத்தின் அருகேயும் சேரவொட்டாமல் செய்வதற்கு மூலகாரணமாய்த் திகழ்வது நாராயணனுடைய திருநாமமே என்பதையும் கண்டு தெளிவாயாக.

''நல்லவையே நாடும் நெஞ்சமே!, புருடோத்தமனான எம்பெருமானின் பாத கமலம் நாம் பெறக்கூடும். அப்பரம னுக்குச் சாத்தி மகிழ்வதற்கான அழகிய தாமரை மலரும் நமக்குக்கிடைக்கும். அவ்வுத்தமனின் பேர் சொல்லித்துதித்து, அவன் பாதகமலங்களைப்பணிந்து வணங்கி கமலப்பூவை அவன் திருமேணியில் அணிவித்து, அவன் பெயர்கள் ஆயிரத்தையும் எக்காலங்களிலும் சொல்வதெனும் தவமும் நாம் பெறக்கூடும்''

என்று தாம் அருளிய இரண்டாந்திருவந்தாதியென்னும் பிரபந்தத்தில் முறையே 24,49,51,66,77 ஆகிய பாசுரங்களில் தம் நெஞ்சிடம் மொழிகின்றார்.

மாமயிலை வந்த மாமுனிவர் பேயாழ்வார் தம் நெஞ்சுக்கு உரைத்தவை தாம் அருளிய மூன்றாந்திருவந்தாதியில்—

''என் நெஞ்சமே! கருமையான கடலால் சூழ்ந்த உலகனைத்தையும் அளந்தவனும்,புள்ளரசான கருடனை வாகனமாகப் பெற்றிருப்பவனும், ஸ்ரீமானாக விளங்குபவனும், திருவைகுந்தத்திலும் அழகு முதலானவற்றில் அளத்தறிதற்கரியனாயிருப்பவனும், எல்லாப் பொருள்களுக்கும் வெகு தொலைவிலிருப்பவனும், அணுகுவதற்கரியவனுமாயிருப்பவனுமான நம் பெருமானின் தாளிணைகளை வணங்கியேத்த வந்திடுவாயாக. 7

''மிடுக்குடைய மனமே! பரந்தகன்று விளங்கும் நில உலகாகவும், மிகப்பெரிய வானமாகவும், காற்றாகவும், நெருப்பாகவும், நீராகவும்-என்று ஐம்பெரும் ஆற்றலுள்ளவனும், சுடரொளி வீசுகின்ற திருநேமியைப் பெற்றுள்ளவனுமான பெருமானின், நம்மைச்சூழ இருக்கும் திருவடிகளையே எல்லா நாள்களிலும் இடைவிடாமல் தொடர்ந்து தொழுதெழுவாயாக. 24.

''என் உள்ளமே! கண்ணனாய் வந்துற்றகாலை வஞ்சகன் கஞ்சனை வதைத்து, வாமனனாய் வந்த காலை ஓங்கி வளர்ந்து உலகங்கங்களை அளந்ததாலுமான சோர்வினால், திருவேளுக்கையெனும் திருத்தலத்தில் வீற்றிருந்து, பின்னர் திருவெஃகாவெனும் திருப்பதியில் பள்ளிகொண்டருள்பவனும்,களங்கமேதுமிலாத சீர்மை மிகுந்த நேர்மையான கல்யாண குணமுடையவனுமானவனை நீ உள்ளபடி உணர்ந்து தெளிந்திடுவாய். 34.

''எனது நல்ல மனமே! உத்தமனான எம்பெருமான் உளன் என்று உணர்வாய். என்றென்றும் எங்கெங்கும் இருக்கின்றான். வானமும் தொடும் வண்ணம் உயர்ந்த சிகரங்களைக் கொண்டுள்ள திருவேங்கடமாமலையில் நின்றருள்பவனும், நிலவுலகம் தெரியாதபடிக்குத்தன் தாளால் அளந்து கொண்டவனுமான நம் சுவாமி தியானம்-நினைந்துருகுதல்-பண்ணுவோருள்ளத்தில்-இதயத்தில் வசிப்பவனாயுள்ளான்'' என்று தம் நெஞ்சிடம் மொழிகின்றார். 40

தை மகத்தில் மழிசை மாநகரில், மழிசை வந்த சோதி யாய்வந்த திருமழிசைப்பிரான், தாம் மொழிந்த''வேதச்செழும் பொருள் நான்முகன் திருவந்தாதியில் 8,-86-இரு பாசுரங்களி லும், மெய்மிகுந்த திருச்சந்த விருத்தத்தில் 106-ம் பாடலிலும் நெஞ்சை விளித்துப் பேசுவார். உரை முறையே வருமாறு-

என் மனமே! சிவனைவென்ற விட்டுவின் வில்லை பரசுராமரிட மிருந்து பெற்றுக்கொண்டவனும், கொத்தென குலை போல் இணைந்தேயிருந்தநிசாசரன் இராவணனின் சீரெல்லாம் அழியு மாறு அழித்த கூரிய அம்புகளைப் பெற்றுள்ளவனும் செங்கமலக் கண்ணனும்,தன்னைத்தஞ்சமெனப் பற்றியவர்களிடம் பேரருள் நல்குபவனுமான இராமபிரானைத் தவிர்த்து நிறைவில்லாத மற்றெதுவும் நமக்குத்துணை செய்யாது.

நல்ல மனமே! புருடோத்தமனான எம்பெருமான் இருக் கின்றான். இதில் ஐயமில்லை. அவன் என்றென்றும் இருப்ப வனாயுள்ளான்.அவனையே நினைந்திருப்போரின் உள்ளத்தே உறைபவனாயுள்ளான். தனக்குத்தானே இணையான, ஒப்பான ஸர்வேச்வரனான அப்பரமன், எது ஒன்றுமிராத வெறுமையா ளனான எனக்கும், மற்றும் என்னைப் போன்றிருப்போர்க்கும் தானாகவே நண்ணிவந்து சேவை தந்தந்தருள்பவனாகின்றன் இதனை நீ அறிந்து கொள்வாயாக.

பெருமானே! நீ தாரகாசுரப்போரில் உன்னை எதிர்த்து வந்த காலநேமியென்னும் அசுரனையமனுக்கு விருந்தாக்கும் படிக்கு அறுத்து வீழ்த்தும் சக்கரத்தையும், சங்கையும், தண்டு கதையையும்-, வில்லையும், கத்தியும் கைக்கொண்டு திகழ்ப வனே!, இந்திரன் ஆயர்கள்பால் சீற்றம்கொண்டு கல்மாரி பொழிவித்த போழ்து, பசுக்களுக்கும், ஆயர்களுக்கும் அல்லல் நேரிடாவண்ணம் எல்லோர் முன்னிலையிலும் கோவர்த்தன மலையைத் தாங்கி நின்ற உன்றன் புகழினைத் தவிர்த்துப் பிறி தொன்றிலும் ஆராயும் எண்ணமும் ஆசையும் என் நெஞ்சுக்கு இல்லை.-இப்பாசுரத்தில் தன் நெஞ்சின் நிலைத்த நினைவை நிமலனுக்கு உணர்த்துகின்றார்.-

''வாள்வீசும் பரகாலன்கலிகன்றி'' என்று தன்னை பதிகப் பயன் பனுவலில் அறிமுகம் செய்யும் திருமங்கை மன்னன்,தாம்

புனைந்தருளிய அறிவுதரும் பெரிய திருமொழியிலும், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், ஆகிய பிரபந்தங்களிலும் தம் நெஞ்சை விளித்துப்பேசுவார்—

வடநாட்டுத்திருப்பதிகளில் ஒன்றுன திருப்பிருதி என்னும் திவ்வியத்தலத்தில்-இமயமலைத்தாழ்வரையிலுள்ளது- ''அன்ரொருநாள் மிகுந்த வீரமும் ஆற்றலும் கொண்டவனுன வாலியின் மார்பில் அம்பு புகுமாறு, அவனது ஆன்மா உய்யுமாறு, வரிசிலை-வில்லை வளைத்து கணையேவிய இராமபிரானுன புருடோத்தமன், நல்லதேயானதும், வாலிபோன்ற கொடியவர்கள் செல்ல இயலாததானதும், இமயத்துள் இருப்பதும், நீருண்ட மேகங்கள் இடிமுழக்கமிடும் போது மிகுந்த தோகைகளை உடைய மயில்கள் தம் வயிறு படுமாறு, ஏறுவதற்கரிதான மலையின் சிகரங்களில் ஏறிக்களிப்புற்று ஆடுமிடமாயிருப்பதும், பரந்தகன்ற சுனைநீர்த் தேக்கங்களையுடையதுமான பிரிதியென்னும் திருத்தலந்தனில், எம்பெருமானைக்கண்டு சேவித்துக் களிப்பெய்திச் சென்று அடைவாயாக.'' என்று தன் நெஞ்சை விளித்து மொழிகின்றார். இதேபோன்று, சாளக்கிராமம், திருவேங்கடம், மணிமாடக்கோயில், வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், நந்திபுர விண்ணகரம், திருநறையூர், திருக்கண்ணபுரம், திருவல்லவாழ், திருமாலிருஞ்சோலை-ஆகிய திவ்வியத்தலங்களில் உறைந்தருள் நல்கும் உத்தமனுன எம்பெருமானை ஏத்தித்தொழுது, ஒவ்வொரு தலத்திற்கும் பதிகம் பாடி, ஒவ்வொரு பாடலிலும் எம்பெருமானை வணங்கி வழிபடுவாய் நெஞ்சமே! என்று தன் மனதிடம் வேண்டுகின்றார்.

திருக்குறுந்தாண்டகத்தில் தன் நெஞ்சம் எம்பெருமான் பால் நிலைத்த எண்ணங்கொண்டிருக்கவில்லையே என்று வருந்தியுரைப்பார்.

என் மனமே!, ''நீ, மணிநிற வண்ணனுன எம்பெருமான் திருமாலிடம் சென்று, அவன் அணிந்த திருத்துழாய் மாலையைத் தந்தருள்கின்ருனு? இல்லையா? இரண்டில் ஒன்றைத் தெரிந்து வா என்று என் நெஞ்சை பெருமானிடம் அனுப்பினேன், ஆனால் என் நெஞ்சம் திரும்பி வராமல் என் நாயகனான கண்ணனிடமே ஒன்றி விட்டது''

என்று சிறிய திருமடலிலும்,

''எனது அறிவும், கைவளைகளும் போலே என் மனமும் எம்பெருமானிடம் சென்றதாயிற்று'' என்று பெரிய திருமடலிலும் நாயகிநிலையில் மொழிவார்.

தேறியமாஞானமுடன் திருக்கோளூரில் சித்திரையில் சித்திரை நாள் வந்த மதுரகவியார், நம்மாழ்வாரையே தெய்வமெனக்கொண்டு பக்தி நெறியில் நின்றிருந்தவர். இதனை,

''நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்,
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே,
தேவுமற்றறியேன் குருகூர் நம்பி,
பாவினின்னிசை பாடித்திரிவனே''

என்னும் பாசுரத்தால் ''நான்குருகூர் நம்பியைத் தவிர்த்துப் பிற தெய்வத்தைத் தெரிந்துள்ளேனல்லேன்''என்று தன் உள்ளத்தின் நிலைத்த தன்மை உரைத்திடுகின்றார்.

இவர் தம் அடிச்சுவட்டைப்பின்பற்றியே, திருவரங்கத்தமுதனாரும் எம்பெருமானாரையே, தனது தெய்வமெனப் போற்றி மகிழ்ந்திருந்தவர் தம் மனம் மகிழ்ந்து தம் ஆசாரியனைத்துதித்துப்போற்றி''இராமானுச நூற்றந்தாதி'' என்னும் 108 கலிவிருத்தப் பாடல்களைக் கொண்ட பிரபந்தம் யாத்துள்ளார். இப்பிரபந்தத்தை ''பிரபன்ன காயத்ரி''என்று வைணவ உலகம் போற்றும்.

அமுதனார் நெஞ்சிடம் உரைத்தது. -பா.இ.நூ.3.
அமுதனார்-பெருந்தன்மை மிகுந்துள்ள என் நெஞ்சமே!உன்னை அடிபணிந்து வணங்குகின்றேன்.

நெஞ்சு-அமுதனாரே! நம்மெல்லார்க்கும் முழுமுதலான, திருமாமகள் கேள்வன் உளன். நாலாய் நின்ற அந்தமிலா ஆரணங்களை ஆய்ந்து செந்தமிழ்ப்பாக்கள் அருளிய பொய்கை முனிவர் முதல் கலியன் ஈருக ஆழ்வார்கள் உள்ளனர் தாளம் வழங்கித்தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளலான ஸ்ரீமந்நாத முனிகள், அவர் வழிவந்த ஆளவந்தார்-யமுனைத்துறைவர்-

உள்ளனர். மற்றும் ஆரணநூல் வழியில் நின்று, மறை நெறி களை எதிர்த்து நின்ற வாதியர்களின் வாதக்கதலிகளை, ஓர் வாரணமாய் மாய்த்த பிரானான ஏரணி கீர்த்தியதிராசர்,-இராமானுசர்-இருக்கின்றார் - இவர்களனைவரையும் விடுத்து என்னை வணங்குவதாகக் கூறுகின்றீரே! யாது காரணமோ?

அமுதனார்-என் மனமே! நீ இறுதியாகக்குறிப்பிட்ட இராமானுச முனிவருக்கு உண்மையாகவே, அவர் உவக்கும் வண்ணம் தொண்டர்களாய் விளங்கிய கூரத்தாழ்வான் போன் றோரின் திருவடியின் கீழ் நீயே என்னைக்கொண்டு சேர்த்தாய். அதற்குக் கைம்மாறு செய்வான் வேண்டியே உன்னை வணங்கு கின்றேன்.

நெஞ்சு - அவ்வாறானால் நான் போற்றுதற்குரியவனே இந்த அளவுக்கு உமக்குத்துணை செய்தமைக்கு மகிழ்வுறு கின்றேன்.

இந்த நெஞ்சமானது நமக்கு உற்ற உறவினனாகவும், பகைஞனாகவும் ஆகின்றது. ''மனதை வெற்றி கொண்டவ னுக்கு, அவன் மனம் உறவாகின்றது. தன் நெஞ்சத்தை வெல்லாதவனுக்கு அவன் மனமே பகையாகிறது'' என்பது கண்ணன் கனிமொழி- சுலோகம்

பந்துராத்மா த்மநஸ் தஸ்ய யேநாத்மைவா த்மநாஜித: I
அநாத்மநஸ்து சத்ருத்வே வர்தேதா த்மைவ சத்ருவத் II

பகவத்கீதை-அ 6.சு.6.

பராசரமாமுனிவரும் மனிதனுக்கு, மனம் உறவாகவும், பகையாகவும் இருக்கும் என்றுணர்த்துவார்-

மந ஏவ மனுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோ: I
பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந: II

உரை-மனிதனுக்கு இன்ப துன்பங்கட்குக்காரணம் மனமே யாகும். உலகியல் விஷயங்களில் பற்றுதல் கொள்வதால் மனம் துன்பத்திற்குக் காரணமாகின்றது. இதற்கு மாறாக உலகப் பொருள்களிடத்தில் விழைவு கொள்ளாத மனத்தால் மனிதன் முக்திபெறுகின்றான்.

நாமும் மனதை வென்று, நமது உறவாக்கிக்கொண்டு மாமலர் மங்கைமார்பனின் தாளிணைபணிந்து பேரின்பமெய்துவோமாக.

''நாராயணா! ஓமணிவண்ணா!! நாகணையாய்!!!
வாராய் என்னாரிடரை நீக்காய்...''

—கலியன்-சிறிய திருமடல்-23

மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறை மார்பன்
மலர்ப்பதங்களே சரணம்.

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!

ஸ்ரீ :

செல்வ நாரணன் என்றசொல் கேட்டலும்,
மல்கும் கண்பனி நாடுவன் மாயமே.
அல்லும் நன்பக லும்இடை வீடின்றி
நல்கி, என்னை விடான்நம்பி நம்பியே.

—நம்மாழ்வார்-திருவாய்மொழி ச-1,த-10 பா-8.

## தூயமணிவண்ணனைப் பாடிப் புனிதமெய்துவோம்

| |
|---|
| போதார் திருவுடன் பொன்னருள் பூத்த நம் புண்ணியனைப் போற்றி ஏத்துவோம். |

ஸ்ரீமந்நாராயணு ! ஸ்ரீமந்நாராயணு!! ஸ்ரீமந்நாராயணு!!!

## அஞ்சனவண்ணன் - ஆராவமுதன்

செஞ்சொற்க விகளாய் விளங்கிய ஆழ்வார்கள் ஈராறுவரில் ஒருவரான பட்டர் பிரான், பெரியாழ்வார் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். இவருக்கு விஷ்ணுசித்தர் என்பது இயற் பெயர். இவர் திருமகளார் பிரியாத தேவனையே தன் சித்தத்தில் நொடிப்பொழுதும் விடாமல் துதித்துக் கொண்டிருந்தமையால் இத்திருநாமம் பெற்ருர் போலும். பெரிய என்னும் சொல்லுக்கு மிக உயர்ந்த, மிகச்சிறந்த, உத்தமமான என்னும் பொருள்கள் கிடைக்கின்றன. ஏனைய ஆழ்வார்களுக்கு ''பெரிய'' என்னும் அடை மொழியைக்கண்டோமில்லை. ஸ்ரீவிஷ்ணுசித்தருக்கு இவ் வடைமொழி கொடுத்துச் சிறப்பித்தமைக்கு இரண்டுகாரணங் களைக்கூறலாம். மதுரையை ஆண்டவல்லப பாண்டியனின் பரத் துவம் பற்றியதான மனக்கலக்கத்தை ஐயம் திரிபு அற நீக்கி, திருமகளோடொரு காலும் பிரியா நாதனை ஸ்ரீமந்நாராய ணனே ஆதிபகவன், அவனே உலகுக்கோர் தனியப்பன். தன்னையொத்தாரும் மிக்காருமிலாதவன் உயர்வற உயர்ந்த வன்-என்றிவ்வாருகத் தக்க ஆதாரங்களைக்கொண்டும், அற நூல்கள் வாயிலாகவும் அறிவித்து அறுதியிட்டு மொழிந்தவர் இம்மாமுனிவர். இவர்தம் இத்தன்மைத்தான பெருஞ்சிறப்பினை உலகுக்கு உணர்த்துவான் பொருட்டே பேராயிரத்தானான செல்வநாரணன், இவர், பாண்டியன் வேண்டுதலுக்கிணங்கி வாரணத்தின் மீதமர்ந்து ஊர்வலம் வரும் காலையில், கருடன் மீது வீற்றிருந்து சேவை தந்தருளினுன். ஆழ்வாரும் பேரரு

ளாளன் பெருமானுக்கு இவ்வுலகோரின் கண்ணெச்சில் பட்டு விடக்கூடாதே என்று பல்லாண்டு பாடிக்கண்ணுறு கழித்தின் புற்றார். இவ்வரலாற்றினை வேதாந்த ஆரியனின் அமுதமொழி கொண்டு சுவைப்போம்-

பேரணிந்த வில்லிபுத்தூரானி தன்னில்
பெருஞ்சோதி தனிற்றேன்றும் பெருமானே!முன்
சீரணிந்த பாண்டியன் தன் நெஞ்சு தன்னில்
துயக்கற மால்பரத்துவத்தைத் திற மாச்செப்பி,
வாரணமேல் மதுரை வலம் வரவே வானின்
மால் கருடவா கனனுய்த் தோன்ற வாழ்த்தும்,
ஏரணி பல்லாண்டு முதற்பாட்டு நானூற்
றெழுபத் தொன்றிரண்டு மெனக்குதவு நீயே.

மற்றும், விஷ்ணுசித்தன் தூய திருமகளாய் வந்து அரங்கனார்க்குத்துழாய் மாலை முடிசூடிக் கொடுத்தமாதே!'' என்று ஆசார்யன் போற்றுதலைப்பெற்ற தன் செல்ல மகளான கோதை நாச்சியாரின் கைத்தலம் பற்றச் செய்தார் திருவரங்கச் செல்வனின் திருக்கரத்தோடு, ஜனகமகாராஜன் வைதேகியின் கரத்தினை ஸ்ரீராமனைப்பற்றச் செய்தது போலவும், யசோதையின் உடன்பிறப்பான கும்பகன்நப்பின்னை நாயகியின்கையினை, கார்மேகவண்ணன் கண்ணன் கைதனில் சேர்ப்பித்தது போலவும்.

இம்மகான் கிருஷ்ணுனுபவத்தில், அதிலும் கண்ணனின் பிள்ளைப்பருவ விளையாட்டுகளில் அளவிறந்த ஈடுபாடு கொண்டு விளங்கினாராயினும், அயோத்தியண்ணலிடத்திலும் பக்தி மேம்பாடுடையராகவே திகழ்ந்திருந்தார் என்பது மிகையல்ல. தாம் புனைந்த திருமொழி (பெரியாழ்வார் திருமொழி) மூன்றும் பத்து ஒன்பதாம் பதிகத்தில் கண்ணனையும் இராமனையும் ஒருசேர அனுபவித்தினியராகிருர். கண்ணனை அஞ்சனவண்ணனென்றும் மதிலைச்செல்வி மணாளனை ஆராவமுதனென்றும் குறிப்பிடுகின்றார்.

இப்பதிகத்தில் உந்திபறத்தல் என்னும் விளையாட்டுச் செய்கையின் வாயிலாக இராம-கிருஷ்ணுவதார விபவங்களை

அருளிச் செய்கிறார். மங்கையர்கள் வட்டமாகச் சுற்றிச்சுற்றி; கைகளை உயர்த்தியும் தாழ்த்தியும் கொட்டிக்கொண்டே கண்ணன்- இராமன் புகழ்பாடுங்கோள் என்று சொல்லி விளையாடுவது உந்தி பறத்தல் என்பதாம். இவ்விளையாட்டு வட தேசத்தில் கொண்டாடப்படுவதாக அறியக் கிடைக்கின்றது. இது தென்னாட்டில் நிகழ்ந்ததாகக் குறிப்பிடும் ஆழ்வார் இராமாவதாரத்திலும் அனுராகம்-ஈடுபாடு-பற்று-கொண்டுள்ள வராக அனுபவத்தினியராகிறார்.

ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது-பாடல்களில் யசோதையிளஞ்சிங்கத்தையும், இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பத்து பாசுரங்களில் இரகு சிங்கத்தையும் போற்றிப்புகழ்ந்தேத் துகின்றார் ஆழ்வார் பாசுரங்களையும்-பொருளையும் சுவைத்துக் களிப்புறுவோம்.

முதல் பாடலில் சத்தியபாமையின் கொழு நன் கண்ண னின் வலிமையைப் பாடிப்பரவுவீர் பாவையர்காள்! என்று பேசுகின்றார்-

1. என்னுதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்,
தன், நாதன் காணவே தண், பூமரத்தினை,
வன்னுதப் புள்ளால் வலியப் பறித்திட்ட,
என்னுதன் வன்மையைப் பாடிப்பற எம்பிரான் வன்மையைப் பாடிப்பற.

ஒருமுறை கண்ணபிரான் - ஸத்தியபாமை இருவரும் நரகாஸுரனை வதம் செய்த பின்னர் தேவருலகம் சென்றிருந் தனர். இந்திராணியின் நந்தவனத்திலிருந்த பாரிஜாத மலரைப் பார்த்த கண்ணனின் மனைவி அம்மலரைத்தன் குழலில் சூடி மகிழ விழைந்தனள். இந்திராணியிடமும் தன் விருப்பைத் தெரிவித்தனள் ஆனால் செருக்குற்றவளான அவ்வானுலக வனிதை இவ்வின்பமலர் மானிட மங்கையர்க்கேற்றதன்று. வானுலகோர்க்கே உரியது என்றுகூறி மலர்கொடுக்க மறுத்துக் கூறினள். ஸத்தியபாமை தன் நாயகன், காரணனாய் உலக ளிக்கும் கண்ணனிடம் தன் விழைவைத் தெரியப்படுத்தினாள். உடனேயே ஆற்றல்மிகுந்தவனான கண்ணன், மலர் ஈயமறுத்த

இந்திராணியின் கணவன் கண்ணெதிரிலேயே வலிவு மிகுந்த புள்ளரசனுன கருடனை அழைத்து, அப்பாரிஜாத மரத்தினையே வலிவுடன் பெயர்த்து வரப்பணித்து, அம்மரத்தை ஸத்திய பாமையின் மாளிகையிலுள்ள தோட்டத்தில் நட்டுவித்தான். இது மட்டுமின்றி எதிர்த்து வந்த ஆணவம் கொண்ட ஆயிரங் கண்ணனையும் அடித்து நிலேத்து நிற்க இயலாமல் ஓடச் செய்தான் இந்துணை வலிமை படைத்துள்ள எங்கள் நாதனும், நம்மெல்லோர்க்கும் பேருபகாரம் புரிந்தருளும் புனிதனுமான எங்கள் கண்ணனையே பாடிக்குதித்தெழும்பிக் கும்மி கொட்டி ஆடிடுவீர் ஆரணங்குகளே!

இரண்டாம் பாடலில் தசரதன் மைந்தன் தாசரதியின் வில்லாற்றலேயும், அவனது சீரிய பண்புகளையும் பேசுகின்ருர்-

2. என்வில் வலிகண்டு போவென்றெதிர் வந்தான்,
தன் வில்லினேடும் தவத்தையெதிர் வாங்கி,
முன்வில் வலித்து முதுபெண்ணு யிருண்டான்
தன் வில்லின் வன்மையைப் பாடிப்பற தாசரதி தன்மையைப் பாடிப்பற.

மாமுனிவருடனும் இளவல் இலக்குவனுடனும் சென்ற ஸ்ரீராமன், மாமுனி வேள்விகாத்து அவபிரதமாட்டிய பின்னர் கல்லேப் பெண்ணுக்கி, மிதிலேசென்று சிவதனுவை முரித்து, சீதையின் கைத்தலம் பற்றி வைதேகி மணுளனுக, சீதாராம னாக தன் தலே நகர் நோக்கிச் சென்று கொண்டிருக்கின்ருன். அப்பொழுது பரசுராமமுனிவர், ஸ்ரீராமா! ஏற்கனவே இற்றி ருந்த உருத்திரவில்லே முரித்ததில் உனக்குப் பெருமையேது மில்லே. இதோ என் கையிலிருக்கும் வைணவ வில்லே நீ நாணேற்றி முரித்தாயாகில் உன்னே மாவீரனென்று சொல்லு வது சாலப்பொருந்தும். இவ்வில்லே வளேத்தொடித்த பின்னரே உன்னேச்செல்ல அனுமதிப்பேன் என்ருர். அக்கணத்திலேயே பரசுமுனிவன் கையிலிருந்த வில்லேவாங்கி நிறுத்தி நாணேற்றி யது மன்னியில், அம்முனிவரின் தவம் முழுவதையும் தன் வாளிக்கிரையாக்கிக் கொண்டான் ஜனகன் மருகன்.

இன்னும் இயம்புவேன் கேண்மின்-மாமுனிவர் வேள்வி காக்கச் செல்லுங்காலேயில் தங்களேயெதிர்த்துத் துன்புறுத்த

வந்த வயது முதிர்ந்தவளான தாடகை என்னும் அரக்கியை, தன்வில்லை வலித்திழுத்து நாணேற்றி ஒருகணைக்கிரையாக்கி வீழ்த்தினான் இரகுராமன். இத்தகைய இரகுவீரனின் வில் லாற்றலையும், அவனது சீர்மையும் மேன்மையும் மிகுந்த பண்பு களையும் பாடிப்பரவிக் குதித்தெழுந்து கைகொட்டி ஆடிடுவீர் பாவையர்காள்!

இப்பாசுரத்தில் கண்ணன் உருப்பிணி நங்கையை (ருக்குமிணி பிராட்டியை) அவள் விரும்பிய படிக்கே அவளிடம் சென்று அவளைத்தேரேற்றி வந்து மணம் புரிந்து கொண்ட விபவத்தைப் பேசுகின்றார்-

3. உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு,
விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து,
செருக்குற்றான் வீரம் சிதைய, தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப்பற தேவகி சிங்கத்தைப் பாடிப்பற

குண்டினபுர மன்னன் உருக்மன் மகள் திருமாமகளின் அம்சமான உருப்பிணி நங்கை கண்ணன் மேல் காதலுற்று அவனையே மனதிற்குகந்த மணாளனாகப்பெற உறுதி பூண்டிருந் தனள். ''இவ்வுலகம் முழுவதிலும் ஈடுமெடுப்பிலாதவனும் மன்மதனுக்கும் மன்மதனான, பேரழகு படைத்துள்ள நின்னையே கணவனாகப்பெற உறுதியான எண்ணங்கொண்டுள்ளேன். என்னுடைய வளைக்கரம்பற்றி என்னை உம்முடைய இல்லாளாக ஏற்றருளவேணும்'' என்று ஓர் வேதியன் மூலமாக ஓலையும் அனுப்புகின்றனள் கண்ணனிடம். ஆனால் அவளுடைய அண்ணன் உருக்குமி அவளை, சிசுபாலனுக்கு மணம் முடிக்க மன்றல் நாள் உறுதிப்படுத்தி விடுகின்றான். இந்நிலையில் கண்ணன் உரிய நேரத்தில் சென்று உருப்பிணி நங்கை நல்லாளின் கைத்தலம்பற்றி அவளைத் தன் தேர்மீது ஏற்றிக் கொண்டு தன் தலைநகரரன துவாரகை திரும்புகின்றான். அவ்வமயம் தன்னை எதிர்த்து வந்த சிசுபாலன், ஜராஸந்தன் ஆகியோரை வலிவற்றவர்களாகச் செய்து புறமுதுகிட்டு ஓடுமாறு செய்தான். இவ்வளவுக்குப் பின்னரும் உருக்குமி, கண்ணனைப் போரில் தோற்கடித்துத் தங்கையை மீட்காமல்

நான் என் நகரம் திரும்பேன் என்று செருக்குற்று எதிர்த்து வந்து நிலேத்து நின்றிருக்கவும் இயலாமல் பரிபவப்பட்டு, மானமிழந்து வலுவிழந்து தவித்துக் கொண்டிருந்த நிலேயில் அவனது ஆணவம் கண்ட கண்ணன் சிங்கமாகவே சீறி அவனே வாள்வீசி வீழ்த்தவும் தயங்காத போழ்து உருப்பிணி பிராட்டி என் உடன்பிறந்தவனே வதைக்காதொழிக என்று வேண்டினள். அவள் வேண்டுதலுக்கிணங்கிய கருணைகரனான கார்மேக வண்ணன்உருக்மியின் தலேயை மொட்டையடித்துப்பரிபவத்துக் குள்ளாக்கிப் போக விடுத்தனன். அவனும் அவமானத்தால் தன் ஊர் திரும்பிச்செல்லாதவனாகி இடையில் போஜ கட மென்னுமூரிலேயே தங்கியிருந்தனன். கோகுலத்திலிருந்து மதுரைக்கு வந்து தன்னை தேவகி-வஸுதேவர் மகன் என்று நிரூபித்தருளிளுகையாலே தேவகிசிங்கமென்று பேசுகின்ருர். இத்துணே வலிமை மிகுந்த தேவகி மைந்தனைப் புகழ்ந்து பாடிக்குதித்துக் கும்மியடித்திடுவீர் குமரிப்பெண்டீர்காள்!

அடுத்து வரும் பாசுரத்தில் தந்தை சொன்ஞர் என்ற சிற்றன்னையின் உரைகொண்டு சினங்கொள்ளாமல் கானேகிய சீதைமணளனைப் புகந்தேத்துகின்ருர்-

4. மாற்றுத்தாய் சென்று வனம் போகேயென்றிட,
ஈற்றுத்தாய் பின்தொடர்ந்து எம்பிரான் என்று அழ,
கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம்போன,
சீற்றமிலாதானேப் பாடிப்பற சீதைமணள னேப்பாடிப்பற.

இராமனிடம் அன்புள்ளவளாயிருந்தும் கூன்ருெழுத்தை யான, கொங்கைவன் கூனியுமான கொடியவள் மந்தரையின் சொற்களால் மனங்கலங்கிய கைகேயி மாறுபட்ட மனத்தின ளாகி, இராமனை வனம் செல்க என்று தசரதன் சொன்னதாக ஆணேயிட்டாள். மறுகணமே இராமன் காடு செல்ல முற்பட் டான். ஈன்றெடுத்த அன்னையான கௌஸல்யை என்னுருயிர் மகனே! கானேக வேண்டாம் என்று அழுது கொண்டே பின் தொடர்ந்தனள். தாயிடம் கூடவே பாகம் பெறும் உரிமையுள்ள வளான சுமித்திரை தன் மதலேயான இலக்குவனுக்கு உரைப்பதன் வாயிலாக நன்மை பயப்பனவற்றையே நவின்று

வழியனுப்பி வைக்கும் பொழுது, சினம் என்பது சிறிதுமின்றித் தன் காதல் மனையாள் சீதையுடனும் தம்பியுடனும் வனத்தில் வாழச்சென்ற சீற்றங்கொள்ளாதவனும் சீதை மணாளனுமான இராகவனையே போற்றிக்குதித்தெழுந்து கைகொட்டி ஆடிடுவீர் காரிகையீர்!

ஆழ்வார் இரகுவீரனை, சீற்றமிலாதவனென்று பேசுகின்றார். ஆனால் கம்பர், கைகேயி, இராமனிடம் உன் தந்தை உன்னை வனவாஸம் மேற்கொள்ள ஆணையிட்டிருக்கின்றார் என்று சொன்னாள். அவள் வார்த்தைகளைச் செவியுற்ற வெங்கதிரோன் குலத்தோன்றலின் வதனம் அப்பொழுதே மலர்ந்த தாமரை மலரையும் விஞ்சி மலர்ந்து மகிழ்வு கொண்டு காணப் பட்டதாகப் பேசுவார்-

இப்பொழுது எம்ம னோரால்
இயம் புதற்கெளி தோ? யார்க்கும்
செப்பரும் குணத்து இராமன்
திருமுகச் செவ்வி நோக்கில்,
ஒப்பதே முன்பு; பின்பு அவ்
வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது அலர்ந்த செந்தா
மரையினை வென்றது அம்மா!

வால்மீகி, கைகேயியின் உரைகேட்ட இராமன் வருத்தமோ சோகமோ சிறிதும் கொள்ளாமல் உடனே புறபட்டேன் என்று சொன்னதாகக் குறிப்பிடுகின்றார். ....ராமோ தவிர் நாபி பாஷதே|| சொன்ன வார்த்தையை நான் மீறமாட்டேன் என்று இராமனே இயம்பியதாகவும் பேசுகின்றார்.

ததப்ரியமமித்ரக்னோ வசனம் மரணோபமம்|
ச்ருத்வாந விவ்யதே ராம: கைகேயீம் சேதமப்ரவீத்||
ஏவமஸ்து கமிஷ்யாமி வனம் வஸ்தும ஹம் த்வித:|
ஜடாசீரதரோ ராஜ்ஞ: ப்ரதிஜ்ஞா மநுபாலயநு||.

காளியன் படத்தின் மீது நடனம் பயின்றவன், பஞ்சவர்க்குத்தூதனாயிருந்து உதவியதைப் பேசுகின்றார்.

5.. பஞ்சவர் தூதனுய்ப் பாரதம் கைசெய்து,
நஞ்சுமிழ்நாகம் கிடந்த நற்பொய்கை புக்கு,
அஞ்சப் பணத்தின் மேல் பாய்ந்திட்டு அருள்செய்த,
அஞ்சன வண்ணனைப் பாடிப்பற அசோதை தன்சிங்கத்தைப் பாடிப்பற.

யமுனையாற்றின் மடுவில் காளியனென்னும் நஞ்சரவம் ஆய்ப்பாடி மக்களுக்கு அல்லல் விளைவித்துக் கொண்டிருந்தது. அதனால் ஆய்க்குல மக்கள் அம்மடுக்குச் செல்ல அஞ்சிக் கொண்டு அவதியுற்றிருந்தனர். சிறுபிள்ளையான கண்ணன் அம்மடுவினுள் குதித்து அந்நாகத்தின் வாலைப்பற்றியீர்த்து அது மேலெழுந்து படமெடுத்து வந்தபோது அப்படத்தின் மீது நின்று நடனமாடியது மன்றி அதற்கு அருள் செய்து அதைக் கொல்லாமல் மன்னித்தும் உயிரளித்தான்

பாரதப்போர் நிகழாமல் தவிர்த்தற்பொருட்டு தருமனுரை கொண்டு, செருக்குற்றிருந்த துரியோதனன் பால் தூதனுய்ச் சென்று உதவினுன். ஆனால் அகந்தையாளனான அந்தகன் மைந்தன், தன் சொற்கேளாததால் வேறு வழியின்றி, போர்க் கருவி ஒன்றையும் கரத்தால் தீண்டாமல் பாரதப்போரை நடாத்தி அருள் செய்தான். இவ்வளவு மேன்மை மிகுந்த மைநிறத்திருமேனியனும் அசோதையின் சிங்கமுமான கண்ணனின் புகழ்பாடிக்கை கொட்டுவீர் பூவையர்களே!

இராமன் பரதனுக்குப்பாதுகை ஈந்தருளியதைப் பேசி இனியராகிருர்-

6. முடியொன்றி மூவுலங்களும் ஆண்டு, உன்
அடியேற் கருளென்று அவன் பின் தொடர்ந்த,
படியில் குணத்துப் பரதநம்பிக்கு, அன்று
அடிநிலை ஈந்தானைப் பாடிப்பற அயோத்தியர் கோமானைப் பாடிப்பற.

சித்திரகூடத்தில் இரகு குலதிலகன் தன் இல்லாளுடனும் இளவல் இலக்குவனுடனும் இருந்து வருங்காலையில், அண்ணு! நீங்கள் முடி சூட்டிக் கொண்டு மூவுலகங்களையும் அரசாண்டிருந்து உன் அடியனான எனக்கு அருள் செய்து தவ வேணும்

என்று இறைஞ்சி நின்றான் தனக்கு ஒப்புவமையில்லாத பரதாழ்வான். அவனுக்குத்தான் வனவாஸம் முடித்துத்திரும்பி வரும் வரை பாதுகைகளின் துணைகொண்டு நீ ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தி வருவாயாக என்று (பரதன் விரும்பிக் கேட்ட) தன்னுடைய அடிநிலைகளைத் தந்தருளியவனும், அயோத்தி நகர மக்களுக்கு நாதனுமான ஸ்ரீராமனைப் புகழ்ந்தேத்தி ஆடிடுவீர் ஏந்திழையீர்!

கண்ணன் காளியன் படத்தின் மீது நடம் பயின்றதைச் சலிப்பின்றி மீண்டும் அனுபவித்துப் பேசுகின்றார்-

7. காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு, அவன்
நீள் முடியைந்திலும் நின்று நடம் செய்து,
மீள அவனுக்கு அருள் செய்த வித்தகன்,
தோள் வலி வீரமே பாடிப்பற தூமணி வண்ணனைப் பாடிப்பற.

இப்பாசுரத்தில் காளியனின் ஐந்து தலைகளிலும் நின்று மாறி மாறி நடம் பயின்ற வித்தகன், ஆச்சரிய புருஷன், மிகு ஞானத்தவன், உயிர் காக்க வேண்டி நின்றவனுக்கு அருள் செய்த அண்ணல். தோள்வலி மிகுந்த வீரமுடையவனைப்பாடி கும்மி கொட்டிடுவீர்! பரிசுத்தமான நீலமணி வண்ணத்திரு மேனியனைப்பாடிப்பரவிக்குதித்துக் கும்மியடித்து மகிழ்ந்திடுவீர் மங்கையீர்! என்று பேசி மகிழ்கின்றார் ஆழ்வார்.

பரதனுக்கு அரசு அளித்ததை மீண்டும் குறிப்பிட்டு, வஞ்சமகள் அரக்கியின் செவி, மூக்கரிந்ததைப் பேசுகின்றார்-

8. தார்க்கு இளந் தம்பிக்கு அரசீந்து, தண்டகம்
நூற்றவள் சொல்கொண்டு போகி, நுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச் செவியோடு மூக்கு, அவள்
ஆர்க்க அரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப் பாடிப்பற.

தனக்கு இளையோனான பரதனுக்கு, அவன் மறுத்த போதிலும் அரசுப் பொறுப்பைக் கொடுத்தருளி, நீ வனம் சென்றேயாகவேண்டும் என்று உறுதியாய் உரைத்து நின்ற சிற்றவையின் சொல்லுக்கேற்ப, காடு சென்று பஞ்சவடியில் வாழ்ந்திருந்தபோது, துவளும் இடையினளாய்த் தங்களை நலிய வந்த சூர்ப்பண கையென்னும் அரக்கியை அலறுமாறு அவளு

டைய காதையும் மூக்கையும் அரிந்தவனைப் பாடிப்பரவுங்கோள். அயோத்திக் கரசனைப் பாடிக்குதித்துக் கும்மியடியுங்கோள் குமரிகாள்!

கண்ணபிரானின் ஸாகஸ துணிவு மிகுந்தச் செயல்களைச் செப்புகின்றார்-

9. மாயச்ச கடமுதைத்து மருதிறுத்து,
ஆயர்களோடு போய் ஆநிரை காத்து, அணி
வேயின் குழலூதி வித்த கனாய்நின்ற,
ஆயர் களேற்றினைப் பாடிப்பற ஆநிரை மேய்த்தானைப்பாடிப்பற

கஞ்சனின் ஆணையேற்று வண்டியுருவில் வந்தான் ஒரு கொடியோன். அவனைத்தன் குஞ்சுக்கால்களால் உதைத்துத் தூள் தூளாகுமாறு செய்தான் குழந்தையாயிருந்த கண்ணன். அன்னை, கண்ணன் குறும்பு பொறுக்க இயலாமல் அவனை உரலோடுறப்பிப்பிணைத்திருந்தாள். அஞ்ஞான்று அவ்வுரலையும் இழுத்துக்கொண்டே தவழ்ந்து இணைந்திருந்த இருமருத மரங் களும் இற்று விழுமாறு அம்மரங்களினூடே சென்றான். கண்ண னின் இவ்வரிய செய்கையால் ஒரே நேரத்தில் இரு பயன்கள் விளைந்தன. ஒன்று நளகூபரன் மணிக்ரீவன் என்னும் இருகந் தருவர்கள் சாப விமோசனம் பெற்றுய்ந்தனர். மற்றொன்று ஒளி மணிவண்ணன் தவழ்ந்து வரும் போழ்து அவனை மரங்களி டையே நெறிக்க வேண்டுமென்னும் கொடிய எண்ணத்துடன் மரங்களில் மறைந்திருந்த இரண்டு பொல்லா அரக்கர்களும் மாண்டொழிந்தனர். அரிய பெரிய வித்தகனான விமலன் கண்ணனை ஆயர்களுக்குச் சிங்க ஏறு போன்றவனை, ஆநிரை மேய்த்தருளியவனைப்பாடிப்புகழ்ந்து கும்மியடித்துக் குதித்திடு வீர் நங்கையீர்.

ஐயிரண்டு சிரத்தானைக்கொன்று வீடணனுக்கு அரசளித்த ஸ்ரீ ஸீதாராமனின் மாண்பினைப் பேசுகின்றார்-

10. காரார் கடலையடைத்திட்டு இலங்கைபுக்கு,
ஓராதான் பொன் முடி ஒன்பதோ டொன்றையும்,
நேரா அவன் தம்பிக்கே நீளரசீந்த,
ஆராவமுதனைப் பாடிப்பற அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற.

கருநீல நிறமான கடலில் வானரவீரர்களின் துணை கொண்டு கல்லால் அணைகட்டி, இலங்கை நகர் சென்று, எதிரி யின் தன்மையை ஆராய்ந்தறிந்து செயலாற்றும் திறமையற்ற வனான ஐயிரண்டு சிரத்தானின் பொன்முடிகள் அணிந்திருந்த தலைகள் ஈரைந்தையும் அறுத்து அவனை மாளச்செய்து, அவனு டைய தம்பியான, பண்பாளனான வீடணனுக்கு நீண்ட காலத் திற்கும் நிலைத்திருக்குமாறு இலங்கையரசைக் கொடுத்தருளிய தெவிட்டுதலில்லாத அமுதமேயான ஆராவமுதனைப் பாடிப் போற்றிக் கும்மியடித்து மகிழ்ந்திடுவீர். முடிசூடிய அயோத்தி யர் வேந்தனைப் புகழ்ந்து குதித்தெழுந்து கும்மியடித்திடுவீர் நேரிழையீர்!

அடுத்து வரும் பாடலில் பதிகப்பயன் பகருகின்றார்-

நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று,
உந்தி பறந்த ஒளியிழையார்கள் சொல்,
செந்தமிழ்த் தென் புதுவை விட்டுசித்தன் சொல்,
ஐந்தி னோடைந்தும் வல்லார்க்கு அல்லலில்லையே.

ஒளி மிளிரும் நகைகளை அணிந்துள்ள நங்கையரில் சிலர் நந்தகுமாரனான கண்ணனையும், சிலர் காகுத்தனையும் புகழ்ந்து உந்தி பறத்தல் என்னும் ஆட்டத்தை விளக்கியுரைப்ப தான, எழிலார்ந்த தென்புதுவையில் தோன்றிய ஆழ்வார் விஷ்ணுசித்தர் அருளிச்செய்த செந்தமிழ்ச் சொற்களாலான ஈரைந்து பாசுரங்களையும் பயின்று பாடவல்லவர்க்கு அல்ல லென்பது சிறிதுமில்லையென்பதாம்.

அஞ்சனவண்ணன் — ஆராவமுதன் அடியிணை போற்றி.



''நெஞ்சே'' தலைப்பில் இணைப்பு—தொண்டரடிப் பொடியாழ்வார்- ''நெஞ்சமே!, காவிரி நீர் வெள்ளமிட்டோடுவதும், அகன்று விரிந்த சோலை களால் சூழ்ந்து விளங்குவதுமான ஸ்ரீரங்கமெனும் திருத்தலத்தில், யாவற் றையும் தன்பால் ஈர்க்கின்ற திருவரங்கன் பள்ளிகொண்டு திகழ்வதையும், கமல வதனத்தையும் கண்களாரக் கண்டு சேவித்த பின்னரும் கடின மாகவே-வலியையாகவே—, இருக்கின்றனையோ?, நாம் பெற்று உய் தலைப்பெறக் காரணனான ஒருவன் ''திருவரங்கனே'' என்று தெளிந் துணர வல்லமை பெற்றுள்ளாயில்லை இவ்விதம் சூழ்ச்சியாகவே அவ்வரங் கனிடம் அன்புள்ளவன் போலே அபிநயித்து உன்றன் இயல்பான வஞ்சத் திலேயே காலத்தைக் கழிக்கின்றனையே?'' —திருமாலை-பா-24.

ஸ்ரீ :

பாவநாசனின் பாதம் பணிந்து
பயன் பெற்றுய்ந்திடுவோம்

ஸ்ரீமந்நாராயணு! ஸ்ரீமந்நாராயணு!! ஸ்ரீமந்நாராயணு!!!

## பாவநாசன்

பாவம் என்னும் சொல்லுக்கு, தீங்கு, கொடுமை, தீமை அநீதி, அநியாயம், அக்கிரமம் ஆகிய பல பொருள்களைக் கூறலாம். இச்சொல்,இரக்கத்தையும், பரிதாபத்தையும் வெளிப் படுத்தும் போதும் பயன்படுகின்றது. முன்னதாகக் கூறப்பட்ட பொருள் பொதிந்த 'பாவம்' எவ்விதம் அகலும் என்பதை விளக்குவதே இச்சிறு கட்டுரையின் நோக்கம்.

இத்தகைய பாவம் இரு வகைத்தானது. ஒன்று வேண்டு மென்றே பிறரைக் கெடுக்க வேண்டுமென்று மனதறிந்து இழைக்கப்படுவதாம். இதற்கு எடுத்துக்காட்டாக. அழுக்காறு டனும்,காழ்ப்புணர்ச்சியுடனும், பாண்டவர்கட்குத்தீங்கிழைத்த அரவநீள் கொடியோனையும், செருக்குற்று இறுமாந்து தாங்கள் பெற்றுள்ள வரங்கருதி வணங்கா முடிகளாய்த் திகழ்ந்த பொன் கண்ணனையும், பொன்னுகத்தானையும், நல்லவர் யாவர்க்கும் தீமையே புரிந்து வந்த இராவணனையும் கூறலாம். இவர்கள் அனைவரும், ''அடாது செய்வோர் படாது படுவர், முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், கெடுவான் கேடு நினைப்பான், வினை விதைத்தவன் வினையறுப்பான், தீவினை இழைத்தவன் அதன் பலனைத்துய்த்தே ஆகவேண்டும்'' என்றவாருன மூதுரை கட்கேற்ப அழிந்து பட்டனர். தருமத்தை சூதுகௌவும் இறுதி யில் தருமம் வெல்லும், அறத்தினை மறம் மாய்ப்பது போன்று தோன்றிடினும் முடிவில் அறம் வென்று உயர்ந்து நிற்கும் என்பது உலக நியதி.

''நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி'' என்று குருகை மாமுனிவரால் போற்றி ஏத்திப் புகழப் பட்ட கீதாசார்யனுன கண்ணன் பரமன் தானே உரைசெய்தரு ளிய ''யதா யதாஹி தர்மஸ்யக் லாநிர்பவதி பாரத! அப்யுத் தானமதர்மஸ் யததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்|| பரித்ராணய ஸாதூநாம் விநாசாய சதுஷ்கிருதாம்| தர்ம ஸம்ஸ்த்தாப நார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே||''என்னும் பொன்னுரைகட்

கேற்ப,மேற்சொன்ன சாதுசனத்தை நலியும் தீயோர் நால்வரையும் மாய்த்தொழித்து நல்லோர்களை நலிவினின்றும் காத்தருளற்பொருட்டு முறையே தேவகி சிங்கமாகவும், ஏனமாகவும், மானுடமடங்கலாகவும், ரகு சிங்கமாகவும் இம்மண்ணுலகில் தோன்றினான்.என்னே! அவன் தன் கருணை, என்னே! அவன் தன்திருவருள். அவன் அருட் பெருங்கடலன்ரே? தன்னடியார்கள் நலிவுறுவதை, அரவிந்தப்பாவையைத் தன்னகத்தே வைத்திருக்கும் அவ்வமலன் ஒருநொடிப்பொழுதும் காணப்பொருன்.

பிறிதொன்று, அறியாமையால், நம்மையறியாமல் நிகழ்வது, ஐயோ! இம்மாதிரியான பிழை நேர்ந்து விட்டதே! என்று மனம் நொந்து வருந்தி, நம் உள்ளத்துறையும் உத்தமனை நினைந்து துதித்து, மனம் கசிந்து உருகி மன்னித்தருள வேண்டினோமாயின், இறைவன் இன்னருள் நல்குவான் என்பது திண்ணம்.

எண்ணிறந்த பாவங்களைச் செய்தவர்களும், ஆயிரம் பேருடைய பிரானை வணங்கி ஏத்திப்போற்றித்துதிப்பதனுலோ அல்லது அவ்வெம்பெருமானின் புனிதமளித்திடும் பெயரைப் பிறர் சொல்லக் கேட்பதாலோ பாவம் நீங்கிப் புனிதமெய்தி அவனருளுக்கிலக் காவர் என்பது கத்திரபந்து, அஜாமிளன் ஆகியோரது வரலாறுகளினின்றும் உணரப்படுகின்றது

அஜாமிளன் என்பான் ஒருவன். அவன் மிகவும் கொடியவனுய் வாழ்ந்து வந்தான். அறவழிக்குப் புறம்பாகவே செயல் புரிபவன் இரந்தோர்க்கீயாதவன். தன் வாழ்நாள் இறுதிவரை இதேநிலையில் வாழ்ந்து வந்தவன்.அவன், தன் இருமக்களுக்கு நாரன், அயனன் என்று பெயர் சூட்டியிருந்தான். அவன் தன் இறுதிமூச்சு ஊசலாடிக் கொண்டிருந்த காலை தன் இரு மகன்களையும் ஒருசேர ''நாராயணு'' என்று கூவி அழைத்தான். அவன் தன் பிள்ளைகளை அழைக்கும் முகத்தான் பரஞ்சுடரும் பரஞ்சோதியுமான பரமனின் பெயரைச்சொன்னதன்காரணமாக அக்கொடியவனும் பொன்னுலக வாழ்வெய்திஞன் என்பது வரலாறு.

க்ஷத்திர பந்து என்பவன் பகலவன்குல அரச மரபில் தோன்றியவன். அவன் தந்தையின் பெயர் விச்வவ்ரதன்

என்பதாம். இவன் தன் குல ஒழுக்கத்தை விடுத்து, காட்டில் அலைந்து திரிந்து கொண்டு கொடிய செயல்களையே செய்து வந்தான். ஓர் நாள் கடும் வெயிலில் கத்திரபந்து இருந்த காட்டின் வழியே முனிவர் ஒருவர் வந்தார். அவர் நீர் வேட்கையால் மிகவும் தவித்துக் கொண்டிருந்தார். அருகே காணப்பட்ட ஓர் குளத்தில் தண்ணீர் அருந்திக் களைப்பாறலாம் என்று குளத்தருகே சென்றார் அவ்வேளையில் கால் இடறிக் குளத்தினுள்ளே விழுந்து விட்டார். அதனைக் கண்ணுற்ற கத்திரபந்து விரைந்து சென்று அவரைக்கரையேற்றி அவருக்குத்தாமரைக்கிழங்குகள் கொடுத்து உண்ணச்செய்தான். அவன் வாழ்வில் அவன் ஆற்றிய நற்செயல் இது ஒன்றே. முனிவர், அவனைப்பற்றி அறிந்து, தீமை செய்வதைத் தவிர்க்க'' என்று அவனுக்கு அறிவுரை கூறினர். ஆனல் அவன், இதுகாறும் தீவினைகளையே இயற்றி அதனையே பழக்கமாகக்கொண்டுள்ளேன். அதனின்றும் மீள்வது என்னல் இயலாத ஒன்று என்று பணிவுடன் பகன்ருன். முனிவர் அவனுரை கேட்டு ''கோவிந்த'' நாமத்தையேனும் இடைவிடாது சொல்லி வருவாயானல் நற்கதிபெறுவாய் என்று சொன்னர் கத்திரபந்துவும் அவர் சொல்லுக்கிணங்கி ''கோவிந்தன்'' பெயரைச் சொல்லி வந்தான். அதனல் அவன், தன் தீவினைப் பயனினின்றும் விடுபட்டுப் பேரின்ப வீடடைந்தான் ''பெரியாரைத் துணைகொள்''என்னும் மூதுரைக்கேற்ப, கத்திரபந்து பெறற்கரிய பெரியவரான முனிவரின் சொற்கேட்டு நற்கதி அடைந்தான். இவ்வரலாறு விட்டு தர்மத்தில் 97-ம் அத்தியாயத்தில் வரையப்பெற்றுள்ளது. எம்பெருமானின் புனிதப் பெயரைச் சொல்வதாலேயே கடுவினைகள் யாவும் அகன்று, அந்தமிலாப் பேரின்ப வீடு பெறலாம் என்பதற்கு, கத்திரபந்துவின் வரலாறு சான்ருக அமைந்துள்ளது. இவ்வரலாற்றினை மண்டங்குடி வந்த மாமுனிவரான தொண்டரடிப் பொடிகள் தாம் அருளிய 'திருமாலை'யில் நான்காம் பாசுரத்தில் பேசுவார்-

மொய்த்தவல் வினையுள் நின்று மூன்றெழுத் துடைய பேரால்,
கத்திரபந்து மன்றே பராங்கதி கண்டு கொண்டான்,
இத்தனை யடிய ராளுர்க் கிரங்கும் அரங்கனுய,
பித்தனைப் பெற்று மந்தோ! பிறவியுள் பிணங்கு மாறே!

மேலும் இதே பிரபந்தத்தில் பன்னிரண்டாம் பாசுரத்தில், நரகத்தில் இடர்ப்படுவோரும் நம் திருவுடையடிகள் தம் நாமம் சொல்லக் கேட்பின் சுவர்க்க வாழ்வெய்துவர் என்பதற்கு ''முத்கலன்'' என்பவனின் வரலாற்றின் வாயிலாக, பரமனின் பெயர் சொல்லக் கேட்டாலும் கடுவினை அகன்று விலகும் என்று பேசுவார்-

முத்கலன் என்பானொருவன் நரகம் துய்ப்பதற்கேற்ற தீச்செயல்களையே செய்து வந்தவன். அவனை, கூற்றுவனின் தூதர்கள் இழுத்துச் சென்று நரகத்தில் தள்ள முற்பட்டனராம். அவ்வமயம் காலன் அவர்களை விலக்கி, முத்கலனை வரவேற்று உபசரித்து இன்னுரை வழங்கினான்.அந்தகனின் செய்கையைக் கண்ணுற்ற முத்கலன் வியப்புற்று விக்கித்து நின்றான். அவ் வேளை கூற்றுவன் கூறியதாவது-முத்கலனே! நீர் அளவிறந்த கொடுஞ்செயல்கள் புரிந்திருப்பினும் ஓர் முறை கோதானம் பண்ணும் காலை ''கிருஷ்ணய''-எல்லாம் வல்ல கண்ணனுக்கே என்று நீர் வார்த்து தானம் கொடுத்தீர். ஆகையால் நீர் நரகம் சென்று நலிவுறுதல் வேண்டா உமக்கு சுவர்க்க வாழ்வே நுகரற்பாலது''

முத்கலனுடன் பேசும் போது கூற்றுவன் மொழிந்த ''கிருஷ்ணய'' என்ற புனிதப் பெயரைச் செவியேற்ற நரகிகளும் சுவர்க்க வாழ்வுக்குரியவராயினர். எம்பெருமான் பெயரைக் கேட்கும் வாய்ப்பினைப்பெறும் நரகவாசிகளும் அக் கணத்திலேயே தங்கள் துயர் நீங்கி பேரின்பமடைகின்றனர் முத்கலன் வரலாற்றால் உணர்த்தப்படுகின்றது. முத்கலன் என் பதுவரலாறு விஷ்ணுதருமத்தில் உள்ளதாகஉணரப்படுகின்றது

உரிய பாசுரம்

நமனும்முற் கலனும் பேச நரகில்நின் றார்கள் கேட்க,
நரகமே சுவர்க்க மாகும் நாமங்க ளுடையன் நம்பி;
அவனதூ ரரங்க மென்னாது அயர் த்துவீழ்ந் தளிய மாந்தர்,
கவலையுள் படுகின் றார்என் றதனுக்கே கவல்கின் றேனே!

ஜனகநந்தினியின் மணாளன் சக்கரவர்த்தித்திருமகன் அயோத்தியில் அரசாண்டு கொண்டிருந்த காலை, சம்புகன் என்பான் ஒருவன் தன் குல நெறிக்கு மாறாக தலைகீழாக நின்று தவம் செய்து அதன் வாயிலாக பூத உடலுடன் சுவர்க்க மெய்தும் முயற்சியிலீடுபட்டிருந்தான். அவனது இச்செயல் அறநெறிக்குப்புறம்பானது என்றுஉணர்ந்த உத்தமன்இராமபிரான் அவனை வதம் செய்து அவனுக்கு நற்கதி அளித்துத்திரும்புங் காலையில் வழியில் அகத்தியர் ஆச்சிரமத்தில் தங்கியிருந்து அடுத்த நாள் காலையில் முனிவரிடம் விடைபெற்றுச் செல்லும் வேளையில், என்னைப் பரிசுத்தனாக்கிக் கொள்ளும் பொருட்டு தேவரீரைச் சேவித்து அருள்பெற மீண்டும் வருவேன் என்று விண்ணப்பித்துக் கொண்டார். இராமன் மொழி கேட்ட அகத்தியர், ''இஃதென்ன விந்தையாயிருக்கின்றதே! உமது மொழிகள். உம்மைப்பார்ப்பதாலும், உமது புனிதமளித்திடும் பெயரைச் சொல்வதாலும் மக்கள் மிகத்தூய்மைபெற்றுப்பாவம் நீங்கியவராவர். மேலும் உம்மை தரிசித்தவர்களை தேவர்களும் பூசனை செய்துப் புனிதமெய்துவர். கொடிய கண் கொண்டு உம்மைப்பார்ப்பவர்கள் நரகமெய்துவர் என்பது திண்ணம். அனைத்து உயிரினங்களுக்கும் புனிதம் பெறுவிக்கும் உமது கதையைச் சொல்லியும், பிறர் சொல்லிக்கேட்டும் மக்கள் புண்ணியம் பெற்றவராவர்'' என்றியம்பினார். இந்நிகழ்ச்சி இராமாயணம் உத்தரகாண்டம் 82-ம் சருக்கத்தில் வருணிக்கப் பட்டுள்ளது. உரிய சுலோகங்கள்வருமாறு-இராமன் இயம்பியது

தன்யோஸ்ம்யனுக்ருஹீதோஸ்மி தர்சனேன மஹாத்மன:।
த்ரஷ்டும் சைவாகமிஷ்யாமி பாவநார்த்தமிஹாத்மந:॥-7
ததா வததி காகுத்ஸ்த்தே வாக்யமத்புத தர்சநம்।
உவாச பரமப்ரீதோ தர்மநேத்ரஸ்தபோதந:॥-8

அகத்தியர் மொழிந்தவை:—

அத்யத்புதமிதம் வாக்யம் தவராம சுபாக்ஷரம்।
பாவந: ஸர்வபூதாநாம் த்வமேவ ரகுநந்தந॥-9
முகூர்த்தமபி ராம த்வாம் யேச பச்யந்தி கேசந।
பாவிதா: ஸ்வர்க பூதாச்ச பூஜ்யாஸ்தே ஸர்வ தேவதை॥-10

யே சத்வாம் கோர சக்ஷுர்பி: பச்யந்தி ப்ராணிநோ புவி।
ஹதாஸ்தே யமதண்டேன ஸத்யோ நிரயகாமி ந:॥-11
ஈத்ருசஸ்த்வம் ரகுச்ரேஷ்ட பாவந: ஸர்வதேஹிநாம்।
புவித்வாம் கதயந்தோபி ஸித்திமேஷ்யந்தி ராகவ॥-12.

மேலும் இவ்விபவத்தில் பரசுராமருக்கிருந்த குறைகளை அகற்றியருள் செய்ததாலும், எருவை வேந்தனான சடாயுவுக்கும், சபரியம்மைக்கும் பேரின்ப வீட்டினை அருளியதாலும், வாலியைக்கொன்று, அவன் தன் தீவினைகளைப்போக்கியருளியதாலும், கடலரசனுக்குற்ற தீங்கினைத்தீர்த்தருளியதாலும், பார்த்த நொடியிலேயே பாவங்களையகற்றும் அணையைக்கட்டியருளியதாலும் பரமன் பாவநாசன் என்பது ஐயம் திரிபுஅற உணரப்படுகின்றது.

திருவாய்மொழிப்பெருமாள் என்று போற்றப்படும் குருகூர்மாமுனிவரான நம்மாழ்வார் ''பாவநாசனைப் பங்கயத்தடங் கண்ணனைப்பரவுமினோ'' என்று உபதேசித்தருள் செய்வார். மழிசைவந்த சோதியான திருமழிசைப்பிரானும் ''பண்கடந்த தேசமேவு பாவநாச நாதனே!'' என்று பூமகளார் தனிக்கேள்வனை விளித்துப்பேசுவார். உரிய பாசுரங்களையும், பொருளையும் சுவைத்தின்புறுவோம்-

மூவ ராகிய மூர்த்தி யைமுதல் மூவர்க் குமுதல் வன்றன்னை,
சாவ முள்ளன நீக்கு வானைத் தடங்க டல்கிடந் தான்றன்னை,
தேவ தேவனைத் தென்னிலங்கை எரியெ ழச்செற்ற வில்லியை,
**பாவ நாசனைப்** பங்க யத்தடங் கண்ண னைப்பர வுமினோ.
—திருவாய்மொழி 3.6.2.

பிரமன், விட்டு, சிவன் ஆகிய உருபடைத்துள்ளவனும், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றுக்குக் காரணமான முன்னவர்-நான்முகன், உருத்திரன், இந்திரன்- மூவர்தம் முள்ளும் ஆதியாயும் முதல்வனாயும், காரணனாயுமிருப்பவனும், அவர்கட்கு நேர்ந்த தீங்குகளை அகற்றி அருள்செய்கின்றவனும், பரந்து அகன்று விரிந்து கிடக்கும் பாற்கடலில் அவதாரத்திற்கெனப்பள்ளி கொண்டிருப்பவனும், இம்மண்ணுலகில் அவதரித்தருள் செய்கின்ற காலையிலும் தேவர்களாலும் பூசனை பெறுகின்றவனும், எழில்மிகு இலங்கை நகரினை தீயெழுந்து

அழிந்துபடும்வண்ணம் வாளியெய்திய வில்லாளியும்,பாவங்களை கடுவினைகளை-நீக்கியருள்பவனும் தாமரை மலருக்கிணையான-பரந்தகன்று விளங்கும் அழகார்ந்த திருக்கண்களைப்பெற்றுள்ள வனுமான பரமனை-பூவளருந்திருமாது வாழ் புண்ணியனை-துதித்துப்புகழ்ந்தேத்திடுவீர்-

விண்கடந்த சோதியாய்! விளங்குஞான மூர்த்தியாய்!
பண்கடந்த தேசமேவு **பாவநாச நாதனே!,**
எண்கடந்த யோகினோ டிரந்துசென்று மாணியாய்.,—
மண்கடந்த வண்ணம் நின்னை யார்மதிக்க வல்லரே?

—திருச்சந்த விருத்தம்-27

மாறுதல் ஏதுமின்றிக்கே இயற்கையாகவே உள்ள வானத்திற்கும் மேலே பரவியிருக்கிற இயல்பாகவே பெருஞ்சோதியுருவாய்த்திகழ்ந்து கொண்டும், தானே பெருஞ்சுடருமாயிருந்து, அறமும் அறிவும் இயல்பாகவே கொண்டுள்ள உயிரிகளை உடலாக உடையனாயும், வேதங்களும் கண்டு கொள்ளமாட்டாத, தன் பொன்னுலகெனும் நித்ய விபூதியில் -திருவைகுந்தத்தில்-மிகுந்த விருப்பு கொண்டுள்ளவனும், தன்னடியவர்களான பக்தர்களின் பாவங்களைப் போக்கியருள் செய்யும்தன்னிகரிலாத் தலைவனே!-மேற்சொன்னபடி சர்வேச்வரனாகச் சேவை தந்தருளும் உன்னை, எண்ண மாளாதயோகத்துடன் பிரம்மசாரியாகி மாவலியிடம் சென்று நான்கொள்வன் என்று யாசித்துப்பெற்று உலகங்களை அளந்து கொண்ட இவ்விழி நிலையிலே யார்தாம்-உனக்கு உள்ள சிறந்துயர்ந்த மாண்பினையும் பெருமையையும் குறைத்து மதிப்பிடும் தன்மை பெற்றவர்? ஒருவரும் இலர் (நீ உன் மேன்மையை மறைத்துக்கொண்டு தோன்றிடினும், உன் சிறப்புயர்வு உனக்கு முன்னதாகவே கட்டியம் கூறிக்கொண்டு வெளிப்படும்)

பாவநாசனின் பாதமலர்களைப்பரவி ஏத்திப்போற்றி, நாமும் நம் வாழ்வில் நலம் பெற்றுய்ந்திடுவோமாக.

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

அமுதமீந்த ஆழியானின்
அடிபணிந்துய்வோம்

ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீமந்நாராயண!! ஸ்ரீமந்நாராயண!!!

## மதுரக்கொழுஞ்சாறு

திருமகள் மண்மகள் நீளை முதலா எல்லாத்தேவியருடனும் தன்னனைய சூரிகள் தன்னடிக்கீழ் வாழுமாறு பரமபதத்தில் வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் விமலன் பரவாசுதேன் பரமன், பாரையும், பாரினுள்ளோரையும் காத்தருளற்பொருட்டு பத்தாய்த் தோன்றித்திகழ்பவன். அவன் வானுளோர்க்கு இடுக்கண் நேர்ந்தபோதெல்லாம் அவர்கட்கு உதவி, அவர்கள் இன்னல்கள் நீக்கி அவர்களை இன்புறச்செய்யும் இனியன். தேவர்களான இமையவர்கள், தாங்கள் எக்காலத்துக்கும் அமரத்துவம் பெற்று வாழ்தற் பொருட்டு, எம்பெருமானின் பேரெழில்மிகு பரஞ்சோதித் திருமேனியை எந்நாளும் சேவித்து இன்புறுவதில் விழைவு கொள் கொள்ளாதவர்களாய் உப்புக்கடலைக் கடைந்து பெறும் சாறு பருகுவதிலேயே நோக்கம் கொண்டவர்களாயிருந்தனர். இதனை நம்பி திருவழுதிநாடு தாஸர் என்னும் பெரியார், ''இந்த தேவஜாதி மிகவும் மூடமான மிருகமாகும். எம்பெருமானின் பேரழகையும், பொலிவையும் போக்யதையையும் கண்ணுக்கினியனையும், கருத்துக்குகந்தவனாகவும் இருப்பதையும்-விடுத்து, உப்புச்சாறு கிளறுவது எப்போதென்றன்றோ கவிழ்ந்து எதிர்பார்த்த வண்ணமிருந்தது'' என்பராம். அமுதத்தை உப்புச்சாறு என்று குறிப்பிடுகின்றார்.

''அமுதம் அமரர்கட்கீந்த நிமிர்சுடராழி நெடுமால்
அமுதிலும் ஆற்ற இனியன் நிமிர்திரை நீள்கடலானே''

என்பர். நம் வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன். அமரர்கட்கு அமுதமளித்த அண்ணல் அவ்வமுதினும் மிக மிக இனியன் என்றியம்புகின்றார். இம்மாபெரும் இனியனைக் கண்டு. அவனது பொற்புடைத்திருமேனியின் புகரைக் கண்டு களிப்புறாமல் உப்புச்சாறெனப்படும் அமுதம் உண்ணுவதிலேயே ஊக்கம் கொண்டிருந்தனர். விண்ணவர். அவர்கள் விழைவுக் கேற்பவே பெருமான் ஆமையாய் வந்து மந்தர மலையைத் தன் முதுகிலே தாங்கியிருந்து அமுதம் பெற்று வழங்கினன்.

ஆழ்வார்கள் பாசுரங்களில் பரமன் அமுதம் பெற்று அமரர்க்கு வழங்கியது மொழியப்படுகின்றது. குருகூர் முனி வரைப் போன்றே முதலாழ்வார்களும் ஏனைய ஆழ்வார்களும் ''அமுதம்'' என்றே பேசுவர். சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யென்று சிறப்புப்பெயர் பூண்டு என்றென்றும் தமிழ் நெஞ்சங் களில் நிலைத்திருக்கும் தமிழ்ச்செல்வி பட்டர் பிரான் கோதை, தமிழில் தமக்குள்ள பேரறிவு புலப்படும் வண்ணம் அழகுத் தமிழில் தூய சொல்லில் அமுதத்தை ''மதுரக்கொழுஞ்சாறு'' என்று தன்னொருத்திக்கே உரிய நடையில் குறிப்பிடுகின்றார் தாம் அருளிய நாச்சியார் திருமொழி, திருமாலிருஞ்சோலை அழகனைப் பாடிப்பரவும் பதிகத்தில்.

திருமாலிருஞ்சோலையென்னும் திவ்வியத்தலம், பாண்டி நாட்டுத்திருப்பதிகள் மூவாறனுள் ஒன்றாம் இத்திருப்பதி மதுரையம்பதிக் கண்மையில் உள்ளது. இத்திருத்தலம் 'அழகர் கோவில்' என்றும் வழங்கப்படுகின்றது. இத்திருக்கோயிலில் இன்னருள் நல்கும் இறைவன் நரணன் கீழ்த்திசை நோக்கி நின்ற திருக்கோலத்தில், ''அழகர், மால் அலங்காரர்'' ஆகிய திருப்பெயர்களுடன் தன்னடியார்கட்குச் சேவைதந்தருள்கின் ருன். தாயார்திருநாமம் சுந்தரவல்லித்தாயார். விமானம் சோமச்சந்தவிமானம் தீர்த்தம் சிலம்புஆறு. மலைவ்ருஷபகிரி தலத்துறைமரம் சந்தனவிருக்ஷம் பாண்டிய மன்னன் மலையத் வசனுக்கும், தருமதேவதைக்கும் பெருமான் பிரத்தியட்ச மாக நேரிடையாக சேவை தந்தருளியதாக தல வரலாறு புகல்கின்றது.

இத்தலத்துறை இனியன் இறைவனை, சீரணிந்த பாண்டியன்றன் நெஞ்சுதனில் துயக்கறமால் பரத்துவத்து வத்தைத் திறமாச்செப்பிய, செந்தமிழ் தென்புதுவை விட்டு சித்தரென்னும் பட்டர்பிரான் பெரியாழ்வார் மூன்று பத்து ஒரு நான்கு பாடலிலும், பூமாலை சூடிக்கொடுத்து பாமாலை பாடிய பாவை ஆண்டாள், பதினேரு பாசுரங்களிலும், வாள்வலியால் மந்திரங்கொண்டு ஆரணசாரமாய் அறிவுதரும் பெரிய திருமொழி முதலான பிரபந்தங்கள் அருளிய ஆலிநாடர் கலியன் முப்பத்தொருமூன்று பனுவல்களிலும், கடன்மல்லைப் பூதத்தார் மூன்று பாக்களிலும், மாமயிலையிற்ரேன்றிய பேயாழ் வர் ஒருபாவிலும், அருமறைகள் அந்தாதி செய்த அணி

குருகைநகர் முனிவர் நாற்பத்தாறு பாசுரங்களிலும் பரவிப் போற்றி வாழ்த்துகின்றனர். ஆக அழகரைப் போற்றும் பாசுரங்கள் நூற்றிருபத்தெட்டாம்.

பெரியாழ்வார், திருமாலிருஞ்சோலை மலையின் சிறப்பாக வீணே நன் மக்களை நலியும் நிசாசரர்களின் குலமே அழிந்து படுமாறு செய்து குலவிளக்காய் நின்ற கோன்மலை, தங்கையை மூக்கரிந்து தமையினின் தலைகளைத்துணித்தஸ்ரீராமன் பொருந் தும்மலை, செல்வன் பொன்மலை, கோவர்த்தனம் ஏந்தி நின்ற கண்ணன் அருளும் மலை, ஆனைக்கருளி, ஆனையை வீழ்த்திய கடல் வண்ணன் வாழும் மலை, மல்லரை மாட்டிய மாதவன் மன்னியுறையும்மலை, தேர்நடாத்தி பாரதம் முடித்த முகில் வண்ணன் மலைஎன்றவாறுக அழகர்பெருமானைக்கண்ணனாகவும் இராமனாகவும் போற்றிப்பாடி இனியராகிறார். மற்றும் பிறவி யென்னும் நோய்க்குமருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனே திருமரலிருஞ்சோலை எந்தையே! என்று விளித்து மொழிவார்.

நம்மாழ்வார், இளமைப்பருவம் நீங்கும் முன்னரே மாலிருஞ்சோலை சென்று அழகனைக் கண்ணாரக்கண்டு களித்தின் புறுவீராக என்று இயம்புவர் மேலும் பயனிலாதறற்றைச் செய்து பயனின்றிப் பொழுது போக்காமல் மாலிருஞ்சோலை மாயனைச்சென்று வணங்கி வழிபட்டு பயன் பெற்றுய்ந்திடுவீர் என்று உலகோர்க்கு உணர்த்துகின்றார், அழகர் பெருமானை விளித்து, ''பெருமானே! உன்றன் முகத்தின் பொலிவார்ந்த பெருஞ்சோதி ஒளியே உனது முடியில் திகழ்கின்றதோ?உன்றன் எழிலார்ந்த திருத்தாளிணைகளின் பேரொளி தாமரை மலராய் மலர்ந்துள்ளதோ? மற்றும் உன்றன் பொன்னார் திருமேனிப் புகரொளியே நீ அணிந்துள்ள பற்பல அணிகலன்களாக மிளிர் கின்றனவோ? விளம்புவாய் விமலனே!''என்று வினவுகின்றார் உரைக்கப்புகின் பெருமானே!அழகனே!தாமரை மலர் உன்றன் தாளிணைகட்கும் கைகளுக்கும் இணையாகாது என்றியம்புவார். ஞானச்சுடரொளியாய்த்திகழும் சுடர்முடியோனே! எங்கெங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் நிமலனே! நான், நின்றன் தாளிணைகளை அடைந்து வாழும் வகையை எனக்கு வந்தருள் செய்வாய் என்று வேண்டுகின்றார்.

திருமங்கையாழ்வார், திருமாலிருஞ்சோலை திருத்தலத்தில்,இயற்கையின் பேராற்றல்களுக்குக் காரணனாய்த் திகழ்பவனும், விண்ணோர்கள் பரவிப்போற்றி வாழ்த்தும் நிலையில் அரவணையில் துயில்கொள்ளும் சுடர்முடிக் கடவுளாய் விளங்குபவனும், மாவலி வேள்வியில் குறளுருவில் சென்று மூவடிமண் வேண்டிப்பெற்று அனைத்துலகங்களையும் அளந்து கொண்டவனும், தன்னை நலியவந்த, நஞ்சூட்டிய பேயின் கொங்கை சுவைத்த கண்ணனும், தாடகை என்னும் அரக்கி மாண்டொழியுமாறு கணையேவியும், பிறரை வணங்காது செருக்குற்றிருந்த இராவணனின் பத்து சிரங்களும் தரைதனில் உருளுமாறு போர் நடாத்தி வெற்றி வாகை சூடிய வில்வீரனான ஸ்ரீ ராமனும், நஞ்சுமிழும் நாகத்தின் மீது துயில்பவனும், விளங்கனி வீழ்த்து வான் வேண்டி கன்று வீசியவனும், குரவைக் கூத்தும் குடக் கூத்தும் ஆடியவனும், தேனுகன் என்னும் அசுரன் அழியுமாறு பனங்கனியை உதிரப்பண்ணியவனும் கடல் வண்ண மேனியனும், பரியாய் வந்த கேசியின் வாய் கீண்டியவனும், சமணர், புத்தர் சமயத்தைச் சார்ந்தவர்கள் தங்கள் சமய வாதங்களை நடாத்திய வண்ணம் அங்கே செல்லுகின்றார்களானாலும், அதற்கும் முன்னதாகவே எங்கள் மரபுவழி ஆசான்கள் போற்றியுகக்கும் வண்ணம் இமையவர் தலைவராயிருப்பவனும், ஆகிய பரமன் அருள் நல்கிக்காத்த வண்ணமிருக்கின்றனன். நெஞ்சே! நீயும், என்னுடன் புறப்படு, நாம் இருவரும் அவண் சென்று திருமாலிருஞ்சோலைப் பெருமானைப் போற்றிப் பணிந்தேத்தி வழிபடுவோம் என்று தன் நெஞ்சை அழைக்கின்றார்.

இப்பதிகத்தில் முன்னீரடிகளில் பனிமலராள் வந்திருக்கும் மார்பனின் மாண்பினையும் பின்னீரடிகளில் தலத்தின் சிறப்பினையும் பேசுவார். அடுத்துவரும் பதிகத்தில் ஒரு அன்னை தன் அன்பு மகள், மலர்மங்கை-மண்மடந்தை மணாளன்பால் மையல் கொண்டு, அவன் மன்னியுறையும் மாலிருஞ்சோலை சென்று அவனுடன் சேர்ந்து வாழும் வாய்ப்பினைப் பெற்றுய்வளோ என்று மொழிவதாக, திருமாமகள் கேள்வனிடம் தனக்குள்ள அடங்காக் காதலை மொழிகின்றார். தன்னைத் தலைவியாக எண்பித்து, கொடியேரிடை, கயல் கண்ணி, ஆயிழை, நன்னுதல், கெண்டையொண்கண்ணி,வாணுதலாள்,மொய்குழலாள்,

அணியாயிழை ஆகிய சொற்களால் நற்குடி நங்கை நல்லாள் நாயகியின் எழில்மிகு தோற்றத்தை எடுத்தியம்புகின்றார். இப்பதிகத்தில் ஓர்பனுவல்- என் செல்லமகளின் நாயகன் திரு வாழியையும், வலம்புரிச் சங்கையும் முறையே வலமிடமாகப் பெற்றுதிகழ்பவன். அவன் திருத்தோள்கள் குன்றினைப்போன்று உயர்ந்து மிடுக்குடன் காணப்படுபவை. அவன், தன் திருமார்பில் முப்புரிநூல் அணிந்து விளங்குபவன் அவன் திருவேங்கடத் திருமாமலையிலும் நின்றிந்து அருள் செய்யும் மெய்ஞான வேதியன். அவன் சிலம்பாறு பாயும் திருமாலிருஞ்சோலையம் பதியில் நின்றருள் நல்கிடும், நலம் யாவும் ஒருசேரத் திகழ்ந்திடும் நாரணன். அவ்வெம்பெருமானை எழிலார்ந்த நெற்றியுடன் திகழும் நேரிழையான என் செல்லமகள் நணுகி அடைவளோ? இப்பதிகத்திலும் முன்னிரடிகளால் பெருமானின் பெருமையினையும் பின்னீரடிகளால் தல மகிமையையும் மொழிகின்ருர்.- உரிய பாசுரம்—

வலம்புரி யாழியனை வரையார்திரள் தோளன் தன்னை,
புலம்புரி நூலவனைப் பொழில்வேங்கட வேதியனை,
சிலம்பிய லாறுடைய திருமாலிருஞ் சோலைநின்ற,
நலந்திகழ் நாரணனை நணுகுங்கொல்-என் நன்னுதலே?

கடன் மல்லைப்பூதத்தார், "மலர்மகளை மணந்து, அம் மாமங்கையை தினைத்தனையும் விடாது தன்மார்பிலேயே மன்னியிருக்கச் செய்த செங்கண்மால் திருவரங்கத்திற் போலவும், திருக்கோட்டியில் அருள்வது போலவும் திருமாலிருஞ்சோலை மலையையும் தனதிடமாக்கொண்டு தன்தமர்கட்கு அருள் நல்கிய வண்ணம் நின்றிருக்கின்றான்" என்றியம்புவார்.

பேயாழ்வார், "பண்டு முதலாக, திருமங்கை மணாளன் பாற்கடலையும், திருவைகுந்தத்திருநாட்டையும், திருவேங்கடத்தையும் தானுஉகந்துறையும் கோயிலாக் கொண்டிருப்பது போன்று திருக்கடிகையிலும், திருவிண்ணகரிலும், திருமாலிருஞ்சோலையிலும் எழில் வாய்ந்திடும் திருமேனி பெற்று அழகனாகவும் இளங்குமரனாகவும் எந்நாளும் இடைவிடாது சேவை தந்தருள்பவனாயுள்ளான்" என்று பேசுவார்.

பூங்கோதை நாச்சியார், ''திருமாலிருஞ்சோலையில் நின்றருள்பவனும் திருவரங்கனே. அவன் என்னுடன் செய்து கொண்டகச்சங்கத்திற்கேற்ப விரைந்து என் கைத்தலம் பற்றி என்னைக்களிப்பிக்கின்றானில்லையே,'' என்று மனம் நொந்து, மாலிருஞ்சோலைப் பெருமானைப் போற்றியும், தான், அவன் வாராமையால் படும் நலிவையும் நாச்சியார் திருமொழி 9-ம் பதிகம் முழுவதிலும் மொழிகின்றனள். முதலில் தோளழகனை பேரெழில் படைத்துத்திகழும் பேராயிரத்தான் மதுரக்கொழுஞ் சாறு பெற்றதை முதற்பாடலில் பகர்கின்றனள்-

சிந்துரச் செம்பொடிப்போல் திரு மாலிருஞ் சோலையெங்கும்
இந்திர கோபங்களே எழுந்தும்பரந் திட்டனவால்,
மந்தரம் நாட்டியன்று மது ரக்கொழுஞ் சாறுகொண்ட,
சுந்தரத் தோளுடையான் சுழ லையில்நின் றுய்துங்கொலோ?

என்றன் நாயகனான அழகன் இருக்கும் திருமாலிருஞ் சோலையில் எங்கெங்கும் செந்நிறம் மிகுந்த சிந்துரப்பொடி தூவியுள்ளது போன்று சிவப்பான நிறம்பெற்று விளங்கும் பட்டுப்பூச்சிகள் மேலும் கீழும் பரவிக் கிடக்கின்றன. என் துணைவனை தூமணிவண்ணன், விண்ணவர் அமரத்துவம்-பெறும் பொருட்டு, அமுதம் பெற்றுத்தரவேண்டி நின்ற காலையில், மந்தரமலையைத்தன் முதுகில் தாங்கி,கடலைக்கடைந்து தேவர்கட்கு அமுதமெனும்மதுரக்கொழுஞ்சாறு பெற்று வழங்கியருள்செய்தான். அவன் என்னையணுகி வந்து எனக்கு இன்பம் விளைவிக்காமல் வஞ்சகமாகவே நடந்து கொள்கிருன். அவனது இவ்வஞ்சகத்தினின்று உய்தலைப் பெறுவமோ? (திருமாலிருஞ் சோலையில் இந்திரகோபங்கள் எங்கெங்கும்பரந்து கிடப்பதை பெரியாழ்வாரும் மொழிவார்)

தோழியிடம் வினவுகின்றனள்-என் மணாளன் நின்றருளும் திருமாலிருஞ்சோலையில் யானைகள் ஒன்றோடொன்று போரிட்டுத்திரிந்த வண்ணமிருக்கின்றன. அவன் எனக்கு அருளாமலிருப்பதால் நான் படும் பாட்டினைக் கண்டு கொடியில் பூத்திருக்கும் முல்லை மலர்கள் ஏளனமாக புன்னகைக்கின்றன. கார்க்கொள், பிடாக்கள் என்னும் மரங்களும் என்னைக்கண்டு அட்டகாசமாக வெடிச்சிரிப்பு சிரிக்கின்றன. இப்படி மரங்களும்,

மலர்களும் என்னைப் பார்த்து நகைக்கும் வண்ணம் என் தலைவன் எனக்கு விளைவித்த கேட்டினையாரிடம் உரைக்க வல்லேன்? தோழி!

காக்கணம் பூக்களையும் காயாமலர்களையும் விளித்து விளம்பகின்றனள்-காக்கண மலர்களே!காயாம்பூக்களே! நீங்கள் என் நாயகன் திருமாலின் வண்ணங்கொண்டு காண்கின்றீர் கள். நான் என் நாதனை அடைந்து உய்யும் வகையினை உரைத் தீர்களாகில் நலமே. திண்மையான உயர்ந்து பொற்புடைய தோள்களைப் பெற்றுத்திகழும் திருமாலிருஞ்சோலைப் பெருமா ஞன என் தலைவன் நற்குணங்களே நிரம்பப் பெற்றிருக்கும் நம்பியாவான் அந்நம்பி தன் பிராட்டியான திருமாமகளுடன் விளையாடி இன்புறுபவன். அவன் என் இல்லம் புகுந்து வந்து என்னுடைய வனப்புமிகு வளைகளைப்பறித்துக் கொண்டு வழக்கு செய்பவனுயுளன்.

மயில், குயில், கனி, கருவிளைப்பூ, மணம் மிகுந்த பூவைப்பூ ஆகியன அனைத்தும் தன் நாயகன் மலர்மேல்மங்கை மார்பனின் வண்ணங்கொண்டு முன்னே வந்து தோன்றி நாச்சியாருக்கு நலிவூட்டுவனவாயுள்ளன. அவற்றைக்கண்டு நீங்கள் ஏன்என்னை இவ்விதமாகத்துன்புறுத்துகின்றீர்கள்என்று வினவுகின்றனள்- பசுமை மிகுந்த சோலைதனில் வாழ்ந்து கொண்டிருக்கும் குயில்களே! மயில்களே! காக்கணம் பூக்களே! புதியகளாப்பழங்களே! நறுமணம் மிகுந்தகாயாம்பூக்களே நீவீர் அனைவரும் என் காதலன் திருமாலிருஞ்சோலை நம்பியின் எழி லார்ந்தமேனி வண்ணங்கொண்டு என் மனவேதனையை மேலும் அதிகரித்து என்னை இன்னலுக்குள்ளாக்குகின்றீர்கள். உங்களை நான் ஐம்பெரும் பாதகர்களாகவே பாவிகளாகவே கருதுகின்றேன்.எம்பெருமான் திருமேனிவண்ணம் உங்களுக்கு என்ன கேடு விளைவித்தது? என்னை நீங்கள் மேலும் அலலல் படுத்தாமல் அகன்று சென்றிடுவீராக.

திருமாலின் நிறம் பெற்றுத்தோன்றும் வண்டுகளிடமும், சுனையினிற்றேன்றும் பங்கய மலர்களிடமும், தான் தன் நாதனை அடைந்துய்ய வழி கூறுமாறு வேண்டுகின்றனள்-

உயர்ந்தும் மலர்கள் மலர்ந்து நிறைந்துள்ளதாகவும் உள்ள சோலைகளால் சூழப்பெற்ற திருமாலிருஞ்சோலையம்பதியில், செங்கண் திருமுகத்தையும், கரியமுகிலைப்போன்ற பொலி வார்ந்த மேனியையும் கொண்டு விளங்கும் என் துணேவனைப் போன்ற மேனியுடன் மலர்களில் அமர்ந்திருக்கும் வண்டுகளே! பூக்கள் நிறைந்து தோன்றும் நீர்ச்சனைகளே! சுனையில் மலர்ந்து காணும் செவ்வண்ண தாமரைப் பூக்களே! நீங்கள், நான் என் நாயகன் மாலிருஞ்சோலை மாயனை அடைந்துய்ந் திடும் வழியை உரைத்திடுவீராக.

நான் திருமாலிருஞ்சோலை நம்பியெம்பெருமானுக்கு நூறு தடாக்கள் வெண்ணெயும், நூறு தடாக்கள் அக்கார வடிசிலும் சமர்ப்பிப்பதாக,- காணிக்கையாக்குவதாக- வாக்குறுதி செய்துகொண்டேன். திருமாமகளேத்தன் மார்பினில் கொண்டுள்ள திருவின் நாயகன் இன்றுஎன்னை நண்ணிவந்து வெண்ணெயையும், அக்காரவடிசிலையும்,-வெல்லமும் செந் நெலரிசிச் சோறும் நறுநெய்யும் கலந்த அமுது-உகந்து ஏற்றுக் கொண்டு என்னை மகிழ்விப்பனோ?

நாறு பூஞ்சோலையுடன் தென்றல் மணம் கமழுமிடமான திருமாலிருஞ்சோலையில் நின்றிருந்தேஅருள்பவனும் என்னை யாள்பவனுமான பரமன், இன்று என் இல்லில் வந்திருந்து நான் சமர்ப்பித்த நூறுபானை வெண்ணெயையும் நூறுபானை அக்காரவடிசிலையும் விரும்பியுகந்து அமுது செய்து என் உள்ளம் உகக்கும்படி செய்வாராகில், நான் மேன் மேலும் லட்சம் லட்சமாக தடாக்களில் வெண்ணெயும் அக்காரஅடி சிலும் கொடுப்பதோடன்றி அவருகக்கும் வண்ணம் பணிவிடை செய்பவளாவேன்.-இப்பாடலுடன், கோவிந்தா! எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்மற்றை நங்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்'' என்னும் திருப்பாவை சாற்றுப்பாசுரம் ஒப்பு நோக்கற்குரியது-.

குருவிக்கூட்டங்கள் காலேயில் எழுப்பும் ஒலி, நாச்சி யாருக்கு தன் காதலன் பெயரைக் கேட்பதான அனுபவம்

உண்டாக்குகின்றது- விடியற்காலை கருநிறங்கொண்ட குருவிக் கூட்டங்கள் மாலிருஞ்சோலைப்பிரானின் வருகையைப் பேசு கின்றன இது மெய்தானோ? உண்மையிலேயே என் நாயகன் நம்பி நான் விரும்பிய வண்ணம் வருகின்றானோ' குருவிகள் திருமாலிருஞ்சோலைப் பெருமான், துவராபதியில் ஆளுகை நடத்திய பெருமான்,ஆலினிலைமேல் பள்ளிகொண்ட பெருமான் என்றவாறாக அவன் திருப்பெயர்களை மொழிபவைகளாக உள்ளனவே.

மலர்ந்த மலர்களைக் கொண்டுள்ள கோங்கு மரங்கள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்துள்ள திருமாலிருஞ்சோலையில் கொன்றைப்பூக்களுடன் சேர்ந்து தொங்கும் பூச்சரங்களைப்போல் நான் சோர்ந்து கிடக்கின்றேன். மலர்ந்த மலரினைப் போன்ற பொலிவார்ந்த திருமுகத்தில் வைத்து ஊதி ஒலியெழுப்பும் வலம்புரிச்சங்கின் ஒலியும், வில்லினின்று எழும் நாணொலியும் என் செவிகளுக்குக் கேட்கும் வாய்ப்பினைப்பெறும் நாளும் என்று நேருமோ?

பதிகப்பயன்-சந்தன மரங்களையும், கருநிறமான அகில் கட்டைகளையும் தள்ளிக்கொண்டு மேடான பகுதிகளையும் சரியச் செய்தவண்ணம் இழிந்து பெருகிச் செல்லும் நூபுரகங்கை யெனும் சிலம்பாறு உடையதான திருமாலிருஞ்சோலையில் அருள்நல்கும், அழகரைப்போற்றி, வண்டுகள் மொய்க்கும் எழில்மிகு குழற்கற்றைகளைக்கொண்டுள்ள கோதை நாச்சியார் தொகுத்து இயற்றியருளிய செந்தமிழாலான பத்துப்பாடல் களையும் மனப்பாடமாக ஓத வல்லவர்கள் திருமாலவன் திருவடி நிழலில் வாழ்வுபெறும் பேறு பெற்றவராவர்.

பூங்கோதை நாச்சியார் பூங்கழலிணை போற்றி! போற்றி!! போற்றி!!!

அழகர் அடியிணை போற்றி! போற்றி!! போற்றி!!!

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

மாமகள் மார்பன் மாலவன் முன்னே
மெய்கிடத்தி வணங்கி மேன்மைபெறுவோம்

ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீமந்நாராயண!!!

# மெய்ம்மைப் பெருவார்த்தை

எல்லாம் வல்ல இறைவனை உண்மையின் வடிவமாகவும் அன்புருவாகவும் காண்கிறோம். உண்மையுருவான அப்பரம் பொருள் நல்லோரைக்காத்தருளற் பொருட்டு. தான் பிறப்பிலி யாயிருந்தும் திவ்வியமான பிறப்புகள் எடுத்து மக்களுக்கு நல்லுரைகள் வழங்கியும் நடந்து காண்பித்தும் நல்லருள் நல்கும் தன்மையினன். இத்துணை அருட்கடலான எம்பெருமான் மண்மகளின் இன்னல் நீக்கும் முகத்தான் கேழலாய்த்தோன்றி நிலமகளை மீட்டு அருள் செய்தான். அந்நிலமாமங்கையின் நாயகனுமன். அது காலை பார்மகளிடம் தமக்குள்ள பேரன்பைத் தெரிவித்த பரமன் பகர்ந்தருளிய உரையாவது-''எனக்குப்பணி செய்து வருவாய். எவனொருவன் என்னைச்சரணடைந்து என்னையே நினைந்தவனாய் எனக்குப்பணி செய்பவனோ, அவன் எனது இன்னருளுக்கு இலக்காகி இன்புறுவன். இதில் ஏதும் ஐயம் இல்லை. அவன் வாழ்நாள் இறுதியில் உலக மாயையால் ஒருக்கால் என்னை மறந்தாலும் என்னடியனான அவனை யான் கைவிடாமல் அச்சுதன்என்னும் என்னுடையபெயருக்கேற்பவே என்அடியிணை வாழ்வை அவனுக்கு அளித்து அருள்செய்வேன்'' -இவை வராகப்பிரான் அருளிய மெய்ம்மொழிகள்—.

மண் மடந்தையும் பெருமானுரை கேட்டு மிக-மிக மகிழ் வடைந்து தன் கொழுநனுரைக்கேற்ப, அவனுக்குப் பணி செய்வதிலேயே ஈடுபட்டிருந்தனள்-இவ்வுரையாடல் வராஹ புராணத்தில் காணப்படுவதாம்-.

இவ்வண்ணம் ஏனமாய்த்தோன்றி, பார்மடந்தைக்குப் பரிவுடன் தன் அருட்டன்மையை அறிவித்த அமலனை, மங்கை யர்கோன் கலிகன்றி ''தலசயனத்துறை எம்பெருமானைப்பரவும் பதிகத்தில் ''ஞானத்தினொளியுரு'' என்று போற்றுவார் -

ஏனத்தின் உருவாகி நிலமங்கை யெழில் கொண்டான்,
வானத்தில் அவர் முறையால் மகிழ்ந்தேத்தி வலங்கொள்ள,
கானத்தின் கடல்மல்லைத் தலசயனத் துறைகின்ற,
ஞானத்தின் ஒளியுருவை நினைவார்என் நாயகரே.

நாவலர் பெருமானென நானிலம் போற்றும் குருகூர் நம்பியும்,
" ...வையம் முற்றும் ஏனத்துருவாய் இடந்த பிரான் இருங் கற்பகம்சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும்மற்றெல் லாஎவர்க்கும்
ஞானப்பிரானையல் லால்இல்லை, நான் கண்டநல்லதுவே"

என்று திருவிருத்தத்திலும்,

"கோல மலர்ப்பாவைக் கன்பா கியவென் அன்பேயோ!,
நீல வரையிரண்டு பிறைகவ்வி நிமிர்ந்த தொப்ப,
கோல வராகமொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்ட எந்தாய்!,
நீலக் கடல்கடைந்தாய் உன்னைப் பெற்றினிப் போக்குவனோ?

என்று திருவாய்மொழி இறுதிப் பதிகத்திலும் போற்றி ஏத்துவார்.

மண்ணோரையும் விண்ணோரையும் காத்தருள் செய்யும் முகத்தான், மண்மீது நடந்து படாதனபட்டு, நாட்டை அளித்துய்யச் செய்தற் பொருட்டு பூவளரும் திருமகள் மார்பன் தயரதன் மதலையாய் இராமனாய் வந்துற்ற காலையில், ஈரெட்டு பிராயம் அடையும் முன்னரே தந்தை சொற்கொண்டு அன்புத் தம்பி இலக்குவனுடன் மறை முனிவன் வேள்வி காக்க அவர் பின் சென்று, வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி வேள்வியை அழிக்க வந்த நிசாசரர், சுபாகுவை மாய்த்து, மாரிசனை மறைந்து புறமுதுகிட்டு ஓட விரட்டி, மாமுனிவன் வேள்விகாத்து முடிப்பித்து, விதேக நாடு செல்லுங்காலையில் அகலிகைக்கருள் நல்கி, ஜனக மாமன்னனின் அரசவை சென்று செவ்வரி நற்கடுங்கண் சீதைக்காகிஉருத்திரனின் வில்லிறுத்து, வைதேகியின் கைத்தலம் பற்றி, தன் நாடு திரும்பி ஏகும் போழ்து என்வில் வலி கண்டு போ" என்று எதிர் வந்த பரசு முனிவன் தன் வில்லினோடும் தவத்தையும் வாங்கி, மங்கை நல்லாள் மதிலைச்செல்வியுடன் மகிழ்ந்திருந்து, கூன்றெழுத்தை சிதைகுரைப்பகொடியவள் வாய்கடிய சொற்கேட்டுஈன்றெடுத்த

தாயரையும் இராச்சியத்தையும் ஆங்கு விடுத்து, நேரிழையும் இளங்கோவும் பின்பு போகக்கானேகி கூரணிந்த வேல்வலவன் குகனோடு சீரணிந்த தோழமை பூண்டு, கங்கை கடந்து, தேனமரும் பொழிற்சாரல் சித்திர கூடத்திருந்து, பரதனுக்குப் பாதுகமும் அரசுமீந்து, பிழை செய்த சிறு காக்கைக்கும் அருள் செய்து, அத்திரிமுனிவர் அனசூயயை தரிசித்து ஆசிபெற்று, எதிர்த்துவந்த விராதனைக்கொன்று,சரபங்க மாமுனிவர்தழைக் குடில் சென்று, அவருக்குக் காட்சி நல்கி, அவர் பொன்னுடு ஏகுவது கண்டு, சுதீக்ஷணரின் ஆசிபெற்று, முனிவர்கட்கு அரக்கரை அழிப்பேன் என்று உறுதிகூறி அஞ்சற்க என்றருளி, சீதா பிராட்டியின் உள்ளத்தெழுந்த ஐயம் நீக்கித் தெளிவித்து, வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் பெற்று, அம்மாமுனி வரின் பரிந்துரைக்கேற்ப பஞ்சவடி அடைந்து, இராமானுசன் வேய்ந்த தழைக்குடில் கண்டு போற்றியுகந்து, அக்குடிலில் இனிதிருந்து. கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கி, கர னோடு தூடணன் முதலா ஈரேழாயிரம் இராக்கதர் உயிர் போக்கி, சிலைவணக்கி மான்மறியவெய்து, தனமருவு வைதேகி யைப் பிரிந்து தளர்வெய்தி, சடாயுவை வைகுந்தத்தேற்றி, கபந்தனை மாய்த்தொழித்து, சபரியீந்த கனி உகந்து உண்டு, அவ்வன்னைக்கும் வானுலகருளி, கபியரசன் காதல் கொண்டு, அவனளித்த, பிராட்டியின் அணிகலன் கண்டு அயர்வெய்திப் பின் தெளிந்து, மராமரமெய்து, உருத்தெழுவாலி மார்பில் ஒரு கணை உருவ ஓட்டி, கருத்துடைத்தம்பிக்கு அரசளித்து, அனுமனை உகந்த தூதனாகக் கொண்டு, கணையாழியீந்து, விரிநீரிலங்கையனுப்பி, ''கண்டேன் சீதையை'' என்னும் மொழி கேட்டுக் களித்து, அவனளித்த சூளாமணி பெற்று மகிழ்ந்து, கடற்கரையில் வீற்றிருந்த வேளையில் அறத்தின் வழியொழுகுவான் வீடணன், தன்னை அடைக்கலமாக வந்த டைந்த காலை, பரிதி மைந்தன் சுக்கிரீவன் முதலானோர் வீடணன் பால் ஐயம் மிகக்கொண்டு,அவனை நண்பனாக ஏற்க மறுப்புக் கூறினர். அவ்வமயம், ஒப்பு ஆரும் இலா வள்ளல் இராமபிரான் ''எவனொருவன் என்னைச்சரணமாக அடைந்து என்னுடன் நட்புகொள்ள விழைகின்றானோ, அவனை நான் நண்பனாகக் கொள்வேன். அவனை எக்காரணம் கொண்டும் கைவிடமாட்டேன். மேலும் எவன் என்னை நண்ணி ஒரே ஒரு

முறை தஞ்சம் வேண்டி நின்றானோ, அவனுக்கு அடைக்கல மீந்து, அவனைப் பலகாலும் பல்லாற்றாலும் காத்திடுவேன். இவ்விதமாக அனைத்து உயிரிகளிடத்தும், சாது சனங்களிடத்தும், அருள் புரிந்து காத்து வருவதே எனது தலையாய நோன்பாகும்'' என்று இயம்பியருளியதை வால்மீகி முனிவர் குறிப்பிடுகின்றார்-

மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதம்சன! யு.கா. 18-3.
தர்மிஷ்டம்ச யசஸ்யம்ச ஸ்வர்க்யம் ஸ்யாத்து பலோதயம்l
ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிச யாசதேll 33,
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம் யேதத் வ்ரதம் மமl 34.

.......-இவை இராமபிரானின் மெய்ம்மைப் பெருவார்த்தை.

[இவ்வவதாரத்தில் ஈடுபட்ட குருகூர்ப்பிரான் ''இராமபிரானின் சீர்மைகளையும் நேர்மைகளையுமே கற்றுய்ந்திடுதல் மனிசர்க்கின்றியமையாத ஒன்று'' என வலியுறுத்தி, ''கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ?,

காட்டில் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ?
நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா,
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு,
நாட்டை யளித்துய்யச் செய்து நடந்தமை கேட்டுமே?''

என்று உலகோர்க்கு உணர்த்துவார்]

சீதக்கடலுள் அமுதன்ன தேவகியின் மணிவயிற்றில் கண்ணனாய்த் தோன்றி,அசோதையிளஞ்சிங்கமாய் வளர்ந்து, தாயாய் வந்த பேயின் நஞ்சார்ந்த முலைசுவைத்து, அவளுயிரைக் கொண்டு அப்பேய்க்கும் அருள் நல்கி, தயிரும் விழுதுமுண்டு, வண்டியுருவில் வந்த வல்லரக்கனை காலால் உதைத்தழித்து, உரலோடு கட்டுண்டு, புணர் மருதினூடே தவழ்ந்து, சென்று, அம்மரங்களை முறித்து வீழ்த்தி, அங்கிருந்த அசுரர், களை அழித்து,கந்தருவர் மணிக்ரீவன்-நளகூபரன் சாபம் நீக்கி அருள் நல்கி, குருந்த மரமாய் நின்ற அசுரனை அழித்து, கானேகிக் கறவை கன்று மேய்த்து, கார்க்கோடல் பூச்சூடி

வருகின்ற தாமோதரனைத் திகழ்ந்து, பள்ளத்தில் பறவை யுருவில் மேய வந்த கள்ள வசுரனின் வாய் பிளந்தொழித்து, பாம்புருவில் வந்த அகாசுரனை அழித்து, தேனுகன்-பிலம்பன் இருவரையும், விளங்கனி வீழ்த்துவான் போலே கன்றினுருவில் தோன்றிய அவ்வசுரர்களை விளங்கனி மீது எறிந்தழித்து, ஆயர் மடமக்கள் பங்கய நீர் குடைந்தாடுமிடம் சென்று ஒளித்திருந்து அங்கவர் பூந்துகில் வாரிக் கொண்டிட்டு, அரவேரிடையாரிரப்ப மங்கை நல்லீர் வந்து கொண்மின் என மொழிந்து, காளி யனுச்சியில் நட்டம் பாய்ந்து, பிரமனுககுப் பாடம் புகட்டி, பரியுருவில் வந்த கேசியின் உடல் பிளந்து மாய்த்தொழித்து, குடக்கூத்தும் ஆடி ஆய்க்குல மக்களை மகிழ்வித்து, குன்ற மேந்திக் குளிர் மழை காத்து, சீமாலிகனென்பானுடன் தோழமை கொண்டு, பின்னர் அவன் இழைத்த கொடுமை யறிந்து, அவன் நன்மகனல்லன் என்று துணிந்து, சக்கரத்தால் அவன் தலைகொண்டு, கருத்தைப்பிழைப்பித்து நின்ற கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்று, வில்விழவில் வில்லிறுத்து, அவன் ஏவிய கும்பமிகு மதயானையைப் பாகனொடும் குலைந்து விழுமாறு பண்ணி, சரணூரமல்லர்களை மாய்த்தொழித்து, இறுதியில் வஞ்சித்த கஞ்சனைக் காலனுக்கு விருந்தாக்கி, எரு தேழடர்த்து நப்பின்னை நங்கையின் கைந்தலம்பற்றி மகிழ்ந்து, கன்னி தன்னைக்கைப்பிடிப்பான் வேண்டித் திண்ணூர்ந்திருந்த சிசிபாலன் தேசழித்து, உருப்பிணி நங்கையின் வேண்டுகோளை ஏற்று அவளைத் தன் தேரேற்றி வந்து மணந்து மகிழ்ந்து, தொடர்ந்து வந்து எதிர்த்து நின்று செருக்குற்ற உருக்மியின் வீரம் சிதையுமாறு பண்ணி, செஞ்சொலன்பர் சிந்தைகொண்டு தீதிலாத தூதனாய்த்துரியனிடம் சென்று நல்லுரைகள் பல நவின்று, அவனது அகந்தையொழிப்பான் பொருட்டு ஓங்கி வளர்ந்து தோன்றி, விதுரனளித்த விருந்தினை உவப்புடன் உண்டு அவனுக்கருள் செய்து, பார்த்தன்தன் கோருதலுக் கிணங்கி போர்க்களத்தில் தேரூர்ந்து, அருச்சுனன் மனக் கலக்கம் கொண்டு, ''போரிடேன்'' என்றுரைத்து வில்லையும் அம்பையும் நழுவவிட்டு நின்ற நிலையில், அவனுக்கு அறிவுறுத் தும் முகத்தான். அவனியோர்க்கும் அருள்வான் பொருட்டு நெறியெல்லாமெடுத்துரைத்தநிறைஞானத்தொருமூர்த்தியாய் சேவை தந்து அருள்செய்தான். அவனே கண்ணனாய் கீதாசர்ய னாய்விளங்குபவன்அவனுரைத்தமெய்ம்மைப்பெருவார்த்தைகள்

"ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸசமமப்ரிய:l
யேயதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்,l
யேபஜந்திது மாம் பக்த்யா மயிதே தேஷு சாப்யஹம்"

பொருள் முறையே வருமாறு-ஞானியாயிருப்பவனுக்கு நான் சொல்லுக்கடங்காத முறையில் மிக-மிக விரும்பப்படுவனாகின்றேன். அவ்விதமே அந்த ஞானியும் என்னால் விரும்பப் படுவனாகின்றான். ஆகையால் ஞானியென்பான் மிகவும் உயர்ந்தவனாக உள்ளான்.

எவர் என்னை எவ்விதம் விரும்பி வந்தடைகின்றனரோ, அவர்களை நான் அவர்கள் விரும்பிய வண்ணமே அவர்களை அடைகின்றேன். அவர்களின் விழைவுக்கேற்பவே சேவை தந்தருள்கின்றேன்.

எவர்கள் என்னை அன்புடனும் பக்தியுடனும் அடைகின்றனரோ, என்னிடத்தில் அவர்கள் இருப்பைப் பெறுகின்றனர். அவ்வண்ணமே நானும் அவர்களிடத்தில் இருப்பவனாயுள்ளேன்-

[கண்ணனுடைய எளிய தன்மையில் பெரிதும் ஈடுபட்டு மோகித்துத் தன் மனதை அவனிடமே மன்னியிருக்குமாறு பண்ணின பண்ணவன் குருகூர்மாறன் கண்ணனவதாரத்தைப் போற்றி அருளிய பாசுரங்கள்-

கண்டும் தெளிந்தும்கற் றார்கண்ணற் காளன்றி யாவரோ,
வண்டுண் மலர்த்தொங்கல் மார்க்கண் டேயனுக்கு வாழுநாள்,
இண்டைச் சடைமுடி யீச னுடன்கொண் டுசாச்செல்ல,
கொண்டங்குத் தன்னொடும் கொண்டுடன் சென்றதுணர்ந்துமே?,
ஏற்று, அரும் வைகுந்தத்தை யருளும்நமக்கு, ஆயர்குலத்து
ஈற்றிளம் பிள்ளையொன் றாய்ப் புக்கு மாயங்க ளேயியற்றி,
கூற்றியல் கஞ்சனைக் கொன்றுஐவர்க் காய்க்கொடுஞ்சேனைதடிந்து,
ஆற்றல்மிக் கான்பெரியபரஞ் சோதிபுக்கஅரியே.
கண்ணன் கழலிணை, நண்ணும் மனமுடையீர்!,
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே."]

இவ்வாறாக, ஆதியஞ்சோதியும், பரஞ்சோதியும் பரஞ் சுடருமான பரமன் தனது மூன்று விபவங்களிலும்-அவதாரங் களிலும்-மொழிந்த, உண்மையேயான மேன்மையும் பெருஞ் சிறப்பும் மிகுந்த வார்த்தைகளைத் தன் தந்தையாரிடம் கேட்டு ணர்ந்து, அம்மைவண்ணன் பால் மையல்கொண்ட தையல், அவனே அரங்கத்தரவணையில் பள்ளி கொண்டருள் செய்யும் வள்ளல் எனத்தெளிந்து, அவனையே மணாளனாகப் பெறுவேன், மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் என்று துணிந்த புதுவைச் செல்வியான கோதைநாச்சியார், அவ்வணி யரங்கன் விரைந்து வந்து தன்கைத்தலம் பற்றாததைப் பொறாமல் ஒரு பதிகம் முழுவதிலும் தன் மணாளன் நவின்ற "மெய்ம்மைப் பெருவார்த்தை பற்றிப் பகர்ந்தருளியுள்ளார். ஈற்றுப்பாசுரமும் தெளிவுரையும்-

செம்மையுடைய திருவரங்கர்தாம் பணித்த,
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்,
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பாராரினியே?

செப்பமுடைய - நன்மைகளையுடைய - திருவரங்கநாதர் தாமே - முந்தைய அவதார நிலைகளில் - மொழிந்ததும். உண்மையே ஆனதும் மேன்மையும் மதிப்பும் மிகுந்ததுமான சொற்களை, என் எந்தையாரே நேரிலேயே கேட்டிருப்பர், தம்மிடம் அன்புகொண்டு அணுகுவோரை தாமும் அவர்களை மிகவும் விரும்பி அருளியிருப்பர் என்னும் மொழியானது, இவ் வார்த்தையைச் சொன்னவரிடமே பொருளற்றதாகிவிட்டால், இதன்மேல் நியமிப்பவர், அருள்பவர் யார் இருக்கின்றார்?

<u>ஸ்ரீ ஆண்டாள்-திருவரங்கன் திருவடிகளே சரணம்.</u>

[நாச்சியார் அருளிய "மெய்ம்மைப் பெருவார்த்தை" பதிகம்-11 உரை, "திருவரங்கச் செல்வனார்" தலைப்பில் 35 முதல் 44 முடிய வரைந்துள்ளனம்]



செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

மாதவனையே நாளும்
மனத்திருத்துவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!!!

## மாதவன் என்பதோர் அன்பு

பேரருட்கடலாகவும், பேராற்றல் மிகுந்தவனாகவும், பேரருளாளனாகவும், பெருஞானச்சோதியாகவும் திகழும் திருப் பொலிந்த மார்பன் ஸ்ரீமந்நாராயணனே, ஆழ்வார்களும் ஆசார்யர்களும்அன்புருவாகவே கண்டுபோற்றித்தொழுதேத்தி வாழ்த்தி வழிபடுவர்அவ்விறைவன்பால் யாவர் ஒருவர்பேரன்பு கொண்டு நண்ணுகின்றனரோ அவர்கள்பால் அவனும் அணுகி வந்து அடங்காக்காதல் கொண்டு அருள் நல்கி ஆட்கொள் கின்றான். அணுகுவோரை அவனும் அணுகுவன், அகல் வோர்க்ககல்வன் என்னும் பொருள்பட ''அணுகிலணுகும் அகலிலகலும்'' என்பர் குருகூர் மாமுனிவர். மேலும் அன்ப னாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம், மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம், பொய்யனாகும் புறமே தொழு வார்க்கெல்லாம்'' என்றுரைப்பர். திருவிருத்தத்தில், நாயகியின் நிலையினைப் பேசுங்கால், தனக்குத்தன் நாயகனிடம் உள்ள பேரன்பையே மாலையாக்கித்தன்குழலில் சூடியுள்ளாள் என்னும் பொருள் விளங்குமாறு ''அன்பு சூட்டிய சூழ்குழற்கே'' என்றியம்புவர்.

சீரணிந்த பாண்டியன் தன்நெஞ்சு தன்னில் துயக்கறமால் பரத்துவத்தைத்திறமாச் செப்பிய பட்டர்பிரான், பெருஞ்சோதி யிற்றோன்றிய பெரியாழ்வார், அன்னை அசோதை கண்ணனி டம் மொழிவதாக ''...அன்பா உன்னை அறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மம் தரவே'' என்று பேசுவார்.

திருக்கோளூர் வந்து தோன்றிய மதுரகவியாழ்வார். கண்ணினுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய கண்ணன் பெருமாயனைக்கையதனில் கனிபோலக்காட்டித்தந்த நம்மாழ்வாரை, "தேவுமற்றறியேன் குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே'' என்று போற்றியதோடன்றி, ''அன்பன், தன்னையடைந்தவர்கட்கெல்லாம் அன்பன் தென் குருகூர்நகர் நம்பிக்கு(நான்)அன்பன்''என்று தன் ஆசார்யனை

அன்பனாகவே புகழ்ந்தேத்துவார். மதுரகவியாரின், ஆசார்ய பக்தியை, கவிதார்க்கிகசிம்மம், தாம் அருளிய அதிகார ஸங்கிரகத்தில், இரண்டாம் பாசுரத்தில்'' ..அன்பர்க்கே அவதரிக்கும் மாயன் நிற்க, அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டும் தொல் வழியே நல்வழிகள் துணிவார்கட்கே'' என்று போற்றுகின்றார். இதனின்று மாயனான கண்ணன் தன் அன்பர்க்கெனவே தரணியில் அவதரித்து நல்லறத்தை நிலைநிறுத்தி, தீயவற்றையும் தீயோரையும் அழித்து நல்லோர்க்கு அருள் செய்கின்றான் என்பது தெற்றென விளங்குகின்றது. மேலும் இப்பாடலின் தொடரினின்று தமிழ்கூறும் நல்லுலகில் வாழும்மக்கள் உய்தற் பொருட்டு, குருகைப்பிரானென்னும் நம்மாழ்வார்அருமறைகள் அனைத்தின் பொருளையும் தமிழில் பாசுரங்களாக அருளித்தந்துள்ளார் என்பதையும் அறிகின்றோம்.

குலசேகரப்பெருமான் திருவரங்கத்தில், திருவரங்கப் பேரசானஸ்ரீரங்கநாதன் அன்புமிகுதியால் தென்திக்கை நோக்கிப் பள்ளிகொண்டு சேவை தந்தருள்வதை ''அன்பொடு தென்திசை நோக்கிப்பள்ளி கொள்ளும்'' என்னும் தொடரால் மங்களா சாஸனம் செய்தருள்கிறார்.

திருமழிசைப்பிரான் தாம் அருளிய திருச்சந்த விருத்தம் பிரபந்தத்தில், பெருமான் இம்மண்ணுலக மக்களிடம் உள்ள அன்பு மிகுதியாலேயே நீரில் வசிக்கும் மீனாகவும், ஆமையாகவும் அவதரித்த தோடன்றி கொம்பு போன்றும், அரவை ஒத்ததுமான நுண்ணிய இடையுள்ள ஆய்க்குலமாதரின் பிள்ளையாகவும் வளர்ந்தருள் செய்தான் என மொழிகின்றார்-

அம்புலாவும்மீனுமாகி ஆமையாகி ஆழியார்
தம்பிரானுமாகி மிக்கது அன்பு மிக்கு அதன்றியும்,
கொம்பராவுநுண் மருங் குல் ஆயர் மாதர் பிள்ளையாய்,
எம்பிரானும் ஆயவண்ணம் என்கொலோ? எம்மீசனே?

ஆழியானான பெருமான் என்னைத்தன் தாமரைத் தாளிணைக்கீழ் அன்பு நிலைத்திருக்கும் படியான காலம் கிட்டினதாகக் கருதியுள்ளானோ? என்னும் கருத்துப்பட, ''......தன்

கழற்கு அன்புறைக்க வைத்த நாள் அறிந்தனன் கொல் ஆழியான்......,''

மற்றும் நான்முகன் திருவந்தாதியில், அன்பாகவும், ஆரமுதமாகவும், இன்பமாகவும், தமக்கு எல்லாமாகவும், தாமரையாள் கேள்வன் திகழ்வதை பேசுவார்-

அன்பாவாய் ஆரமுதமாவாய், அடியேனுக்கு
இன்பாவாய் எல்லாமும் நீயாவாய்,—பொன்பாவை
கேள்வா! கிளரொளி என் கேசவனே!, கேடின்றி
ஆள்வாய்க்கு அடியேன்நானுள்.,

''......நாகத்தணைப் பாற்கடல் கிடக்கும் ஆதிநெடுமால் அணைப்பார்க்கருத்தனாவான்'' என்றும் உரைப்பார். மேலும், ஆதிப்பெருமானான திருமாமங்கை மார்பனை, அன்பினால் ஆர்வம் மிகுந்து தங்கள் மனத்தகத்தே மன்ன வைக்கும் வல்லமை பெற்றவர்கள், தம் மெய்யை பெருமானுறையும் இடமாக விரும்புவதோடன்றி தாங்களும், பரமபதமான திரு வைகுந்தத்தை விரைந்து கண்டு களித்தின்புறும் பெரும் பேறு பெற்றவராவர் என்றியம்புகின்றார்-

ஆய்ந்து கொண்டு ஆதிப்பெருமனை, அன்பினால்
வாய்ந்த மனத்து இருத்தவல்லார்கள்-ஏய்ந்ததம்
மெய்குந்தமாக விரும்புவரே, தாமும் தம்
வைகுந்தம் காண்பார் விரைந்து.

''அன்பு ஆழியான்'' என்பர் பொய்கைதனில் வந்துதித்த புனிதரான பொய்கை முனிவர். கடன் மல்லைப்பூதத்தார். அன்பனான நாரணற்கு, ஞானத்தமிழனாகிய நான், ''அன்பையே அகலாகவும், மனத்திலெழும் ஆர்வத்தையே நெய்யாகவும், ஆர்வத்தாலெழும் சிந்தையையே திரியாகவும் கொண்டு ஞானச்சுடர் விளக்கேற்றி, அவ்வெழிலார் திருமார் பனைச்சேவித்தின்புற்றேன்'' என்றருள்வர் தாம் யாத்தருளிய இரண்டாந்திருவந்தாதி முதற்பாடலில். மேலும்ஈற்றுப்பாடலில் ''விளங்கனியுருவிலும், கன்றினுருவிலும் தன்னை நலிய வந்த இரு நிசாசரர்களை, கன்றினுருவிலிருந்த அசுரனைப்பிடித்து விளங்கனியுருவில் இருந்த அசுரன் மேல் எறிந்து இருவரும்

மோதி அழியுமாறு பண்ணிய அன்புருவானமாலே! நெடியோனே! கண்ணனே! உன்பால் யான் கொண்டுள்ள அன்பு அளத்தற்கரியது'' என்றும் பேசுகின்றார்-

மாலே! நெடியோனே! கண்ணனே! விண்ணவர்க்கு
மேலா! வியன்துழாய்க் கண்ணியனே!,-மேலால்
விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே! என்றன்
அளவன்றால் யானுடைய அன்பு.

திருமங்கைமன்னன், நாச்சியார் கோயிலென வழங்கும் திருநறையூர்த்திருப்பதியுறையும் தேனார் கமலத்திருமகள் நாதனைப் போற்றித்தொழுதேத்தும் பதிகத்தில், திருநறையூர் நம்பி, தாய்ப்பசுவையே நினைந்திருக்கும் கன்றே போல் என்னையும் தன்னையே நினைக்கச்செய்தான். அவன் என்பால் அருள்கூர்ந்து என்னைக்காப்பவன். அன்று ஊழிக்காலத்தில் இவ்வவனியைத்தன் திருவயிற்றில் பாதுகாத்து வைத்திருந்து பின்னர் படைப்புக் காலத்தே மீண்டும் தோற்றுவித்தவன். அவன் செவிகளில் மகரக்குழை அணிந்து அடியவர்களுக்குச் சேவை தந்தருள்பவன். என்றென்றும் எக்காலத்திலும் வாலிபனாகவே தோன்றுபவன். மதில்களால் சூழப்பெற்ற திருக்கோவலூர்த்திருப்பதியில் இடைகழியில் பாட்டுக்குரிய பழையவர் மூவர்க்கு-சேவைதந்தருளியவன். அவன் ஆயனாய்த் திகழ்பவன். அவன் உலகளந்த உத்தமன். அவன் அமரர்கள் அனைவர்க்கும், சிங்கத்தைப் போலவும் காளையைப்போலவும் மிடுக்குடன் பீடு நடையுடன்திகழும் தலைவனாய் விளங்குபவன் அவன் எனக்கு அன்பன். அவ்வன்பனையன்றியான் பிறரொருவரையும் ஆதரிப்பவனல்லேன்'' என்று மொழிவார்-

தாய்நி னைந்தகன் றேயொக்க என்னையும்
தன்னை யேநினைக் கச்செய்து, தானெனக்
காய்நி னைந்தருள் செய்யு மப்பனை,
அன்றிவ் வையக முண்டுமிழ்ந் திட்ட
வாய னை·மக ரக்குழைக் காதனை,
மைந்த னை,மதிள் கோவல் இடைகழி
ஆய னை அம ரர்க்கரி யேற்றை யென்
அன்ப னையன்றி யாதரியேனே.

மேலும் அன்பனாகிய எம்பெருமான்,பேதியா இன்பவெள்ள மாகவும், இன்பனாகவும் இனியனாகவும் திகழ்கின்றான் என்பர்.

வேதாந்தகுரு என்னும் போற்றுதலைப் பெற்ற நம் ஆசார்யன் சுவாமி தேசிகன், திருவேங்கடமுடையானது கருணை-அன்பு-தயவு-பற்றி பதினெண்ணூறு சுலோகங்கள் ''தயாசதகம்''என்னும் பெயரில் யாத்துஅருளியுள்ளார். முதல் சுலோகத்தில் மொழிவார் - திருவேங்கடத்தானின் அன்பு அல்லது கருணை,இனிப்பு மிகுந்த கருப்பஞ்சாறு போல் வெள்ள மிட்டுப் பெருகிச் செல்லுகின்றது.கருப்பஞ்சாறு சருக்கரையாகி பின்னும் உறைந்து கற்கண்டு ஆகிவிடும். அதே போன்று ஸ்ரீநிவாஸப்பெருமானின் அன்பு உறைந்து திருமலையாய்த் திகழ்கின்றது. அம்மாமலை அவனடியார்கள் சேவித்தின்புறுதற் கேற்றதாய் அமைந்துள்ளது.

மேலும், பெருமானின் அன்பு அவ்வெம்பெருமானுக்குப் பிராட்டியாக இருந்து, அடியார்களைக் காத்தருளுவதில் தன் நாயகனுக்குத் துணை புரிகின்றதாகவும் உருவகப்படுத்தி உரைக்கின்றார்.

ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அன்பனாக கண்ட அலர்மேல் மங்கையுறை மார்பனை, பட்டர்பிரான் கோதை, ''மாதவன் என்பதோர் அன்பு'' என்று போற்றுகின்றார். அவன் எனக்கு அன்பன். அவன், மதுரை, ஆய்ப்பாடி, நந்த கோபாலன் கடைத்தலை, யமுனைக்கரை, பொய்கைக்கரை, பத்தவிலோசனம், பாண்டிவடம், கோவர்த்தனம், துவராபதி- ஆகிய தலங்களில் அருள் செய்யா நிற்கின்றான்.

என்னை என் அன்பனான கண்ணனிடத்தில் அழைத்துச் சென்று உய்த்திடுமாறு தன் அன்னை, தோழியர் ஆகியோரிடம் வேண்டுகின்றார். உரிய பதிகத்தின் பொருள் சுவைத்தின் புறுவோம்-

மற்றிருந்தீர்கட்கறியலாகா மாதவனென்பதோ ரன்புதன்னை,
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தை,
பெற்றிருந்தாளையொழியவே போய்ப் பேர்த்தொரு தாயில் வளர்ந்த நம்பி,
மற்பொருந் தாமற்களமடைந்த மதுரைப்புரத் தென்னையுய்த்திடுமின்.

என் விருப்புக்கு மாறுன கருத்துடைய உங்களால் அறிந்து உணரமாட்டாத, மாமலர்மங்கை மணுளன் திருமா லென்னும் ஒப்புயர்வில்லாத அன்பனையே அல்லும் பகலும் நினைந்து அவன் கைத்தலம் பற்றுவதொன்றினையே குறிக் கோளாகக்கொண்டுள்ள என்னிடம், நீங்கள் மொழிவதெல்லாம்- எள்ளி நகையாடுதற்குரிய - ஊமையரும் செவிடரும் பேசு வதையே ஒத்திருக்கும். ஆகவே நீங்கள் என்னுடைய உறுதி யான உள்ளக்கருத்தினை மதித்து அக்கருத்துக்கிணங்க, தன்னை ஈன்றெடுத்த அன்னை அமுதன்ன தேவகியை விட்டு வசுதேவர் மூலமாக ஆய்ப்பாடியை அடைந்து பிறிதொரு தாய் அசோதை யின் இல்லில் வளர்ந்து பிள்ளைப்பிராயம் முழுவதும் வசித்து வாழ்ந்திருந்த பேரருளாளன் நம்பி கண்ணன், தன்னை வெல் வதற்குரிய ஆற்றலற்ற மற்போர் வீரர்களின் அமர்க்களத்தை அடையும் நிலப்பகுதியான வடமதுரைப்பகுதியிலோ அல்லது அப்பதியின் புறத்தேயாகிலும் என்னை அழைத்துச் சென்று சேர்த்து விடுவீராக. இது ஒன்றே நீங்கள், நாயகனைப் பிரிந்து வாடித்துன்புறும் எனக்குச் செய்யும் பேருதவியாக அமையும்.

அன்னைமீர்! தோழியர்காள்! பிறர் என் நிலை கண்டு சிரிப்பார்கள் என்று நாணுவதில் பயனேதுமில்லை. நான், என் காதலன் கண்ணனிடம் மனதைப் பறிகொடுத்து அவனையே நினைந்து உருகுவது ஊரறிந்த ஒன்றும் ஆகையால் நீங்கள் செய்யக்கூடியது யாதெனில் உரைத்திடுவேன் உன்னுமின்- பிரமசாரி வேடமணிந்து சென்று, பின்னர் திரிவிக்கிரமனுய் ஓங்கி உலகெலாம் அளந்துகொண்ட மாயச்செய்கையில் வல்ல வனுன உத்தம புருடனைக் கண்டாலன்றி என் காதல் நோய் தணியாது.இனியும் தாமதம் செய்யாமல்,என்பிணி அகலுவதற் குரிய வழிகண்டு, பிரிவுத்துயரினுல் மிக மெலித்துள்ள என்னை, முன் போல் திகழச் செய்ய விரும்புவீரேல், சத்தியமாக நான் உயிருடன் இருக்கவேண்டும் என்று எண்ணினீர்களாகில் அசோதையிளஞ்சிங்கமான கண்ணன் வாழ்ந்த ஆய்ப்பாடி யிலேயே என்னைக் கொண்டு சேர்த்திடுவீராக.

அன்னைமீர்!, என் மனத்துறையும் மாயவன், யார்க்கும் அரிய பெரியமாமாயங்கள் புரியும் புனிதன்.என்னை அணுகிவந்து தனது எழிலார் திருமேனியுடன் சேவை தந்தருள்கின்றுன்.என்

மனமும் மெய்யும் அவனை அண்டியிருக்கவே விழைகின்றன. நான் அவனிடம் செல்லத்துணிந்து விட்டேன். தாய்-தந்தையர் இருக்க, அவர்களைக் கேட்காமல் தனியே சென்றுவிட்டாள் என்னும் பழிச்சொல் வாராமல் காத்துக்கொள்வது உங்களுக்கு அரிய ஒன்றாகிவிடும். கூத்தாடிக்குறும்புகளைச் செய்யவல்ல ஒப்புயர்வற்ற மகனை-கண்ணனை-தவமிருந்து பெற்றவனான நந்தகோபனாரின் மாளிகை வாயிலிலே இரவில் எவ்வாறு அழைத்துச் செல்வோம் என்னும் தயக்கம் கொண்டு திகைத்தி டாமல் இந்நள்ளிரவு நேரத்திலேயே நான் விரும்பும் வண்ணம் என்னைக் கொண்டு விட்டிடுவீராக.

தாயர்களே! எனது மார்பகங்கள், தனது அழகிய உள்ளங்கையில் ஆழியைக் கொண்டுள்ள கண்ணனையன்றி பிறிதொருவரை நோக்கேன் என்னும்உறுதியுடனிருக்கின்றன. அவை பிறப்பிறப்பென்னும் வலையுள் சிக்குண்டு அல்லலுறும் சிறிய மனிதர்களைக் கண்டககால் நாணிச்சுருங்குபவையாயுள் ளன. நீங்கள் நேரில் கண்டு தெளிவீராக. எனது உள்ளமும் யாக்கையும் கோவிந்தன் வாயிலுக்கன்றி பிறிதோரிடம் செல்வனவாயில்லை. உள்ளம் உறுதியுடன் திகழ்வதால் உடலும் உள்ளம் செல்லும் வழியிலேயே செல்வதாயுள்ளது. ஆகவே நீங்கள், எனக்கு இங்கு வசிக்கும் வாய்ப்பினை விலக்கி என் நாயகன் கண்ணன்விளையாடியிருந்த யமுனையாற்றங்கரையில் என்னைச் சேர்த்திடுவீராக.

[-இப்பாசுரத்தில், நாச்சியார், தன் உள்ளத்தின் உறுதிப் பாட்டினையே உன்னியுணரவேண்டும் என்னும் கருத்துப்பட ''கொங்கைத்தலமிவை நோக்கிக்காணீர்'' என்று அருளி யுள்ளார் என்று பெரியோர்கள் தெளிவுரை-]

அன்னைமீர்! நீங்கள் என் நிலைகண்டு வருந்தற்க. எனக்குற்ற இந்நோயை யாரும் அறிந்து கூறமாட்டிலர். கரு நீலவண்ணக்கடல் நிறத்திருமேனியனான, என் நாயகன் என்னை அணுகிவந்து என் உடலைத் தடவிய உடனேயே என் பிணி அகன்றுவிடும். இது திண்ணம். இது ஒன்றே பயன் தரத்தக்கதான உரிய வழியாம். ஆகையால் நீங்கள், யமுனை

யாற்றங்கரைதனிலே ஓங்கி வளர்ந்திருந்த கடப்ப மரத்தின் உச்சியை அடைந்து, அங்கிருந்து மடுவில் குதித்து காளிய நாகத்தின் தலைமீது நடனமாடிய கண்ணன் போர் செய்ய இடமாக அமைந்த அம்மடுவின் கரையில் என்னை அழைத்துக் கொண்டு விட்டிடுவீராக. தனிமையில் என்னை எங்ஙனம் துணிந்து விட்டு வருவது என்று நீங்கள் கவலையுற வேண்டா. என் ஆருயிர் நகயகன் கண்ணன் அவண் வந்து என்கரம்பற்றி அழைத்துச் சென்றருள் செய்வான். இதனை நீங்களும் கண்டு கொள்வீர்.

கருநிறமான குளிர்ந்திருக்கும் முகில்களும், காக்கணம் பூக்களும், காயாம் பூக்களும் தாமரை மலர்களும் என்னை நெருங்கி வந்து என் நாதனின் எழிலார் திருமேனி வண்ணத் தைக் காண்பித்து, ''நீ உன் நாயகனை இருடீ கேசனை நண்ணி அடைக'' என்று என்னை வலிந்து நலிகின்றனவா யுள்ளன.-என் காதலனை அவன். சோர்வால் வியர்த்துப் பசியினால் வயிறு தளர்வுற்று விரும்பும் சோறு வகைகளை புசிக்கக்கூடிய காலம் இதுவாகும் என்றுணர்ந்து பொருந்தி நீண்ட நோக்குடன் வழிபார்த்திருக்குமிடமான பத்த விலோ சனம் என்னும் இடத்தில் என்னைக்கொண்டு சேர்த்திடுவீராக.

அன்னையர்காள். தண்ணெனும் கடல்நிற வண்ணனும், ஒப்பிலாதவனுமான என் கண்ணன், அழகியதும் குளிர்ச்சி உடையதுமான தனதுதிருத்துழாய் மாலையை என்னிடமிருந்து பெற்றுத்தான் சூடிக்களைந்து, அம்மாலையை அவனது அங் கைகளாலேயே எனக்கு அணிவித்தானாகில், எனது உடல் வண்ணம் மாறுபட்டிருப்பதும், மனம் நொந்திருப்பதும், இதழ்கள் வெளுத்திருப்பதும், உணவு உட்கொள்வதில் விருப் பின்றி இருப்பதும், உணர்வற்ற தன்மையும் அகன்றொழியும் பிலம்பாசுரன் அழிந்து படுமாறு பலராமன் வெற்றி பெறுவதற் கிடமாயிருந்த பண்டீரவடமென்னும் இடத்தில் என்னைக் கொண்டு விட்டிடுவீர் என் கண்ணன் எனக்குத்தண்ணந்துழாய் அணிவித்து அருள் செய்தின்புறச்செய்வான்.

பாவிகளாகிய நீங்கள் என் கண்ணன் செய்த செய்கை களை எண்ணி ஏளனமாகப் பேசுகின்றீர்கள். அவன் செய்கை

களின் உண்மை நிலைகளை உரைப்பேன் உன்னுமின்-வஞ்சகர்களான அரக்கர்களை வஞ்சித்தழிப்பதற்கெனவே கன்றுகளை மேய்க்கும் செயலை மேற்கொண்டான். அதற்கென்றே காட்டில் வாழ்ந்துவரும் ஆயரோடுஆயனுய் வளர்ந்தான்.இணைந்திருந்து நின்ற இரு மருதமரங்களை முரிப்பதற்கென்றே உடலில் உரலுடன் சேர்ந்து கட்டுண்டிருந்தான். இவற்றை நீங்கள் உணர்ந்தீரல்லீர். என் கண்ணன் மாடுகள் அல்லலுருமல் வாழ்ந்திருத்தற்பொருட்டு, அவைகளின் மீது மழைநீர் வீழ்ந்து நலிவுருவண்ணன், வெற்றியைக்குறிக்கும் குடையாமெனத் தன் எழிற்கரத்தில், ஏந்தி நின்றிருந்த கோவர்த்தன மலையடிவாரத்திலே, நீங்கள் கற்றபடி மொழிவதைக்கேட்டு நான் நிந்தித்துப்பேச வாய்ப்பு இராதபடிக்கு என்னைக்கொண்டு சேர்த்திடுவீர்.

அன்னைமீர்! நான் வளர்த்து வரும் கிளி கூட்டினில் இருந்து கொண்டே எந்நேரமும் இடையீடின்றி ''கோவிந்தா! கோவிந்தா!!'' என்று கூவுகின்றது. அதன் இச்செய்கையைக் கண்டு, தாதிகள் அதற்கெனக் கொடுத்த பழம் முதலான உணவை நான் கொடுக்காமலிருப்பேனாகில் ''உலகளந்த மூர்த்தியே!'' என்று உரத்த குரல் கொண்டு வெகு தொலைவு கேட்குமாறு கூவுகின்றது. இவ்வுலகின் கண் உங்களுக்கு வர இருக்கும் நன்மைகளைப்பெறாமல் போக்கியது மன்றி பெரும் பழிகட்டும் ஆளாகி, வீணுகை என் வழியில் குறுக்கீடு செய்யாமல் சிகரங்களைப் போன்று உயர்ந்து திகழும் மாடமாளிகைகளால் சூழப்பெற்றதும்,என் கண்ணன் வாழ்ந்தருள் செய்யுமிடமுமான துவராபதி நகரில் என்னை அழைத்துச்சென்று சேர்த்திடுவீராக.

இறுதியான பத்தாம் பாசுரத்தில் பதிகப்பயன் நவில்கின்றார் நாச்சியார்-

மன்னு மதுரை தொடக்கமாக வண்துவ ராபதி தன்னளவும்,
தன்னைத் தமருய்த்துப் பெய்யவேண்டித் தாழ்குழ லாள்துணிந் ததுணிவை,
பொன்னியல் மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன்விட்டு சித்தன்கோதை,
இன்னிசை யால்சொன்ன செஞ்சொல்மாலை ஏத்தவல் லார்க்கிடம் வைகுந்தமே.

நீண்டு தாழ்ந்த குழற்கற்றையை உடைய ஒரு காரிகை, கண்ணனிடம் மோகித்திருக்கும் தன்னை, தன் காதலனை கண்ணன் மன்னியிருந்து அருள் நல்கும் தலங்கள் திருமதுரை தொடங்கி துவராபதி நகர் ஈறுக, தன் தாயும் தோழியரும் கொண்டு சேர்த்திட வேணும் என்று விருப்புற்று, பிறர் கூறும் பழிச்சொற்களுக்கு அஞ்சாமல் உறுதியுடன் உரைத்த உள்ளத் திண்மையைப்பற்றி, பொன்போல் பளபளக்கும் மேன் மாடங்கள் அழகுறத்தோன்றும் ஸ்ரீ வில்லிபுத்தூர் நகருக்குத் தலைவரான ஸ்ரீவிஷ்ணுசித்தரின் செல்வப்புதல்வியானகோதை நாச்சியார் இனிய பண்ணுடன் இயற்றியருளிய செய்யுட்பாக்களைப் பாடித்துதித்திடும் வல்லமை வாய்ந்தவர் வாழும் இடம் வைகுந்த மாநகரேயாம்.

பேரன்பும், பெருங்கருணையும் கொண்டு தன்னடியார்க் கருள் செய்வதற்கென்றே செய்யாளுடன் சேர்ந்திருந்தே திகழும் மாதவனின் மலர்ப்பதங்களை நண்ணி, அவன் தன் தாமரைத்தாளிணைகளை நம் தலை மேற்கொண்டு நாளும் நலம் பெற்றுய்ந்திடுவோமாக.

சூடிக்கொடுத்த நாச்சியார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தெம்பெருமான் திருவடிகளே சரணம்



செல்வநாரணு! செல்வநாரணு!! செல்வநாரணு!!!



ஸ்ரீ:

வண்டுவரைக் கண்ணனை
வணங்கி எழுவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## கருவரங்கம் - கருக்கோட்டி

மயர்வறமதி நலமருளப்பெற்ற ஆழ்வார்களை, ஆதியஞ் சோதி, பரவாசுதேவன், திருமாமகள் மார்பன் ஸ்ரீமந்நாராயண னின் அபிநவ தசாவதாரம் என்று வைணவம் புகல்கின்றது. ஆழ்வார்களென்னும் இம்மாமுனிவர்கள் கருவிலே திருவுபெற்ற வராகவும், நுண்மாண்நுழைபுலம் மிக்கவராகவும், நுணங்கு கேள்வி இசையினராகவும் திகழ்ந்தனர். இம் மகான்கள் உலகோர் உய்யும் பொருட்டு அருளிய பைந்தமிழ்ப்பாசுரங்கள் இலக்கியமாக விளங்குவதோடன்றி, செந்தமிழுக்கு இலக்கண மாகவும் திகழ்கின்றன. பக்தி நெறி மேன் மேலும் ஓங்கவும், நிலைத்து நிற்கவும் அருளிச்செயல்கள் பெருந்துணையாயிருக் கின்றன என்பது மிகையாகாது. பண்ணார் தமிழ்ப்பாசுரங்களைப் பொருளுணர்ந்து இசையுடன் பக்திப்பரவசமாகப் பாடினோ மாகில் திருமாலவன் திருவருள் பெற்றுய்வது திண்ணம்.

திருவரங்கனிடத்தில் பக்திபண்ணி அவனருள் பெறுமல் வீணே காலங்கழித்திடும் மக்களுக்கென இரக்கங்கொண்டு, ''கருவிலே திருவில்லாமல் காலத்தைக் கழிக்கின்றீரே'' என்று அருள்வார் நம், மண்டங்குடி வந்த மாமுனிவர் தொண்டரடிப் பொடி ஆழ்வார் தாம் அருளிய திருமாலை பிரபந்தத்தில். எல்லோரும் கருவிலே திருவுபெற்று பரமனை வணங்கி வழிபட்டு அவனது புகழ்ப்பாடல்களைப் பாடிப்பிறவிப் பயன் பெற்றுத் திகழ்ந்திடவேண்டும் என்பதுஆழ்வாரின் பேரவா. நரகத்தையே சுவர்க்கமாகமாற்றிடும் புனிதத்தன்மை வாய்ந்ததுஅரங்கனின் பெயர் என்னும் பொருள்பட, ''நரகமே சுவர்க்கமாகும் நாமங் களுடைய நம்பி'' என்றியம்புவார். இன்னும், பெருமாள் திருவரங்கனைப் பாடிப்புகழ்ந்து புனிதம் பெறாதவர்களாய் இவ் வுலகியல்புகளிலேயே உழன்று துன்புறுகின்றனரே என்று அங்கலாய்க்கிறார் - ''அவனதூரரங்கமென்னாது அயர்த்து வீழ்ந்து அளிய மாந்தர் கவலையுட்படுகின்றாரென்றதனுக்கே கவல்கின்றேனே.'' கலியினால் நமக்கு அச்சமோ அல்லலோ

இல்லை என்று ''பொலிக பொலிக பொலிக'' பதிகத்தில் அணி குருகை நகர் முனிவர் அருளியதைப் போன்று முதற்பாடலில், நாம் கலியைக் கடந்து விட்டோம், கால தூதுவர் தலைமீது கால்வைத்து நடந்து செல்லும் துணிவுடையோம் திருவரங்கன் திருவருளால்'' என்று பேசுவார் -

காவலில்புலனை வைத்துக் கலிதன்னைக்கடக்கப் பாய்ந்து,
நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே,
மூவுலகுண்டுமிழ்ந்தமுதல்வ! நின்நாமம்கற்ற
ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமா நகருளானே!

22 ''எம்பெருமான் பெருமையையும், புகழையும் பேசிப் பேசித்தான் உணர்ந்து கொள்ள இயலும். மனதில் பேரவாவுட னும் பேரார்வத்துடனும் பக்தி பண்ணி சிந்திப்பவர்க்கே அவ் வமலன் தோற்றமளிப்பன். அத்தகையை மாசற்றமனத்துளோ ரின் உள்ளத்தே உறையும் அவ்வரங்கனை வணங்கியிருப்பதைத் தவிர்த்து நமக்குப் பிறிதொரு செய்கையும் உளதோ? என் பேதை மனமே! உரைத்திடுவாய்'' என்று தன் நெஞ்சிடம் வினவுகின்றார்.

23 ''கங்கையைக் காட்டிலும் புனிதம் மிகுந்த காவிரி ஆறு களின் மத்தியிலே, ஊற்று நீரும் பாய்ந்து செல்லும் வளம் மிகுந்ததும், பூக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பெற்று விளங்குவதுமான திருவரங்கத்திருப்பதியில், எங்கள்,-நாங்கள் தொழுதேத்துகின்ற-ஈசர்க்கும் ஈசனும் இறைவனுமான திரு வரங்கநாதப்பெருமான் பள்ளி கொண்ட நிலையில் சேவை தந்தருள்வதை நான் எவ்விதம் மறந்து வாழ்வேன்? அவ்வெம் பெருமானை ஒருநொடிப்பொழுதும் மறந்து உயிர் தரித்திருப்பது என்னால் இயலாத ஒன்றும்'' என்று மொழிகின்றார்.

25 ''நான், மறையவர்க்குரிய முறையில் புனலாடி, மூன்று வேள்விகளை-ஔபாசனம், ஆகவனீயம், வைசுவதேவம்- என்பன மூத்தீ-செயலாற்றுவேனல்லேன். உன்னிடத்திலும் சிறந்த பக்தியைக் கொண்டொழுகுபவனாகவும் இருக்க முற் பட்டேனில்லை. இந்நிலையில் நான் எதனை எண்ணிக்களிப்புறக் கூடும்? பேரருளாளனே! கடல் நிற வண்ணனே! உனக்கே

அடியனான நான் நின்னருள் பெரும் விழைவுகொண்டு உன்னைக்கதறி அழைக்கின்றேன். திருவரங்க மாநகரில் பள்ளி கொண்டருளும் திருவரங்கனே! எனக்கு அருள் நல்கிட வேண்டுகின்றேன்'' என்று ஸ்ரீரங்கநாதப் பெருமானிடம் வேண்டுகின்றார்.

26 ''பூசனை செய்யும் வேளைகளில் நல்ல மலர்களைப்பறித் தெடுத்து வந்து உன்றன் பொன்னார் திருவடித்தாமரைகளில் அருச்சித்து வழிபட்டேனில்லை. குற்றமில்லா சொற்களைச் சொல்லி உன்னுடைய புகழ்களையும் நான் ஓதுபவனுமில்லை. என் மனந்தனில் உன்னைப்பற்றியதான காதலென்னும் பக்தி யும் இருப்பதாக உணரவில்லை. என் அரங்கனுக்கு எந்த ஒரு விதத்திலும் பணி செய்யாத நிலையில் நான் என்ன காரணங் கொண்டு இந்நிலவுலகில் பிறந்தேனோ? அறிந்தேனில்லையே'' என்று தன்னை நொந்தவண்ணம் உரைக்கின்றார்.

30 என் மனமும் தூய்மையுடையதாக, மாசற்றதாக இருக்கவில்லை. என் வாயும் இனிய மொழிகளை மொழிவதாக இல்லை.எதனையோ சாதித்துவிடுவதாக எண்ணி வீணே மிகுந்த சினங்கொண்டு ஏதோதோ பயனற்றவைகளைப்பேசுகின்றேன் என் நிலைமை இவ்விதமிருக்க, துழாய்மாலையணிந்திடும் புனிதனே! காவிரி சூழ்ந்து விளங்கும் திருவரங்கத்திருமாலே! என்னையாண்டருளும் தலைவனே!இறைவனே!எனக்கு ஆதரவு, கதி என்ன? என்று சொல்லியருள வேண்டுகின்றேன் ஐயனே!

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் என்போரும், பாட்டுக்குரிய பழையவர் மூவரென்போரும், பாலேய் தமிழர் இசைகாரர் செந்தமிழ் பாடுவார் என்போருமான முதலாழ்வார் மூவருமே அயோநிஜர்கள்-கருப்பவாசமின்றி அவதரித்தவர்கள் என்று அவர்களது வைபவங்கொண்டு உணரக்கிடைக்கின்றது.

பொய்கைதனில் வந்துதித்த புனிதரான பொய்கை யாழ்வார், காஞ்சியம்பதியில் திருவெஃகாவில் பொய்கையில் ஓர் பொற்றாமரை மலரில் ஐப்பசித்திருவோணத்திருநாளிலும், கடல்மல்லைப்பூதத்தார் என்னும் பூதத்தாழ்வார், திருக்கடன் மல்லைக்கடற்கரையில் மலர்ந்திருந்த நீலோத்பலமலரில் ஐப்பசி

அவிட்ட நன்னாளிலும், மாமயிலை மாமுனிவரான பேயாழ்வார், திருமயிலையில் ஓர் கிணற்றில், செங்கழுநீர்-செவ்வல்லி-பூவில் ஐப்பசி சதயப் பொன்னாளிலும் பக்தி நெறி பரவி உலகோர் உய்தற்பொருட்டு அவதரித்தனர் என்பது வரலாறு.

மூவரில் முதலிற்றோன்றிய பொய்கையார்!தாம் அருளிய முதற்றிருவந்தாதியில் ஆறும் பாசுரத்தில் தாம் கருப்பையில் வளர்ந்துவரும் காலையிலேயே தாமரையாள் கேள்வன் ஸ்ரீமந்நாராயணனை கைகளால் தொழுது கண்களாலும் கண்டேன் என்று தாம்கருவிலே திருவு பெற்றுத்திகழ்ந்திருந்ததைப் பேசுவார்-

ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனை நான்,
இன்று மறப்பனோ ஏழைகாள்?, அன்று
கருஅரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்,
திருவரங்கம் மேயான் திசை.

அழிவற்று என்றென்றும் நிலைத்தேயிருப்பதான-எம் பெருமான் என்னும்-செல்வத்தை இழந்து நிற்கும் நிலத்துள்ளீரே!, அலைமோதுவதும் தண்ணென்றிருப்பதுமான கடல் வண்ணமேனியனான திருமாலை நான் ஒரு நொடிப்பொழுதும் மறந்திருப்பதில்லை. அனவரதமும் அனுதினமும் அவனை நினைந்திருப்பவனாயுள்ளேன். நான் பிறப்பதற்கு முன்னமேயே கருப்பரங்கத்திலே படுத்துக்கிடந்த நிலையிலேயே கைகூப்பி வணக்கம் செய்து வந்தேன். ஸ்ரீரங்கத்தில் பொருந்தியிருக்கும் அவனுடைய திக்கையும் அப்பொழுதே நான் பார்த்துத் தெளிந்தவனானேன். இவ்வளவு ஆனபின்னரும் ஓதநீர் வண்ணனான திருமாலை நான் மறந்திருப்பனோ?ஒருக்காலும் நான் மறப்பேன் என்பதில்லையாம்.

இம்மாமுனிவரின் இன்னும் சில அருளுரைகள்-

உலகையளந்து கொண்ட உத்தமனான எம்பெருமானை யன்றி பிறரொருவரை எனதுகைகள் கூப்பி வணக்கம் செய்ய மாட்டா. அந்தநெடுமாலைத் தவிர்த்து வேறெதையும் எனது வாய் வாழ்த்தி மொழியாது. தாயினுருவில் வந்த பேய் பூதனை

யின் கொங்கையிலிருந்த நஞ்சை உகந்துஉட்கொண்ட கண்ண பிரானின் திருவுருவத்தையும், திருப்பெயர்களேயும் விடுத்து பிறிதொன்றையும் எனது கண்களும், காதுகளும் காண்பதும், கேட்பதும் செய்யமாட்டா.

''என் உள்ளமே! இந்த நாள் முதலாக இனிவரும் எல்லா நாள்களிலும், பொன்போல் மிளிர்கின்றதும் அழகியதுமான திருச்சக்கரத்தைத் தன் கையகத்தே பெற்றுள்ள பெருமானேப் புகழ்வதான மொழிகளேயே, முழுமனதுடன் சொல்ல இயலா விடினும் மேலெழுந்தவாறாகிலும் சிந்தனே செய்த வண்ண மிருப்பாயாக.- நம்மிறைவனான நாராயணன் - மலேயொத்த தான தீச்செயல்களே,குற்றங்களே,நீ செய்தாலும்,உன்னிடத்தி லுள்ள நற்குணங்களேயே நோக்கி உனக்கு அருள் செய்வான் அவ்வாழியான்'' என்று செய்யாளுறை மார்பனின் அருளும் குணத்தைத் தன் நெஞ்சுக்கு உணர்த்துகின்றார்.

நல்லுணர்வு, நல்லறிவானது தாமரையாள் கேள்வ னிடத்திலேயே பக்தியுடன் திகழும் என்று மொழிகின்றார்- உலகியல்புகளே உவமை கொடுத்து அருள்கின்ருர்- எவ்வாறு ஆறு, கீழ்மேலாகக்கொந்தளித்துக் கிளர்ந்தெழும் பெருங் கடலேயே நோக்கிச்செல்லுமோ, பொலிவார்ந்த தாமரை,மல்லி முதலான மலர்கள் காலேயில் தோன்றும் கிரணங்களேக் கொண்டுள்ள சூரியனையே - ஞாயிறையே - கண்டு மலர் கின்றனவோ, உயிரிகளும் இறக்குந்தருவாயில் தருமராஜனை காலனேயே நோக்கிச்செல்லுகின்றனவோ, அவ்வாறே நல் லுணர்வானது-நல்லறிவானது-வனப்புமிகுந்த தாமரை மலரில் தோன்றிய பெரிய பிராட்டியாரென்னும் திருமாமகள் கேள்வ னான பரமன் திருமால் ஒருவனே நோக்கி அவனேயே தஞ்ச மெனக் கொண்டு திகழும்.

பொய்கையார், மொழிந்ததைப் போன்றே, மூவரில் நடுவரான பூதத்தாரும், தாம் கருக்கோட்டியுள் கிடந்திருந்த வேளே,''திருக்கோட்டியில் திருவருள் நல்கும் என்எந்தையான பெருமானேத்திருமாலேக் கைதொழுது வணங்கி அவன்தன் வியத்தகு பேராற்றலேயும் கண்டுகொண்டேன்'' என்று மொழிந்தருள்வார்-

இன்று வறிகின்றே னல்லேன், இருநிலத்தைச்
சென்றுங்களந்த திருவடியை,—அன்று
கருக்கோட்டி யுட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்,
திருக்கோட்டி யெந்தை திறம்.

—இரண்டாந்திருவந்தாதி-87

''திருக்கோட்டியூரென்னும் திவ்வியத் திருத்தலத்தில் அருள் நல்கும் என் அப்பனை திருமாலின் ஆற்றல் மிக்கதான வியத்தகு செயல்களை நான் இன்று தான் அறிகின்றேன் என்பதில்லை.-பின் எக்காலத்தில் என்று வினவுதிரேல் விளம்புவேன் கேண்மின் இம்மாபெரும் நிலஉலகினை இருந்த இடமெல்லாம் சிறிதளவும் விடாமல் பரவிச்சென்று அளந்து தனதாக்கிக் கொண்ட என் அப்பன் உலகளந்த உத்தமனின் திருவடிகளை, நான் பிறப்பதற்கு முன்னமேயே கருப்பையில் படுத்துக்கிடந்த போழ்திலேயே கைகூப்பி வணங்கிய நான் என் எந்தையின் இன்னருள் நல்கும் இயல்பினைக் கண்டறிந்தவனுயுள்ளேன்'' என்று தாம் கருவிலே திருவு பெற்றுத் திகழ்ந்திருப்பதைப் பேசுகின்றார்.

மாமல்லபுரத்து மாமுனிவரான இவர்தம் அருளுரைகள் மற்றும் சில-

ஸ்ரீமந்நாராயணனுடைய, மந்திரங்களாகவே வழங்குகின்ற ஆயிரம் திருநாமங்களையும், மற்றுமுள்ள அவனது பெயர்களையும்,அறநூல்களின் அறிவால் பொருள் விளங்குமாறு அறிந்து தெளிந்து. அந்தந்த இடங்களுக்கு ஏற்ப, சொல்லித் துதித்தேத்தி வந்தோமாகில், நம்முடைய வணக்கத்திற்குரிய இமையோர் தலைவனை நாராயணனின் இனிய இயல்பானது, பரமபதத்துக்கு அணிகலனுய்த் தோன்றுபவர்களான நித்திய சூரிகளைப்போலாக்கும் தன்மையதாம்.-திருநாரணனின்ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லித்துதித்திடும் பக்தர்கள் திருவைகுந்தத்தில் அவ்வெம்பெருமானின் திருவடிநிழலில் வாழும் பேறு வாய்க்கப்பெறுவர் என்னும் கருத்தில் அருளிச்செய்கிருர்-

தம் முன்னவரின் கருத்தினையொட்டியே ஓர் பாசுரம் அருள்வர்-

அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர்கொண்டு, ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே,— அறிந்தவன்தன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே,
காரோத வண்ணன் கழல்.

—இரண்டாந்திருவந்தாதி—6

முதல் திருவந்தாதி 47-ம் பாசுரத்துடன் இப்பாசுரம் ஒப்பு நோக்கற்பாலது பொய்கையார் களிறுகாத்த கண்ணனின் கழல் காண்பர் என்பார் பூதத்தார் கார்வண்ணத்திருமேனிய னின் கழல் காண்பர் என்று பேசுவார்.

நரக பயம் நமக்கு இல்லையென்பதை இம்மாமுனிவரும் உரைப்பார்-பெருமானிடம்பக்திபண்ணி பணிந்தேத்தபக்தர்கள் நாம்-இருக்கின்றோம் சிந்தனை செய்து தெளிவு பெறுவதற்கு உள்ளமும் உடலினுள்ளே இருக்கின்றது. பெருமானை அருச் சித்து வழிபட்டு வணங்கி ஏத்த தாமரைப்பூவும் உளது. வாயி னுல் பாடித்துதித்துதிடஇமும் காலமும் இருக்கின்றன. திரு மாமகள் ஆதரிக்கும் பெருமான் திருமாலின் திருவடியிணைகளை விரும்பி ஏற்க சென்னியை-தலையை-பெற்றுள்ளோம். இந்நிலை யினை ஆராய்ந்தால் நாம் கொடிய நரகத்துன்பத்திற்காட் படுவோம் என்பது இல்லையென்பதேயாம்.

திருமாலை விளித்துத் தம்உள்ளம் மகிழ்ந்து திகழ்வதைப் பேசுவார்- அலர்மேல்மங்கையுறை மார்பா! ஸ்ரீநிவாஸா! உன்னிடம் ஈடுபட்டு என்மனம் களிப்புற்றது. மற்றும் பேசும் கருவியான எனது வாயும் உனது திருவடிகளையே போற்றிப் பாடி மகிழ்வுற்றது. எனது உடம்பும் உன்னையும் உன்னுடைய பக்தர்களையும் சூழ்ந்தவண்ணமிருந்து, பிறர் பார்த்து "இது என்ன பேய்த்தனம் என்று சொல்லுவர்" என்பதையும் பொருட்படுத்தாமல் துணிவு கொண்டு, தீப்பிழம்பை வீசிடும் திருச்சக்கரமென்ன,உன்றன்திருக்கையில் விளங்கும் வலம்புரிச் சங்கம் பாஞ்சசன்னியமென்ன-அவை போன்றவற்றை வாய் பாடிக்கொண்டிருப்பதால் கூத்தாடி ஆனந்த மெய்தியது.

தாமரையாள் மார்பன் மாதவன்பேர் ஓதுவதே ஓதப்படும் மறைகளின் சுருங்கிய பொருளாம் என்று மொழிவார்-

முயற்சியேதுமின்றி பலனை மட்டும் விழையும் உலகீரே! அனைத்து மறைகளின் சிறந்துயர்ந்ததான, தத்துவமான உட்பொருளாவது திருமாலவனின் திருநாமங்களையே ஓதிக் கொண்டிருப்பதாம், இதன் சிறப்பியல்பினை அறிந்து தெளி வீராக. ஓதப்படும் வேதங்களை, ஓதும் முறையில் கற்கும் திறன் உங்களுக்கு உண்டாகில அவ்வாறு கற்று ஓதுவதும் நல்ல தேயாம். அவ்வாற்றல் பெற்றுள்ளீரல்லீரேல் அதற்கென வருந்தவேண்டா. திருமாலின் புகழ்பாடி, அவன் பெயர்களை ஓதுவதே மறைகளின் சுருங்கிய பொருளாம்.

''நிகரில்புகழோனை காயாம்பூமேனியனான பெருமானை நான் வணங்கி ஏத்துவது போல், நீங்களும் அவ்வெம்பெரு மானையே ஏத்தித்தொழுதுய்ந்திடுவீர்'' என்று உலகோர்க்கு உணர்த்துகின்றார்-

என்றென்றும் எக்காலத்தும் இளமைக் கோலத்துடனேயே திகழும் இளமங்கையான பிராட்டியெனும் திருமாமகள் நிலை யாக இருந்து அன்னைக்கும் மேலாக அருளும் தெய்வமாகத் திகழ்கின்றனள். ஆகையால்-உலகோரே!-நீங்கள் வாயினால் பாடித்துதித்திடும் தொழிலை தவருமல் கொள்வீராக. நான்கு திக்கிலும் உள்ள மக்களே! கேட்பீராக. நாமும், உரிமையை முன்னிட்டுக்கொண்டு, நீண்டும், அகன்றும் விசாலமாக விளங்கும் திருக்கைகளையுடைய என் அப்பனான திருமாலின் திருவடியிணைகளையும் திருநாமங்களையும் புகழா நிற்பவரா யுள்ளோம்.

தாம்அருளிய இரண்டாந்திருவந்தாதியில் முதற்பாசுரத் தில் தன்னை ஞானத்தமிழ் வல்லவனாக விளம்புவார்-

''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா-நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்-''

என்று ஞானச்சுடர் விளக்கேற்றி அவ்வொளியில் நாரணனைக் கண்டு களிப்புற்றேன் என்றியம்புகின்றார்.

தன்னை ஓர்பெருந்தமிழன்-நற்றமிழ்ப்புலவன்-என்று பேசுவார்.

என் இறைவனே! சுவாமியே! ஏழு பிறப்புக்களிலும், எல்லாக்காலங்களிலும் உன்றன் இணையடி குறித்துத்தவமியற்றியவனாவேன். இப்பொழுதும் தவமுடையவனுயுள்ளேன். ஒன்றோடொன்று ஒத்து இணைந்திருக்கும் உன்றன் திருவடிகட்கெனவே பெருமைபொருந்திய தமிழ்மொழியிலான நன்மை பயக்கும் பாட்டுக்களைப்பாடியுள்ளேன். பெருமையும், மாண்பும் மிகுந்த தமிழனுய்-தமிழ் பேரறிஞனாய் -மிகமிக நல்லவனுயுள்ளேன்-உரியபாசுரம்-

யானே தவஞ்செய்தே னேழ்பிறப்பு மெப்பொழுதும்,
யானே தவமுடையே னெம்பெருமான் - யானே
இருந்தமிழ் நன்மாலை யிணையடிக்கே சொன்னேன்,
பெருந்தமிழன் நல்லேன் பெரிது.

—இரண்டாந்திருவந்தாதி-74

கார்வண்ணன் கண்ணபிரான் கழலிணை சரணம்

பொய்கையார் - பூதத்தார் பொற்கழல் போற்றி!

பாட்டுக்குரிய பழையவர்-முதலாழ்வார்கள் பாதங்களே தஞ்சம்.

செல்வநாரணு! செல்வநாரணு!! செல்வநாரணு!!!





ஸ்ரீ:

கண்ணன் எம்பெருமானின்
கழலிணை போற்றுவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## உண்ணா நாள்

மலர்மேல் மங்கை மணாளன் திருமாலவனிடத்தில் பக்தி பூண்டு, அந்த பக்தியிலே ஆழங்கால் பட்டு அனுபவித்து ஆனந்த மெய்திய ஆழ்வார்கள், தங்கள் மனத்துறை தெய்வ மான தேவாதி தேவன் மாதவனை அல்லும் பகலும் நினைந்து பரவியேத்திப் போற்றித்தொழுவதையே பொழுது போக்காகக் கொண்டிருந்த மாமுனிவர்களாய்த் திகழ்ந்தனர். அவர்கள் தங்கள் தெய்வத்தின் பெயர் சொல்லிப்போற்றுவதையே உண்ணும் உணவாகக் கருதி வந்தனர். இதனை

"உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும்எல்லாம்-
கண்ணன், எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர்மல்கி,
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக் கவனூர் வினவி,
திண்ணமென்னிள மான்புகு மூர்திருக் கோளூரே"

என்னும், வேதப்பசுந்தமிழ்ப்பாசுரத்தில் தென் குருகைப் பிரான், தன்னைத்தலைவியாகக்கருதி உண்ணும் உணவு, குடிக்கும் நீர், உணவுக்குப்பின் உட்கொள்ளும் வெற்றிலை ஆகியன யாவுமே தனக்குத்தன் தலைவனான கண்ணனே என்றுயம்புவார். ஆழ்வார்கள்,பெருமான்,பெயரைச்சொல்லாத நாள்கள் தங்களுக்கு பட்டினி நாள்களாகும் என்று கருதியிருந் தனர். நம்மாழ்வார், பொலிந்து நின்ற பிரான் ஆதிப்பிரானின் தீர்த்தம் மட்டுமே பருகி உயிர் வாழ்ந்திருந்ததாக, அவரது வைபவ சரிதையினின்றும் உணர்கிறோம்.

பெருமானுறையும் திருத்தலத்தைச் சொல்லாதவர்கட்கு உணவளிக்காதீர்,அவர்களுக்கு அளிக்கும் உணவை நாய்க்கிடு வீராக என்று பெருமானின் சிறப்பினையும், பெயர் சொல்வ தால் பெறும் பேற்றினையும் வலியுறுத்தி விளம்புவார் மண்டங் குடிவந்த தொண்டரடிப்பொடிகள்-... அண்டர்கோன் அமரும் சோலை அணி திருவரங்கமென்னா, மிண்டர் பாய்ந்துண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கிடுமின் நீரே.

திருமாலிருஞ்சோலை அழகரைப் போற்றிய பதிகத்தில் அத்தலத்தினிற்சென்று அவ்வழகனைச் சேவித்து வணங்கி வலம் வருவதும், அம்மலையினை மனத்தால் நினைவதும், தொழுதேத்துவதுமே நாம் எடுத்த மானிடப்பிறவி பயன்பெற் றுய்வதற்குரிய சிறந்துயர்ந்த வழி எனவும், திருவேங்கடத் திருமாமலையில் எழில்கொள் சோதியாய்த்திகழும் அலர்மேல் மங்கையுறை மார்பன் திருவேங்கட மாலவனுக்கு அவ்வெம் பெருமானை அணுகியிருந்து எல்லாக்காலங்களிலும் இடை வீடின்றி, அவனுகக்கும் வண்ணம் அங்ககப்பணி, நாம் செய்ய வேண்டும் என்று நம்மெல்லோர்க்கும் நல்லுரை நவில்கின்றார் நம்மாழ்வார்.

''எண்ணுதற்கரியவனும், செங்கண் திருமுகத்துடன் திகழ் பவனும்,கரிய திருமேனி படைத்துள்ளவனும் வெகுதொலைவில் இருப்பவனும்-நாம் மனமுருகி வேண்டித்துதித்துப்போற்றி வழிபட்டு வணங்குவோமாகில் நமக்கு மிக-மிக அண்மையில் வந்து அருள்பவனும்-,ஆயிரம் பேருடைய பிரானுமான பரமனை வணங்கித்தொழும் அடியவர்கள், தீவினைகளால் துன்புற மாட்டார்கள், கடும் நரகத்தையும் நண்ணார். தினையளவுக்கும் கூட தீநெறியில் செல்லமாட்டார்கள்'' என்பது பொய்கையார் புகன்ற பொன்னுரை-பொய்யாமொழி-

வினையால் அடர்ப்படார்; வெந்நரகில் சேரார்,
தினையேனும் தீக்கதிக்கட் செல்லார்,-நினைதற்
கரியானைச் சேயானை, ஆயிரம்பேர்ச் செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்.

''பிறவிப்பெருங்கடலுள் உழன்று மதிமயக்கம் பெற்றுள்ள மக்களே! பற்பல சாஸ்திரங்களால்-அறநூல்களால் ஆராய்ந் தறியப்பட்டவனும், கடல்களால் சூழ்ந்து தோன்றும் இப்பேர வனியை தன்தாளால் அளந்தஅண்ணலின் செவ்விய தாமரைத் திருவடிகளை முன்னமேயே வணங்கி ஏத்தித்தொழ முயல் வீராகில் நீங்கள் பிற்காலத்தில் அல்லல் விளைத்திடும் நரகத் துன்பத்தினின்றும் விடுபட்டு இன்ப வாழ்வெய்திடுவீர்'' என்று புகல்வார் பூதத்தாழ்வார்-

பின்னால் அருநரகம் சேராமல் பேதுறுவீர்!,
முன்னால் வணங்க முயல்மினோ,—பன்னூல்
அளந்தானைக் கார்க்கடல்சூழ் ஞாலத்தை, எல்லாம்
அளந்தான் அவன்சே வடி.

''மலையின் நடுவிலே நின்று கொண்டும், புனலாடியும், ஐந்து விதமான தீவளர்த்தும் அத்தீகளின் மையத்திலே நின்று நீங்கள் தவம் இயற்றி வருந்த வேண்டியதில்லை. திருவெஃகா என்னும் திருத்தலத்தை விரும்பி அங்கிருந்து அருள் நல்கும் நம்பெருமானை, உண்மையுரைப்படி மலர்கள் தூவி அருச்சித்து கைகளால் தொழுது வணங்கிடுவீராகில் உங்கள் தீவினைகள் யாவும் குலைந்து அழிந்துபடும்'' என்று பெருமானை மலர் தூவித்தொழுவதால் பெறும் பயன்பற்றிப் பகர்வர் மாமயிலை மாமுனிவர் பேயாழ்வார்-

பொருப்பிடையே, நின்றும் புனல்குளித்தும், ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர்வேண்டா,—விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்தூய்க் கைதொழுதால்,
அஃகாவே தீவினைகள் ஆய்ந்து.

பொன்னலான மகரக்குழைகளை அணிந்துள்ளவனும், அனைத்துக்கும் ஆதிகாரணனாயிருப்பவனும், நம்மெல்லோர்க்கும் நாதனாய் நாயகனாய் இருப்பவனும், நன்மைகளையே நல்குபவனுமான ஸ்ரீமந்நாரயணனை, நமது ஏழ்பிறவிகளையும் அழித்திடும் பெயர் பெற்றுத்திகழும் திருமாலை, போதுகளை, மலர்ந்த பூக்களை அவன் தன் திருவடிகளில் தூவி அவன் பெயர் சொல்லி இறைஞ்சி வேண்டுவதே நாம் உலகியல் துன்பங்களினின்றும் மீண்டு பேரின்ப வீடு பெறும் வழியாகும்'' என்று மொழிவர் திருமழிசைப்பிரான்-

போதான இட்டிறைஞ்சி ஏத்துமினோ, பொன்மகரக்
காதானை யாதிப்பெருமானை, நாதானை
நல்லானை நாரணனை நம்ஏழ் பிறப்பறுக்கும்
சொல்லானை, சொல்லுவதே சூது.

உலகளந்த உம்பர் கோமானின் பேர்கள் ஆயிரங்களுமே பேசிப்பயன் பெற்றுய்ந்திடுவீர் என்று பேசுவார் நம்பரகாலன்.

மேலும், ஊழிக்காலத்தில் மண்ணுலகம், விண்ணுலகம். வானவர், தானவர் யாவரையும் தன்திருவயிற்றில் கொண்டு பாதுகாத்தவனும், திருக்கண்ணமங்கையை தனதுறை விடமாகக் கொண்டுள்ள கொண்டல் வண்ணனை தன்மனத்தே நினையாத மானிடத்தைப்பற்றி நாம் எண்ணுமலிருப்பதே நமக்கு இனிமையென்றும், பெருமானைக்காணுத கண்கள் கண்களல்ல, தொண்டர்க்கினியனை தோளாத மாமணி வண்ணனைப்பற்றிய மொழிகளைக் கேட்காத செவிகள் பயனற்றவை, தூயனும் தூயமறைப்பொருளும், தென்னுலியில் மன்னியிருப்பவனுமான மாயனைப்போற்றி மொழியாதவாய் (மொழி) வீணனது, பகைமை கொண்டிருந்த இரணியனை உகிரால் கீண்ட அரிமானிடமாகிய நறுந்துழாய் மார்பனைப் பாடாத பாட்டு பயனற்றது,மைந்நிறத்த கடல்வண்ணத்தனும், மணிநிற மேனியனும்,மாமுகில் நிறத்தனும், குவளைப்பூவையும் காயாம்பூவையும் ஒத்த திருமேனியனும் திருமெய்யமெனும் திருமலையில் உறைந்திருந்தருள் நல்குபவனும், உண்மைப் பொருளாய் விளங்குகின்றவனுமான விமலனை, சங்கைக் கையினில் தாங்கியிருப்பவனை கைகூப்பித் தொழாத கைகள் கைகளல்ல.தேன்பெருக்குகின்ற திருத்துழாயையும்,அரவிந்தம் முதலான பூக்களையும் கண்ணுற்ற காலை, இவை பன்றியாய் வந்து பார்மகளின் துயர்தீர்த்த தீர்த்தனின் பொன்னுர் திருவடி களில் அருச்சிக்கத் தகுந்தவை என்று நினையாதாரின் மனதை உள்ளமாகக் கருதோம், கடல், காக்கணம்பூ, காயாம்பூ ஆகிய வற்றைப் போன்ற வண்ணத்திருமேனியனான திருமாலை, அன்பினோடும் ஆர்வத்தோடும் எல்லா நாள்களிலும் சுனையில் மலர்ந்த மலரினைக்கொண்டு அருச்சித்து, அவ்வெம்பெரு மானுக்கே நாம் தொண்டன் என்று நினைந்துருகாதாரின் நெஞ்சம் நெஞ்சமல்ல, மணம் வீசும் கூந்தலைக் கொண்டுள்ள ஆய்ச்சியர் உயரத்தில் உறியில் வைத்த வெண்ணெயை, கண்ணனாய் வந்த போழ்து சிறு பிராயத்திலே மிக விரும்பி உண்டு மகிழ்ந்த செங்கண் திருமுகத்து நெடிய நெடுமாலை சிந்திந்தறியாதவர்கள் என்றும் எந்நாள்களிலும் அறியாதவர் களாகவே விளங்குவர், வண்டுகள் ரீங்காரமிட்டுத்திரிவதும் தேன் பெருகுவதுமான சோலைகளைக் கொண்டுள்ள திருமா லிருஞ்சோலையில் அழகனாய் நின்று அருள்பவனும், தாமரை

மலருக்கிணையான விசாலமானஅகன்ற கண்களைக்கொண்டுள்ள நப்பின்னை நங்கையின் கைத்தலம் பற்றுவான் பொருட்டு ஏழெருதுகளை வென்று அடர்த்து வீழ்த்திய கண்ணனுக்கு அடிமையாகக் கருதுபவரைத் தவிர்த்துப் பிறிதொருவரை மானிடராகக் கருதேன் - என்ற வாறாக ஐம்பொறிகளும், கைகளும், நெஞ்சமும் எம்பெருமானை வணங்கி நினைந்து வழிபடுவதற்கென்றே, அப்பரமனால் நமக்கு அருளப்பட்டவை என்பதை வலியுறுத்தி மொழிகின்றார்.

விட்டு சித்தரென்றும், பட்டநாதன் என்றும் போற்றப் படும் பெரியாழ்வார், குழந்தைகளுக்கு, கேசவன் பெயரான, செங்கெணெடுமால், சிரீதரா, வானுடைமாதவா!,கோவிந்தா!, குலமுடைக்கோவிந்தா!சாடிறப்பாய்ந்த தலைவா!,தாமோதரா!, கண்ணுக்கினிய கருமுகில் வண்ணா! செம்பெருந்தாமரைக் கண்ணா!, நாராயணா! முகில் வண்ணா! சீரணிமாலே! என்ற வாறாகப் பெயரிட்டு அழைத்திடுவீராகில் நரகத்தின் நலிவி னின்றும் விடுபட்டுப்பெருமானின் திருவருள் துணைகொண்டு இன்புற்று வாழ்ந்திடுவீர் என்று அறிவுரை கூறுவார். மேலும் மங்கிய மானிடசாதியின் அவத்தப் பெயரிடாமல் புருடோத்த மானான பூமேல் மாது வாழ்மார்பன் பெயரிட்டுப்புனிதம் பெற்றுய்ந்திடுவீர் என்றும், பிச்சை எடுக்கும் நிலையிருப்பினும் எம்பிரான் திருநாமமே நச்சுமின் என்றும் மொழிகின்றார்.

இவ்வாழ்வார் பாண்டி நாட்டுத்திருப்பதிகளிலொன்றான திருக்கோட்டியூருறை எம்பெருமானை இருபத்திரண்டு பாசுரங் களில் பாடிப்பரவுகின்றார். இத்தலத்துறை பெருமானின் திருநாமம் ஸௌம்ய நாராயணப்பெருமாள். பெருமாள் கீழ்த்திசை நோக்கி சயன கோலத்தில் சேவை தந்தருள்வர். திருமாமகள் நாச்சியார். அஷ்டாங்க விமானம், பொய்கை-குளம்-தேவபுஷ்கரிணி. இந்திரனுக்கும் கதம்பமுனிவருக்கும் பெருமாள் நேரிடையாகக் காட்சியளித்ததாகத் தலவரலாறு, இங்குகண்ணனை நடனகோலத்திலும்.சிங்கப்பிரானின் இரண்டு மூர்த்திகளை இரணியனை துரத்திப்பிடிப்பது போலவும், அவ் வசுரனின் உரம்பிளப்பதுபோலவும் சேவிக்கலாம்,இத்தலத்தில் தான் எம்பெருமானார், திருக்கோட்டியூர் நம்பியிடம் மூலமாகிய எட்டெழுத்தெனும் திருமந்திரத்தின் உட்பொருளை உபதேச

மாகப்பெற்று, குருவின் ஆணையை மீறி எல்லோருக்கும் உபதேசித்ததாக வரலாறு. ஸ்ரீ ராமானுஜர் மூர்த்தியும் கோபுரத்தின் மேல் அமைக்கப்பெற்றுள்ளது. இத்தலத்து இறைவனை, மங்கைமன் கலிகன்றியும், பூதம்-பேயாழ்வாரும், மழிசையர் கோனும் துதித்தேத்திப்புகழ்ந்து பாசுரங்கள் அருளியுள்ளனர்.

பெரியாழ்வார் இவ்வெம்பெருமானைப்பாடும் ''நாவகாரியம்'' என்னும் பதிகத்தில், ''திருக்கோட்டியூர் வீதியிலிருக்கும் இல்லங்களின் திண்ணைகளில் அழகு மிகுந்த மணிகள் பதிக்கப்பெற்றுள்ளன. மரகதமணியும் அமைக்கப் பட்டிருக்கிறது. திண்ணைகள் முகத்தின் நிழல் தெரியுமாறு பள-பளவென்று காண்கின்றன. அத்தலத்தின் கண் அருள் நல்கும் திருமாலவன் திருநாமங்களைச் சொல்லி எண்ணுவதற் கெனவே, அவ்வெம்பெருமான் திருவருளால் தமக்குக்கிடைத்த விரல்களால் எண்ணிக்கொண்டு அப்புனிதனின் பெயரை நொடிப்பொழுதளவும் சொல்லாமல், ஊத்தை வாயில்உண்ணும் சோற்றுருண்டைகளைத்தள்ளிப் பயனின்றி காலங்கடத்துகின்ற னரே'' என்று அங்கலாய்க்கின்றார்.—

வண்ணநன்மணி யும்மரகத மும்அழுத்தி நிழலெழும்
திண்ணைசூழ்,திக் கோட்டியூர்த்திரு மாலவன் திருநாமங்கள்,
எண்ணக்கண்ட விரல்களால்இறைப் பொழுதுமெண்ணகிலாது போய்,
உண்ணக்கண்டதம் ஊத்தைவாய்க்குக் கவளமும் உந்துகின்றார்களே.

தான் உண்ணுநாள் எது என்பதை பெருமானை, ''கண்ணா!'' என்று விளித்து அவனுக்கு அறிவிக்கின்றார்-

கண்ணா! நான்முகனைப்படைத்தவனே! அனைத்துக்கும் காரணப்பொருளாய் இருக்கும் இனியனே! கரியமேனியனே! உனக்கே அடியனை, தொண்டனை நான், உடல்வளர்ப்புக் கென உணவு உட்கொள்ளாதநாளில் எனக்குப்பசி என்பதில்லை. -பின் எந்தநாள் உமக்குப்பசி என்று வினவுகின்றான் ஆழ்வார் உரைகேட்டகேடில்விழுப்புகழ்க்கேசவனை கண்ணன்-ஆழ்வார் விடையிறுக்கின்றார்-எல்லாநாள்களிலும் நான் தவறுதலின்றி கவனமாகவே, இரிக், யஜுர், ஸாமம் ஆகிய வேதமென்னும் மலர்கொண்டு ''நமோநாரணா'' என்று சொல்லிய வண்ணம்

## உண்ணா நாள்

உனது திருவடிகளைப்போற்றி வணங்குவதற்கு, என்றாவது ஒருநாளில் இடையூறு நேரிடுமாகில்,-தடைஏற்பட்டால்,-அந்த ஒரு நாளே எனக்கு பட்டினி நாளாகும்.—

கண்ணா! நான்முக னைப்படைத் தானே!
காரணா!கரி யாய்!அடி யேன்நான்,
உண்ணா நாள்பசி யாவதொன் றில்லை;
ஓவாதே "நமோ நாரணா!" என்று

எண்ணா நாளும் இருக்கெசுச் சாம
வேத நாண்மலர் கொண்டுன பாதம்
நண்ணா நாள், அவை தத்துறு மாகில்
அன்றெ னக்கவை பட்டினி நாளே

இவ்விதமாக ஆழ்வார்கள், பெருமானிடம் தங்களுக்குள்ள பக்தி மேம்பாட்டினையும்,பெருமான் பால்பக்தி கொண்டு அவன் பெயர் சொல்வதால் பெறும் பயன்பற்றியும் உலகினர் உய்தற் பொருட்டு பெருங்கருணையுள்ளத்துடன் அருளியுள்ளனர். நாம், ஆழ்வார்கள் அருளுரை கொண்டு, ஆதியஞ்சோதியான அமலனின் அடியிணை தொழுது, அவன் பேர்பாடி அவனதின் னருள் பெற்றுய்ந்திடுவோமாக.

ஆழ்வார்கள், ஆசார்யர்கள் திருவடி சரணம்.
திருவரங்கநாச்சியார் திருவரங்கன் திருத்தாளிணை சரணம்.



செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!





ஸ்ரீ:

குறைவிலாப்பெருமான்
பேராயிரம் பேசுவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## கொள்ளக் குறைவிலன்

ஆழ்வார்கள் பன்னிருவரில், குருகேசனென்றும், திருக் குருகைப்பிரானென்றும், வகுளாபரணப்பெருமாள் என்றும், சடகோபன் என்றும் இன்னும்பல பெயர்களுடனும் பெருஞ் சிறப்புயர்வுடனும் விளங்கும் நம்மாழ்வாரை வைணவ உலகம் பிரபன்னஜன ஸந்தான கூடஸ்தர் என்று போற்றி வழங்கும் நம் ஆசார்யர், தண் பொருநல் வரும் குருகேசன், அணிகுருகை நகர்முனிவர், குருகையில் வந்த குலபதி, எழிற்குருகை வருமாரு-என்றவாறாகப் போற்றி ஏத்துவர் ''எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு உலகில் வரும் வரும் சடகோபனை...'' என்று மொழிவர் திருவரங்கத்தமுதனார் இராமானுசநூற்றந்தாதியில். நம்மாழ்வார்அருளிய பாசுரங்கள் மறைகளின் பொருளாகப் போற்றப்படுபவை. உலக மக்களுக்கு இன்பம் பயப்பனவாகவும், அனைத்துப் பொருள்களை தம் மிடத்தே பெற்றுள்ளவை எனவும், ஆயிரம் பிரிவுகளைக் கொண்டுள்ள உபநிடதங்களின் பொருள்களை விளக்குபவை என்றும், திராவிட மொழியான தமிழ்வேதப் பெருங்கடல் என்றும் திருவாய்மொழி பிரபந்தத்தின் தனியன்-சிறப்புப்-பாயிரப்-பரடல் மூலம் அறியப்படுகின்றது. திருவாய்மொழியை சாமவேதசாரம் என்றும் பகவத்விஷயம் எனவும் போற்றி மொழிவது மரபு.

திருவாய்மொழி முதற்பதிகத்தில் பரமன் எங்கெங்கும் பரந்து கரந்துறைந்தருள்வதை மொழிவார். ''உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன், பரந்த தண்பரவையுள் நீர் தொறும் பரந்துளன்'' என்னும் தொடர்களால், தான் விரும்பிப்போற்றியுகந்து வழிபடும் உத்தமனை திருமாமகள் கேள்வன் ஸ்ரீமந்நாராயணன் எங்கும் பரந்து உறைவதை உரைப்பார்.

என்னையாட்கொண்ட ஈசன் இன்னமுதத் திருமகள்

மார்பனின் பேராயிரங்களில் ஒன்று சொன்னாலும் நோய்கள், வினைகள் யாவும் தீர்ந்து நலம் பெறலாம் என்று பேசுவார்—

ஊரும்புள் கொடியும்அஃதே உலகெல்லாம் உண்டுமிழ்ந்தான்,
சேரும்தண் ணனந்தபுரம் சிக்கெனப் புகுதிராகில்,
தீரும்நோய் வினைகள் எல்லாம் திண்ணம் நாம் அறியச்சொன்னோம்,
பேரும்ஓ ராயிரத்துள் ஒன்று நீர் பேசுமினே.

புள்ளரசனை ஊர்தியாகவும், கொடியிலும் பெற்றுள்ளவனும்,உலகனைத்தையும் ஊழிக்காலத்தே உட்கொண்டு தன் திருமணிவயிற்றில் வைத்துப்பாதுகாத்திருந்து, மீண்டும் படைப்புக்காலத்தே உமிழ்ந்து அருள் செய்தவனுமான பேராயிரத்தான் சேர்ந்து அருள் செய்து வாழுமிடம் தண்மை பொருந்திய திருவனந்தபுரம் என்னும் திவ்வியத்திருத்தலமாகும். உலகோரே! நீங்கள் விரைவாகவே அத்திருப்பதியையடைந்து. அத்தலத்துறை, அனந்த பற்பநாபனென்னும் பரமனின் ஆயிரம் திருப்பெயர்களுள் ஒன்றையேனும் பக்தியுடனும் பேரார்வத்துடனும் மொழிந்திடுவீராகில், உங்களுடைய தீவினைகள் என்னும் நோய்கள் அனைத்தும் தீர்ந்து அகன்றொழியும்.இது உறுதி என்று உங்களுக்கு அறிந்துகொள்ளும் வண்ணம் நாம் நவின்றோம். உங்கள் நன்மைக்கான இதனைக் கடைப்பிடித்துப் பயனடைந்துய்ந்திடுவீராக.

வினைகள் யாவும் மாய்ந்தறுதற்குரிய உபாயத்தை உரைக்கின்றார்-

நாம்உமக் கறியச்சொன்ன நாள்களும் நணியவான,
சேமம்நன் குடைத்துக்கண்டீர் செறிபொழில் அனந்தபுரம்,
தூமநல் விரைமலர்கள் துவளற ஆய்ந்து கொண்டு
வாமனன் அடிக்கென்றேத்த மாய்ந்தறும் வினைகள்தாமே.

நாம், உங்களுக்கு நல்ல முறையில் விளங்குமாறு கூறிய நாள்கள் நெருங்கினவாயின. நீவீர் வீணே காலந்தாழ்த்தாதீர். என்னப்பன் அருள் நல்கிக்கொண்டிருக்கும் அனந்தபுரம், அடர்ந்த சோலைகளையே அணியெனக்கொண்டு திகழ்வது. அந்த திவ்வியத்தலம் அனைத்து நலங்களையும் நல்கும் தன்மை

பெற்று விளங்குவது. நீங்கள் நல்ல நறுமணம் கமழும் புகையை யும், மணம் மிகுந்துள்ளதும், குறையற்றவையுமான மலர்களை ஆய்ந்தெடுத்துக் கொண்டு வாமனனாய் வந்த அனந்தபுர நகரெந்தையின் திருத்தாளிணைகளில் அருச்சித்து வணங்கி வழிபட்டீர்களாகில், உங்கள் தீவினைகள் யாவும் அறவே அகன்றொழியும்.

மனைவி மக்களும், சுற்றமும், நட்பும் நம்மிடம் செல்வம் இருக்கும்வரை மட்டுமே சூழ்ந்திருப்பர். வறுமையால் வாடி இன்னலுறும்போது சுற்றத்தினரோ, நட்பினரோ உதவ மாட்டிலர். நமக்கு என்றென்றும் சுற்றமாகவும் நண்பனாகவும் இருந்தருள்பவன் ''இராமனே, கண்ணனே'' என்றியம்புவார்-

துணையும் சார்வும் ஆகுவார் போல் சுற்றத் தவர்பிறரும்,
அணைய வந்த ஆக்க முண்டேல் அட்டைகள் போல்சுவைப்பர்,
கணையொன் றாலே யேழ் மரமும் எய்தஎங் கார்முகிலை.
புணையென் றுய்யப்போக லல்லால் இல்லைகண் டீர்பொருளே.

நம்மிடம் செல்வம் இருக்குமாகில், உதவுவோர் போலவும் ஆதரவளிப்போர் போலவும் நம்முடனேயே இணைபிரியாம லிருந்து, அட்டைப்பூச்சியானது உடலிலுள்ள குருதியை உறிஞ்சிச் சுவைப்பது போன்று, உறவினரும் நண்பர்களும் நமது செல்வத்தால் இன்பம் துய்த்தவண்ணமிருப்பர். பொருள் நம்மிடமில்லையாகில் அனைவரும் அகன்று சென்றிடுவர். ஆகவே உலகீரே! அன்று, சுக்கிரீவனுக்குத்தன் தனிப்பெரும் பேராற்றலை காண்பிப்பான் பொருட்டு வாளி ஒன்றைக் கொண்டே மராமரம் ஏழினையும் துளைபடச்செய்தவனை, மேக வண்ணமேனியனை ஸ்ரீராமபிரானை இப்பிறவிப்பெருங்கடலி னின்றும் கரையேறுவதற்குரிய தெப்பமாக நீங்கள்பெறவில்லை யாகில் உய்வைப்பெற வேறுவழியில்லை. கருணைக்கடலான ஸ்ரீராமபிரானே நமக்குத் துணைநின்றருள்பவன்.

கண்ணனெம் பெருமானே நமக்குத் தஞ்சமளித் தருள்பவன் என்று அறுதியிட்டு அருள்கின்றார்.

யாது மில்லை மிக் கதனில் என்றென் றது கருதி,
காதுசெய்வான் கூதைசெய்து கடைமுறை வாழ்க் கையும்போம்,
மாது கிலின்கொ டிக்கொள் மாட வடமது ரைப்பிறந்த
தாதுசேர்தோள் கண்ணன் அல்லால் இல்லைகண் டீர்சரணே.

காதணி அணிந்து கொள்ள ஆசைப்படும் ஒருவன் பெரிதான காதணியை அணிந்தின்புறும் பேராசையினால் காதின்துளையை மேன்மேலும் பெரிதாக்கிஇறுதியில் காதறுந்து காதணிஅணியும் வாய்ப்பினையே இழந்து தவிப்பதைப்போன்று இதைவிட வேறு எதுவும் சிறந்தது இல்லையென்று பயனற்ற மாறுபாடான எண்ணங்கொண்டலைவதால், பெருமானின் திருவருளைப் பெற்றுய்ந்திடும் வாழ்க்கையும் வீணேகழிந் தொழியும். ஆகவே, உலகோரே! நாம் கூறுவதை உன்னி உணர்ந்து பயனெய்துவீராக- துணியாலான பெரிய கொடிகள் அசைந்தாடும்மாடமாளிகைகளால் சூழப்பெற்ற வடமதுரையிற் பிறந்தவனும், பூமாலைகள் சூடி அழகான தோள்களைப்பெற்றுத் திகழும் கண்ணபிரானைத்தவிர்த்து நமக்கு அடைக்கலமளித் தருளும் பெருமான் வேறொருவருமில்லையாம்.

உலகீரே! நாம் சொல்லப்புகின் விரோதமாகவே உங்களுக்குத் தோன்றும். இருப்பினும் உங்கள் நலன் கருதி உரைப்பேன். கேட்டுப்பயன்பெறுவீராக-

சொனனால் விரோதம்இது ஆகிலும் சொல்லுவன் கேண்மி னோ!
என்னாவில் இன்கவி யாரொரு வர்க்கும் கொடுக்கிலேன்,
தென்னு தெனாவென்று வண்டு முரல்திரு வேங்கடத்து,
என்னானை என்னப்பன் எம்பெரு மானுள னாகவே.

உலக மக்களே! நான் சொல்வது உங்களுக்கு விருப்ப மில்லாமல் பகைமையாகத் தோன்றலாம். இருப்பினும் உரைத் திடுவேன் கேட்பீராக. 'தென தென' வென்று வண்டுகள் ரீங்கார ஒலியெழுப்பிக்கொண்டு திகழும் சோலைகளால் சூழப் பெற்ற திருவேங்கடத்திருமலையில், எனக்கு ஆனைபோல் அழகாகக் காட்சி தந்தருள்பவனும், எனக்கு எந்தையாகவே இருந்து அருள்பவனும், எம்பெருமானுமான திருவேங்கடத் தெம்பெருமான் மன்னியிருந்து அருள்பவனாயிருக்கும் நிலையில்,

அவனொருவனைத் தவிர்த்து பிறரொருவரையும் நான் கவி புனைந்து போற்றுபவனல்லேன். என் நாவினில் தோன்றும் இன்கவிகொண்டு திருவேங்கட மாலவனையே போற்றி வாழ்த்துவன்.

பெருவள்ளலாயிருந்து அருளும் மணிவண்ணனையே பாடிப்பரவுவீர் புலவீரே! என்று புகல்கின்றார்.—

கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை,
வள்ளல் புகழ்ந்துநும் வாய்மை இழக்கும் புலவீர்காள்!,
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல் லாம்தரும் கோதில்,என்
வள்ளல் மணிவண்ணன் றன்னைக் கவிசொல்ல வம்மினோ!

புலவீரே! நீங்கள் இம்மண்ணுலக மக்களைப் போற்றிப் பாடிப்பெறும் பரிசில் பொருள்கள் குப்பையைக் கிளறினால் விளையும் புழுதிக்கிணையானது. அவற்றால் பயனேதுமில்லை எனக்கு வள்ளலாயிருந்து எல்லோர்க்கும் திருவருள் நல்கிக் காத்து வரும் கருணைக்கடலான, மணிவண்ணமேனியனான திருமங்கை மணாளன் எவ்வளவு புகழ்ந்தாலும் அத்தனைக்கும் உரிய உத்தமன்.அவன் குறைவிலாப்பெரும் புகழுக்கேற்றவன் அவன் குறையாதுமில்லாதவன். அவனே நாம் வேண்டுவன யாவற்றையும் அளித்தருளும் ஆற்றல் மிக்கவன் ஆகவே, நீங்கள் எம்பெருமானாகிய அம்மாமணிவண்ணனொருவனையே பாடிப்பரவ வந்திடுவீர்.

உங்கள் மனத்துறையும் தெய்வத்தைப் போற்றிப் பாடுவீராகிலும் அவை யாவும் நான் வணங்கும் திருமாலையே சென்றடையும் என்று மொழிகின்றார்-

வம்மின் புலவீர்!நும் மெய்வருத் திக்கை செய் துய்ம்மினோ,
இம்மன் னுலகினில் செல்வரிப் போதில்லை நோக்கினோம்,
நும்மின் கவிகொண்டு நும்நும்மிட் டாதெய்வம் ஏத்தினால்,
செம்மின் சுடர்முடி என்திரு மாலுக்குச் சேருமே

புலவர்காள்! நீங்கள் திருமாலைப்பாடிப்பரவ வருவீராக. நிலைத்திருக்கும் இவ்வுலகின்கண் செல்வர்கள் நீண்ட காலமாகவே இருந்து வருகின்றனர்,அவர்களும் அழிபவர் ஆவார்,

அவர்களால் பெறப்படும் செல்வமும் அழிந்து படுபவையே. ஆகவே நீங்கள் உங்கள் உடல் உழைப்பைப் பண்ணி பொருளீட்டி வாழ்க்கை நடத்துவீராக. இந்நிலையில் இருந்தவண்ணம், நீவீர் உங்கள் இனிய கவிதைகளைப் பாடி, உங்கள் மனத்துறை யும் தெய்வங்களையே பேற்றிப்புகழ்ந்திடுவீராயினும், அப்புகழ் கீதங்கள் யாவும், செம்பொன்னலான, சுடரொளி திகழும் திருமகுடத்தை அணிந்துள்ள என் திருமாலே சென்றடைவன வாகும். இது திண்ணம். இதில் ஐயமேதுமில்லையாம்.

இங்கு,

''ஆகாசாத் பதிதம் தோயம் யதாகச்சதி ஸாகரம்।
ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி॥''

என்னும் சுலோகம் இப்பாசுரத்துடன் ஒப்புநோக்கற் பாலது. பொருள்-வானினின்று பொழியும் மழைநீர் யாவும் ஆறுகளாகவும், ஓடைகளாகவும் பெருக்கெடுத்து இறுதியில் எவ்வாறு பெருங்கடலைச்சென்றடைகின்றதோ, அதே போன்று அனைத்து தெய்வங்களுக்கும் பண்ணப்படும் வணக்கங்கள் யாவும் கேடில் விழுப்புகழ் கேசவனையே சென்றடைகின்றன-

இதே கருத்தினை கீழ்வரும் பாசுரத்திலும் பகர்வார்-

இறுக்கும் இறையிறுத்துண்ண எவ்வுல குக்கும் தன்மூர்த்தி,
நிறுத்தினன் தெய்வங்க ளாக அத்தெய்வ நாயகன் றானே,
மறுத்திரு மார்வன் அவன்றன் பூதங்கள் கீதங்கள் பாடி,
வெறுப்பின்றி ஞாலத்து மிக்கார் மேவித் தொழுதுய்ம்மி னீரே.

நம்மாழ்வார் நலங்கழல் சரணம்.

மறுத்திருமார்வன் மலரடி சரணம்



செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

தேனார் கமலத்திருமகள்
நாதன் திருவடி போற்றுவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## பழமறையின் பொருள்

ஆழ்வார்கள் பதின்மரில் திருப்பாணாழ்வார் ஸ்ரீமந்நாராயணனின் ஸ்ரீவத்ஸாம்சம் என்பதாய் ஆழ்வார் வைபவம்மூலம் உணர்கிறோம். இம்மாமுனிவர் திருவரங்கப்பேரரசான ஸ்ரீரங்கநாதப்பெருமானைச் சேவித்து, 'அமலனாதிபிரான்' என்னும் பிரபந்தம் அருளி, இப்பாசுரங்களைப்பாடித்துதித்து, திருவரங்கனை அமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்னும் இறுதிப்பாசுரத்திற்கேற்ப திருவரங்கனின் எழிலார் திவ்வியத்திருமேனியில் சோதியுருவில் கலந்து விட்டார் என்பது வரலாறு. இவர் அருளிய பத்துப்பாசுரங்களும் மறையின் பொருளாகவே கருதப்படுகின்றன. முதல் மூன்று பாசுரங்களில் முறையே அ,உ,மஎன்னும்பிரணவத்தின் மூன்று எழுத்துக்களில் தொடங்குவார். ''சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த பாரியலும் புகழ்ப்பாண் பெருமாள்'' என்னும் தொடரால், திருவரங்கத்தமுதனார் இராமானுச நூற்றந்தாதியில் போற்றிப்புகழ்ந்து இயம்புவார்.

சுவாமி தேசிகனும் ''பாவளரும் தமிழ்மறையின் பயனே கொண்ட பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில்.......
....பாண்பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்....என்னும் தொடர்களால் இவ்வாழ்வார் இயற்றியருளிய அமலனாதிபிரான் பத்துப் பாசுரங்களும் தமிழ் மறையென்னும் திவ்வியப்பிரபந்தத்தின் சாரம் எனவும், தானாகவே தோன்றியனவும், தொடக்க கால மறியஇயலாததுமான மறைகளின்பொருளே எனவும் தெளிந்து போற்றுபவர்களாயுள்ளோம். மேலும் பாண்பெருமாள் அருளிய பத்துப்பாடல்களே நமக்குப்பற்றாகும் என்னும் பொருளில், ''ஆதிமறையென ஓங்கும் அரங்கத்துள்ளே அருளாரும் கடலைக்கண் டவனென் பாணன் ஓதியதோ ரிருநான்கு மிரண்டுமான ஒருபத்தும் பற்றாக உணர்ந்துரைத்தோம்'' என்று பேசுவார். மேலும் இப்பத்துப்பாசுரங்களின் பெருமையை ''நீதியறியாத நிலையறிவார்க்கெல்லாம் நிலையிதுவே என்று

நிலைநாடி நின்றோம்,வேதியர்தாம் விரித்துரைக்கும் விளைவுக் கெல்லாம் விதையாகு மிதுவென்று விளம்பினேமே'' என்று பகர்வார்.

பாணநாதன், திருவரங்கனை, திருவடிமுதல் திருமுடி ஈருகப்போற்றிப்புகழ்ந்து துதித்தேத்துவார். இவரை அடி யொற்றியே நம் ஆசார்யனும் ஸ்ரீரங்கநாதனை திருப்பாத கமலம் தொடங்கி திருமுடி பரியந்தம் ''பகவத்யான ஸோபானம்'' என்னும் வடமொழி பிரபந்தத்தில் துதிப்பார். ஆழ்வார் பாசுரங்களின் பொருளையும், ஆசார்யன் தோத்திரத் தின் கருத்தையும் முறையே ஈண்டு காண்போம்-

அமல னாதிபிரா னடியார்க் கென்னை யாட்படுத்த,
விமலன், விண்ணவர் கோன்விரை யார்பொழில் வேங்கடவன்,
நிமலன் நின்மலன் நீதி வானவன் நீள்மதி ளரங்கத் தம்மான், திருக்
கமல பாதம்வந் தென்கண்ணி னுள்ளன வொக்கின்றதே! (1)

குறையேதுமில்லாதவனும், மாசற்றவனும், பிறர்குறை களையும் மாசுகளையும் அகற்றியருள்கின்றவனும். உலகம் யாவற்றுக்கும் மூலகாரணனுயிருப்பவனும், மிக இழிதகையே னான என்னையும் தன் பக்தர்களுக்கு அடியனாக்கியவனும், தூயோனாயிருப்பவனும், வானவர்களான நித்தியசூரிகளின் நாயகனும், நறுமணம் மிக்கதான பொழில்களால் சூழப் பெற்றுள்ள திருவேங்கட மாமலைதனில் வந்து நின்றருள்கின்ற வனும், பரிசுத்தனானவனும், தன்னையே தஞ்சமென வந்த டைந்தவர்களின் குறை காணுது திருவருள் நல்குபவனும், நீதியே திகழ்கின்றதான கலங்காப் பெருநகரமெனும் திரு வைகுந்தத்தை ஆள்கின்றவனும் நீண்ட மதில்களையுடைய ஸ்ரீரங்கத்திற்கு சுவாமியுமான திருமங்கை மணாளனுடைய, ஸ்ரீரங்கநாதப்பெருமானுடைய மேன்மை மிகுந்த தாமரைப்பூப் போன்ற திருவடிகள் தாமாகவே வந்து எனது இந்த ஊன்மய மான கண்களினுள் இருப்பவற்றிற்கு ஒத்திருக்கின்றன. (1)

உவந்த வுள்ளத்தனு யுலகமளந் தண்டமுற,
நிவந்த நீள்முடியன் அன்று நேர்ந்த நிசாசரை,
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில் அரங்கத்தம்மான், அரைச்
சிவந்த ஆடையின் மேல் சென்ற தாமென சிந்தனையே. (2)

என்னுடைய சிந்தையானது எண்ணமானது, இந்திரன், மாவலி முதலான அனைவரிடமும் அருள்செய்ய அமைந்த மனதை உடையவனாகி, உலகங்களையெல்லாம் தன் தாளால் அளந்து கொண்டு பேரண்டத்தையும் முட்டுமாறு நெடிது நிமிர்ந்த நீண்ட திருமகுடத்தையுடையவனும், இமையவர் இறைஞ்சி நின்ற காலத்தே எதிர்த்து வந்த இராக்கதரை வீழ்த்தி அழித்த வெவ்வியதான அம்புகளையுடைய, ககுத்ஸ்த்த அரசவமிசத்தில் தோன்றிய ரகுவீரனும், மணம் மிகுந்ததான ஆராமங்களையுடைய திருவரங்கத்துக்கு அரசனுமான திருமாலின், ஸ்ரீரங்கநாதனின் திருவரையில் திகழும் பொன்னாடையின் மீது நிலைத்ததாயுள்ளது. (2)

மந்தி பாய்வட வேங்கட மாமலை, வானவர்கள்
சந்தி செய்ய நின்று னரங்கத் தரவி னணையான்,
அந்தி போல்நிறத் தாடையு மதன்மேல் அயனைப் படைத்த தோரெழில்,
உந்தி மேலதன் றோ!அடி யேனுள்ளத் தின்னுயிரே! (3)

என் மனந்தனிலே இனிய எனது ஆத்மாவானது, வானரங்கள் தாவிச்செல்லுமிடமான வடதிசையிலுள்ள திருவேங்கடமென்னும் மேன்மை பொருந்திய திருமலையிலே வானவர்களும் பூசனைசெய்து பயன் பெற்றுய்யும் வண்ணம், நின்ற திருக்கோலங்கொண்டு திகழ்பவனும், திருவரங்கத்திருத் தலத்திலே அனந்தனென்னும் ஆதிசேடன்மீது பள்ளிகொண்டு கண்வளர்பவனுமான பெருமானின் மாலைநேரத்தினையொத்த செந்நிறங்கொண்ட பீதாம்பரத்துடன் நிற்காமல், அப்பொன்னுடையின் மேலுள்ளதும் பிரமனை மலரில் தேற்றுவித்ததுமான ஒப்பற்றதும் பொலிவார்ந்ததுமான கொப்பூழின் மீது மன்னியிருக்கின்றது. (3)

சதுரமா மதில்சூ ழிலங்கைக் கிறைவன் தலைபத்து
உதிர வோட்டி, ஓர் வெங்கணை யுய்த்தவ னோத வண்ணன்,
மதுரமா வண்டு பாடமாமயி லாடரங்கத்தம்மான், திருவயிற்
றுதரபந்தம் என் னுள்ளத்துள்நின் றுலாகின்றதே! (4)

பகைவர்கள் தாக்குவதைத்தடுக்கும் திறலுள்ளதும் பெரியதுமான மதிள்களால் சூழப்பெற்ற இலங்கையின் அரச

னான இராவணனின் பத்துத்தலைகளும் அறுந்து விழும்படிக்கு ஒப்பற்ற கடுமையான வாளியை, (முதல் நாள் அவனை வீட்டிற்கு விரட்டி அடுத்த நாள்) ஏவியவனும், கடல்வண்ணத் திருமேனியனும், இனிய பெரிய வண்டுகள் பாடும்போது பெரிய மயில்களும் தோகை விரித்தாடுமிடமான ஸ்ரீரங்கத்தில் திருவருள் நல்கும் திருவரங்கப் பெருமானின் திருவயிற்றுடன் சேர்ந்த திருவரை நாண் போன்றதான அணிகலன் என் மனந்தனில் உலாவிய வண்ணமிருக்கின்றது.

பாரமாய பழவினை பற்றறுத்து, என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்தநன்றி யென்னுள் புகுந்தாள்,
கோர மாதவம் செய்தனன்கொ லறியே னரங்கத் தம்மான்,திரு
ஆர மார்வது அன்றோ!அடி யேனை யாட்கொண்டதே! 5.

மிக-மிகப் பிரயாசைப்பட்டுச் செய்ய வேண்டுவதான பெருமை மிகுந்ததான ஒரு தவத்தை நான் எந்தப்பிறவியிலே னும் செய்தேனோ? என்பதை அறியும் திறன் படைத்துள்ளே னில்லை.-ஏனெனில் திருவரங்கநாதன்-, அற்ப பலன்களில் பற்றுக்கொண்டுள்ள என்னை, பெரும் பாரமான தொடக்க காலமறியப்படமாட்டாமல் குவிந்து கிடக்கும் வினைகளை பற்றோடு அழித்து அகற்றி தன் பங்காக ஆக்கி அருள் செய்தான். இம்மட்டோடன்றி என் நெஞ்சிலே புகுந்து தனது தேசொளியைக் காண்பித்து என்னை நுகரப்பண்ணினான். அவ்வளவு பேரருளாளனான திருவரங்கநாதனின், திருமாமகளுட னும் மாலையுடனும் கூடிய,-பிரமாணங்களால் புகழ்ப்பட்ட திருமார்பானது.அவ்வரங்கனுக்கே அடியனான என்னை ஒழிவில் காலமாய், எல்லாக்காலத்திலும் ஏற்றுக் கொண்டது, ஆளாக்கிக்கொண்டது.

துண்ட வெண்பிறை யன்துயர் தீர்த்தவன், அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூ ழரங்கநகர் மேய வப்பன்,
அண்ட ரண்டபகி ரண்டத்தொரு மாநிலம் ஏழுமால்வரை, முற்றும்
உண்ட கண்டம்கண்டீ ரடியேனை யுய்யக்கொண்டதே. 6.

துண்டமாயும் வெண்மையாயுமுள்ள சந்திரகலையைத் தலையில் பெற்றுள்ள சிவபிரானின், பிரமனின் சிரத்தினைக்

கொய்ததால் உண்டான பிரம்மஹத்தி துக்கத்தைப்போக்கி அருள் செய்தவனான, அழகிய சிறகுகளை உடைய வண்டுகள் வாழுமிடமான சோலைகளால் சூழப்பெற்ற திருவரங்கத் திருநகரில் நிலைத்து அருள் நல்கிக்கொண்டிருக்கும் என்னெந்தையின்-ஸ்ரீரங்கநாதப்பெருமானின், அண்டத்தினுள்ளிருக்கும் உயிரினங்களையும், அண்டங்களையும்,புறத்தேயுள்ள அனைத்துப் பொருள்களையும், பெரியதோர் பூமிஎன்ன, ஏழு பெருங்குல மலைகளென்ன, இவை முதலான அண்டத்தின் அனைத்து சேதனங்களையும் ஒரு கவளமாக விழுங்கின கழுத்தானது, நான் உய்யுமாறு, என்னை ஏற்றுக்கொண்டது.

கையி னார்சுரி சங்கன லாழியர், நீள்வரைபோல்
மெய்யனார் துளப விரையார் கமழ்நீள் முடியெம்
ஐயனார், அணியரங்கனா ரரவி னணைமிசை மேய மாயனார்,
செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே. 7.

திருக்கையகத்தே நிறைந்து பொருந்தியுள்ளதான வலம்புரிச்சங்கமென்ன, தீப்பொறிபோல் சுடரொளிமின்னிடும் திருச்சக்கரமென்ன, இவற்றைப் பெற்றிருப்பவரும், நீண்ட மலையையொத்த திவ்வியத்திருமேனியராய்த்திகழ்பவரும், திருத்துழாயின் வாசனையால்நிறைந்ததும் நறுமணமுள்ளதுமான நீண்டுயர்ந்த மகுடத்தையுடையவரும்,நமக்குத்தந்தையாரும், அழகு மிகுந்ததான ஸ்ரீரங்கத்தில் மன்னியிருப்பவரும், ஆதிசேடனாகிய படுக்கையில் பள்ளிகொண்டு கண்வளரும் மாயனுமான பெருமானின் சிவந்த திருப்பவளமானது என் சிந்தையை-உள்ளத்தை-தனதாக்கிக் கொண்டது. இது வியப்பேயாம். 7.

பரிய னாகி வந்த அவுண னுடல்கீண்ட, அமரர்க்கு
அரிய ஆதிப்பிரா னரங்கத் தமலன் முகத்து,
கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி யோடி,நீண்டஅப்
பெரிய வாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே. 8.

மிகவும் பருத்தவனாய் எதிர்த்து வந்த-ஹிரண்ய கசிபு-என்னும் அரக்கனின் உடலைக்கிழித்தவனும், தேவர்களுக்கும் காண்பதற்கரியனாயிருப்பவனும், உலகம் யாவற்றுக்கும் மூல காரணனாகவும், பேருபகாரகனாயிருப்பவனும், திருவரங்கத்

தில் நிலைத்திருப்பவனுமான, குறைகளைக்களைந்தகற்றியருளும் திருவரங்கநாதப்பெருமானின் திருவதனத்தே திகழும்-கரிய விழியில்-கறுமை பொருந்தி மலர்ந்து சிவந்த கொடிபோன்ற வரிகளையும் பெற்று திருச்செவி வரை நீண்டுள்ளனவும்அகன்ற தாயிருப்பவையுமான, அழகான திருக்கண்கள், பெருமானையே சேவித்துக்கொண்டிருக்கும் அடியேனை பிறிதொன்றையும் உணராதபடியாக்கிவிட்டன. 8.

ஆலமா மரத்தின் இலைமே லொருபாலகனாய்,
ஞால மேழு முண்டா னரங்கத் தரவி னணையான்,
கோல மாமணி யாரமும் முத்துத் தாமமும் முடிவில்ல தோரெழில்,
நீலமேனி ஐயோ! நிறை கொண்டதென் நெஞ்சினையே! 9.

-பல கிளைகளைக்கொண்டிருந்த-பெரியதான, ஊழிக் காலத்தின் ஆலமரத்தின் ஒருசிறு தளிரிலையிலே தனித்த சிசுவாயிருந்து, உலகுகள் யாவற்றையும் தன் திருவயிற்றில் கொண்டு பாதுகாத்தருளியவனும், திருவரங்கத்தில் அனந்த னென்னும் பள்ளியில் பள்ளி கொண்டிருப்பவனுமான ஸ்ரீரங்க நாதப்பெருமானின் எழிலார்ந்ததும்,பெரியனவுமான இரத்தின -முத்து மாலைகளும் முடிவில்லாத மற்ற, இவ்வுலகியல்புக்கு அப்பாற்பட்டதான பொருள்களும் ஒப்பற்றதான பேரழகுடைய நீலவண்ணத்திருமேனியும் எனது உள்ளம் முழுவதையும் கவர்ந்து கொண்டது. இது வியத்தகு செயலேயாம். 9.

கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன், என்னுள்ளம் கவர்ந்தானை,
அண்டர் கோனணி யரங்கன்என் னமுதினைக்
கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே. 10.

மேகத்தின் நிறம் அல்லதுஅதன் இயல்பைப்பெற்றுள்ள வனும், ஆயனாகி திருவாய்ப்பாடிப் பெண்டிர் சேமித்து வைத் திருந்த வெண்ணெயைக்களவு செய்து உண்ட திருவாயை உடையவனும்,-அவ்வண்ணமே-என்உள்ளத்தையும் கொள்ளை கொண்டவனும், இமையவர் யாவர்க்கும் நாயகனாய், அழகார்ந்த திருவரங்கத்திலுருப்பவனும், எனக்கு மிகவும்

உகக்கும் அமுதமுமானவனை அனுபவித்த-சேவித்த-என்கண்கள் பிறிதொன்றையும் காணமாட்டா. அவ்வண்ணமாக, திருவரங்கன் அவனுக்கே தொண்டனான எனக்குத்திருவருள் செய்தான். 10.

நம் பாணநாதன் பாதமே போற்றி!

## பகவத்யான ஸோபானம்

ஆரணதேசிகன், திருவரங்கப்பெருமானை, துவக்கத்தில் அவனது பெருமையையும், சிறப்புயர்வினையும் மொழிந்து, பின்னர் பெருமானின் திருவடி, கணைக்கால்,தொடை,திருவுந்தி திருமார்பு, திருக்கை, திருமுகம், திருமகுடம் ஆகியவற்றைத் தனியே வருணித்துப்போற்றிப்பின்பு அனைத்து அவயங்களையும் ஒருசேர அனுபவித்துத்தம் மனத்தகத்தே திருவரங்க நாயகியும்,திருவரங்கநாதனும் உரைந்திருந்தருள்வதைப்பேசி தோத்திரப்பயன் கூறி, தோத்திரத்தைத்தலைக்கட்டுகின்றார். திருவரங்கநாதனின் திவ்யத்திருமேனியைதிருவடி தொடங்கி திருமுடி ஈருகத்துதிப்பதற்கு,இந்தத்தோத்திரம்படி போன்றுள்ளதால் இதற்கு ஸோபானம் என்னும் பெயர் சூட்டியுள்ளார். ஸோபானம்-படி. இதில் பன்னிரண்டு சுலோகங்கள் உள்ளன.

யோகிகளின்-முனிவர்களின்-உள்ளத்தில் ஒளிவீசுகின்றதாய், ஞானக்கண்ணுக்கு-நெஞ்சென்னுமுட்கண்ணுக்கு-மை போன்றதாய், இவ்வவனியில் நமக்கு எளியதான, இப்பிறவியில் நுகரும் இன்பங்கள், மறுமையில் மோட்சம் தந்தருளும் சிந்தாமணி போன்றதாய், வலுவற்ற-ஆதரவற்றிருப்பவர்களுடைய வருத்தத்தை அகற்றுவதாய்,மறைக்குவியல்களுக்கு தெய்வீகக்கண் போன்றதாய், தெய்வங்கள் யாவர்க்கும் மேம்பட்ட உயர்வற உயர்ந்த தனிப்பெருந்தெய்வமாய் விளங்கும் ஒருபொருள் திருவரங்கத்தின்மத்தியில் தோற்றமளிக்கின்றது.

எல்லை கடந்த வேதங்களின் மணம் வீசப்பெற்றதாயும், அன்னங்கள் ஆசையுடன் வசிக்கின்ற காவிரியாற்றின் மணல் திட்டில் தோன்றியதாயும், பெரியபிராட்டியார்-நிலமகள் இவர்களின் தாமரைத்திருக்கைகளால் வருடப்பெற்றதாயுமுள்ள திருவரங்கநாதப்பெருமானுடைய திருவடித்தாமரை அடியேனுடைய எண்ணமென்னும்தடாகத்தில் தோன்றுவதாயுள்ளது.

சிலம்புகளின் ஒலிகளால் பலதரப்பட்ட நிறம் பெற்ற தாயும் வனப்புள்ள வட்டமான முன்புறத்துக்கு ஏற்ற அமைப்பை உடையதாயும், தகுந்த தருணத்தில் தூதுச்செயலுக் குரிய மிகத்துரிதமான நடையை உடையதாயும், எழிலின் மிளிர்வைத்தாங்கும் கலமாயும், முழந்தாளின் பொலிவால் அழகு இருமடங்காகத் தோன்றுவதாயுமுள்ள ஸ்ரீரங்கநாத னுடைய கணைக்காலைச்சேவித்து எனதுஉயிர் இப்பிறவியெனும் கடலில் அலைந்துழல்வதை விடுகின்றது. 3

காமதேவனின் பூங்காவில் நிலைத்துள்ள வாழைமரத் தண்டுகள் போன்று எண்ணுமாறு உள்ளதாயும், பீதாம்பரத்தை அணிந்துள்ளதாயும், திருமகள், நிலமகள், நீளாதேவி-மூவருக் கும் தலையணையாயும், கீழ்நோக்கிச்செல்லும் மேகலையின் ஒளி களால் அழகுபெற்றதாயும் இரண்டு அழகுவெள்ளம் போன்ற அற்புதமாயுமுள்ள திருவரங்கநாதனென்னும் இளைஞனின் தொடைகளின் இணையை எனதுபுத்தி-அறிவு அனுபவித்து மகிழ்கின்றது.

எழில்மிகு தோற்றமுடையதாயும், ஆழமாய்தோன்று வதால் ஒருகாலத்தில் உலகினைத்தன்னுள்ளே ஒளித்து வைத்துக்கொண்டதாயும், துகள் செறிந்துள்ளதான தாமரை மலரினால் பல பிரமன்களைப்படைப்பதாயும், அழகிய சுழல்களால் அழகு பெற்றதாயுமுள்ள திருவரங்க நகரப்பனது இந்தத்திரு வுந்தி நிமிடந்தோறும் எனதுமனதை மகிழ்விப்பதாயுள்ளது 5

'ஸ்ரீவத்ஸம்' என்னும் மறுவினால் பெருமை மிகுந்து தோன்றுவதாயும், பெரியபிராட்டி திருவடி வைப்பதால் பாக்கியம்-பேறு-பெற்றுள்ளதாயும்- கௌத்துபமென்னும்-சிறந் ததான இரத்தினத்தின் பேரொளியால் செந்நிறமாக்கப்பெற்ற தாயும், பசுமையான திருத்துழாயினால்-துளசியினால்-, பல வண்ணங்களைக்கொண்ட வைஜயந்தி என்னும் வனமாலையால் தண்ணெனும் ஒளி மிகுந்துள்ளதாயும், நிலவொளிபோல் அழகிய முத்துமாலையுடையதாயுமுள்ள ஸ்ரீரங்கநாதனுடைய இரு தோள்களின் மையத்தே உள்ள திருமார்பு எனது மனதின் தாபத்தை-வெப்பத்தை-அகற்றுகின்றது.

திருவரங்கப்பெருநகரில் பள்ளிகொண்டுள்ள திருவரங்க னுடைய,எல்லோருடைய விருப்பங்களையும் நிறைவேற்றவல்ல கற்பகத்தருவாயும், விளையாட்டாகத் தலையணையாக்கப்பட்ட ஒரு வலத்திருக்கையையும், முழந்தாள்வரை நீண்டு திகழும் மற்றொரு இடது திருக்கையையும் பற்றிக்கொண்டதாயும்,- அதனால்-செருக்குக்கொண்ட அத்தகைய இந்த என்னுடைய நினைவென்னும்-பிடி-பெண்யானை, திருவாபரணங்களின் ஒளி களென்னும் கயிறுகளால் இறுகப்பிணிக்கப்பட்டதாய் விநோத மான கட்டுத்தறியில் கட்டுண்டிருந்தலை நுகர்வதாயுள்ளது. 7

கருத்துச்செறிந்த புன்னகையால் மலர்ந்ததாயும், அழகிய கோவைக்கனிக்கிணையான கீழ்மேல் இதழ்களை-உதடு களை-உடையதாயும் துயர் விலகுவதை விரும்பும் மக்களிடத் தில், அவர்கள் தொலைவிலிருக்கும் காலையிலேயே அவர்களை அருள்கெண்டு நோக்குவதாயும், பசும்பொன்னுலாகிய திலகத் தால் அழகுபண்ணப்பட்டதாயும், நல்வரவு கூறும் பெருந் தன்மையுள்ள திருக்கண்களையுடையதாயுமுள்ள திருவரங்கப் பெருமானுடைய திருவதனம் என் மனந்தனில் வலுவாக ஆழ்ந்துபதிகின்றது.

உள்ளே மலர் மாலைகளால் நிலைத்திருப்பதான மண முடையனவாயும், சினங்கொண்ட சோழநாட்டுமடந்தைகளின் பேச்சுக்களைப்போல் கோணலானதாயுமுள்ள திருக்குழல் களோடு அடிப்பகுதியின் தொடர்பு பெற்றதாயும், இரத்தினங் களாலான முடி மாலைகளின் ஒளியால் பல நிறம்பெற்றதாயு முள்ள திருவரங்கநகரெந்தையின் கிரீடத்தில் என்உள்ளத்தின் எண்ண அலைகள் பதிந்து நல்ல மன்னனைப்பெற்றனவையாய் நிலைத்திருப்பனவையாய் உள்ளன. 9

என்னுடைய இந்த அறிவானது, திருவரங்கப்பெருமா னுடைய திருவடியைத் தொடுவதாயுள்ளது. கணைக்காலை வணங்குகின்றது. இரு தொடைகளின் அழகிலே மோகித்திருக் கின்றது. மேலே உள்ள திருவுந்தியை அணுகி அதன்பின் திரு மார்பில் நிலைத்திருக்கின்றது. திருக்கைகளின் எழிலைப்பருகி திருமுகத்தின் ஒளியை அள்ளி அருந்துகின்றது. கிரீடத்தில்- திருமகுடத்தில்-நினைவுகொண்டு களிக்கின்றது. 10

அழகுள்ளவையாய், ஈகையிற்சிறந்தவையாய்,கைவளை கள், நாண் இவற்றின்தழும்புகள் பதியப்பெற்றனவாய்,பெரிய பிராட்டியாரின் உறைவிடமான திருமார்புக்கு பெரியபாதுகாப் புத்தாழ்ப்பாளாயுமுள்ள திருக்கைகளால் அஞ்சற்க என்று அருளும் திவ்வியமான ஆயுதங்களைக் காண்பிப்பவனாய், பாம்பணையிற்பள்ளிகொண்டுள்ள திருவரங்கன் இந்த ஸ்ரீரங்க விமானத்தில்-மூலத்திருமேனி கொண்ட தனக்குச்சிறிது முன் புறத்தில்-தன் உற்சவ வடிவமாகவே-இருந்த வண்ணம் பிராட்டியாருடன் திருவரங்கத்தின் மத்தியிலேயும் எனது உள்ளத்தேயும் உறைபவனாயிருக்கின்றான். 11

திருமாலின் பக்தியில் விருப்பம் மிகவுடையவர்களால் போற்றப்பட்டதாயும், யாவருடைய உள்ளங்களையும் களிப் பூட்டுவதாயுமுள்ள திருவரங்கமென்னும் திவ்வியத்திருத்தலத் தில்,மறையோதும் வித்துவான்களின் பணிவிடையால் மாசிலா மனம் பெற்ற வேங்கடேச கவியால் இயற்றப்பட்ட இந்த ''பகவத்யான ஸோபானம்'' என்னும் தோத்திரம், யோகத்தில் ஆழ்ந்த யோகிகளின் நிலையை வருத்தமின்றி அடைய விழைவு கொள்பவருக்கு நிலைத்ததான பக்தி அளிக்கவேண்டும்.

சந்தமிகுத் தமிழ்மறையோன் தாளிணை சரணம்.

தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார் திருவடி சரணம்.

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

தெய்வநாயகனின்
மலரடி வணங்குவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

# தெய்வ நாயகன்

''குலபதி'' என்று வைணவம் போற்றும் நம்மாழ்வார், திருவாய்மொழி முதற்பாசுரத்தில், ''உயர்வற உயர்நல முடையவன், அயர்வறும் அமரர்கள் அதிபதி'' என்று தமக்கு மயர்வறமதி நலமருளிய, மாமலர் மன்னிய மகிழ்ந்துறை மார்பனை, பூமன்னுமாது பொருந்திய மார்பனை, தீதற்ற நற்குணப் பாற்கடல் தாமரைச் செம்மலர்மேல் மாதுற்ற மாயன் திரு நாரணனை ஏத்திப் பரவுகின்றார். மேலும் ''ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா, ஆதிப்பெருமூர்த்தி, ஈடுமெடுப்புமில் ஈசன்'' எனவும் போற்றுவார். தன் நிலையினை, தலைவியின் தோழி, தலைவியின் அன்னைக்கு உணர்த்துவதாக உரைக்கும் பதிகத்தில் பாசுரம் இரண்டில், ''திசைக்கின்ற தேயிவள் நோய் இதுமிக்க பெருந்தெய்வம்,இசைப்பின்றி நீரணங்காடும் இளந்தெய்வம் அன்றிது'' என்று தன் மனத்துறை மாதவனின் உயர்வற உயர்ந்த நிலையினை எடுத்தியம்புகின்றார். முந்துற முன்னம் அருளிய திருவிருத்தத்தில்,

''வண்ணகும் துறைகள் பலபல ஆக்கி, மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி, அவையவைதோ
றணங்கும் பலபல ஆக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்,
இணங்கும்நின் னோரையில் லாய்; நின்கண் வேட்கை எழுவிப்பனே.''
—97

பலகருத்துள்ள சமயவாதிகள் வணங்கும் தெய்வ உருவங்களின் பலப்பலவான யாவற்றிலும்,தமக்கருளிய அண்ணல் திருமங்கை கேள்வனே இருந்து அருள்பவன் என்று மொழிகின்றார். நம்மாழ்வார் அருளிச்செயலிலிருந்து தாமரையாள் திருமார்பனே தெய்வநாயகன் என்று தெளிகின்றோம். பட்டநாதனென்னும் பெரியாழ்வாரும், ஸ்ரீமந்நாராயணனின் பரத்துவ நிலையினை, பாண்டியன் அவையில் நிலைநாட்டி, பொற்கிழி பெற்றுப் பெருமானை, கருடன் மேல் கண்டு பல்லாண்டு பாடி மகிழ்வெய்தினார்.வேதத்தில் ஓதப்படும் புருஷ ஸூக்தத்திலும் இதே கருத்து வலியுறுத்தப்படுகின்றது. உப

நிஷத்திலும் இக்கருத்தினைக்கண்டு தெளிகின்றோம். மற்றும் ஸஹஸ்ரநாமத்திலும், ''ஆதிதேவன், மஹாதேவன் தேவேசன்'' என்னும் திருநாமங்கள் ஓதப்படுகின்றன.

தெய்வநாயகன் குறித்து, நம்மாழ்வாரின் மற்றும் சில பாசுரங்கள்-

மூவராகிய மூர்த்தியைமுதல்
மூவர்க் குமுதல் வன்றன்னை,
சாவமுள்ளன நீக்குவானைத்
தடங்க டல்கிடந் தான்றன்னை,

. . . . .

தஞ்ச மாகிய தந்தை தாயொடு தானு மாயவை அல்லனாய்,
எஞ்சலில் அம ரர்கு லமுதல் மூவர் தம்முள்ளு மாதியை,
. . . . —திருவாய்மொழி-3.6-2,9.

சீரிய ரேயோ! மனிசர்க்குத்தேவர்
போலத்தே வர்க்கும்தே வாவோ!,
. . . . —8-1-5.

முதலாம் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே
முதலாகும் மூன்றுக்கும் என்பர்—முதல்வா!,
நிகரிலகு காருருவா! நின்னகத்த தன்றே,
புகரிலகு தாமரையின் பூ? —பெரிய திருவந்தாதி-72.

கவிஞர் போரேறு,பொய்கைதனில் வந்துதித்த புனிதன் அருளிய புகழுரை-

முதலாவார்மூவரே அம்மூவருள்ளும,
முதலாவான்மூரி நீர்வண்ணன்,—முதலாய
நல்லான் அருளல்லால் நாமநீர் வையகத்து,
பல்லார் அருளும் பழுது.-முதற்றிருவந்தாதி-15

மற்றும் திருஉறைந்தருளும் திருமாலவன் முன்னியிருந்தருளும், தலங்கள்-ஆழ்வார்களால் பாடப்பெற்றவை-, திருவயிந்தை, திருத்தேவனார் தொகை, சிரீவரமங்கை-மூன்று திவ்வியத்தலங்களிலும் அருளும் பரமனுக்கு, ''தெய்வநாயகன்'' என்னும் திருப்பெயர் வழங்குகின்றது.

பெருமாள் கோவில் என்னும் காஞ்சியில், பெருமாள் 'தேவாதிராஜன்' என்னும் பெயருடன் சேவை தருகின்றார். திருக்குருகூரில் ஆதிநாதன், தொலைவில்லி மங்கலத்தில் தேவப்பிரான், நைமிசாரண்யத்தில் தேவராஜன் என்றவாறன பெயர்களுடன் பெருமான் அருள் பாலிக்கின்றான் மற்றும், சுடர்பொன் நெடுமுடி எம்ஆதி,-தேவாதிதேவன், எழிலளந்தங் கெண்ணற்கரியானை எப்பொருட்கும் சேயானை,-தேவராய் நிற்கும் அத்தேவரில் மூவராய் நிற்கும் முது புணர்ப்பும், அனங்கவேள்தாதைக்கு எவரும் எதிரில்லை கண்டீர்,-தன் சார்பிலாத தனிப்பெருமூர்த்தி,தெய்வக்குழாங்கள் கைதொழக் கிடந்த தாமரையுந்தி தனிப்பெருநாயக! மூவுலகளந்த சேவடியோயே, மெய்பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வனாகி, தனிமாத்தெய்வம், இரும்பொருட்கெல்லாம் அரும் பெறல் தனிவித்து, ஒருதானாகித்தெய்வ நான்முகக்கொழுமுளையீன்று, முக்கணீசனொடு தேவு பலனுதலி, மூலவுகும் விளைத்த உந்தி மாயக்கடவுள் மாமுதலடியே, தேர்ந்துலகளிக்கும் முதற்பெருங் கடவுள்,தானே தனித்தோன்றல் தன்னளப்பொன்றில்லாதான் தானே பிறர்கட்கும் தத்தோன்றல், வையமேழுமுண்டு ஆலிலை வைகியமாயவன் அடியவர்க்கு மெய்யன் தெய்வ நாயகன்,தேருமூர்ந்து தேசுயர்ந்த செல்வ தெய்வநாயகா!-'', என்றவாறன செய்ய தமிழ் மாலைகளின் சொற்றொடர்கள் கொண்டும் தெய்வநாயகனாய், தன் சார்விலாத தனிப்பெரு மூர்த்தியாய், தனி நின்ற சார்விலா மூர்த்தியாய்த்திகழ்பவன் தாமரையாள் மார்பனே என்று தெளிகின்றோம்.

மற்றும் கம்ப நாடரும் தாம் யாத்த இராமாயணத்தில் இதனை உறுதியாக உரைப்பர்.-விராதன் ஸ்ரீராமபிரானின் திருவடி தீண்டப்பெற்று, அயோத்தியண்ணலைப்போற்றி வணங்கி மொழிந்தவை-

வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் நிறைந்தன நின்
பாதங்கள் இவை என்னின் படிவங்கள் எப்படியோ?,
. . . . அடுத்த பெருந்தனிமூலத்து அரும்பரமே!பரமே!,. . .
. . . தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீ. . . .,
தருமத்தின் தனிமூர்த்தி, . . நீ ஆதி பரம்பரமும் நின்னவே
உலகங்கள், ஆயாத சமயமும் நின் அடியவே அயல் இல்லை,

பன்னல் ஆம் என்று உலகம் பலபலவும் நினையுமால்,
உன் அலால் பெருந்தெய்வம் உயர்ந்துளோர் ஒழுக்கு அன்றே,
அன்ன ஊர்தியை முதல் ஆம் அந்தணர் மாட்டு அருந்தெய்வம்,
நின் அலால் இல்லாமை நெறி நின்றார் நினையாரோ?
மெய்யைத்தான் சிறிது உணர்ந்து நீ விதித்த மன்னுயிர்கள்,
உய்யத்தான் ஆகாதோ உனக்கு என்ன, குறை உண்டோ?
வையத்தார் வானத்தார் மழுவாளிக்கு அன்று அளித்த,
ஐயத்தால் சிறிது ஐயம் தெளிந்தாரும் உளர் ஐயா!,

-இப்பாடல், திருவாய்மொழி 4-10-4-ன் பொருளைத்தழுவியது,-

. . . மூவர் நீ முதல்வன் நீ, மற்றும் நீ,
பாவம் நீ, தருமம் நீ, பகையும் நீ, உறவும் நீ,

வாலி தன் தம்பி சுக்கிரீவனிடம் இராமனின் மேன்மையையும், தனித்தன்மையையும், உயர்தனிச்சிறப்பினையும் பற்றிப்பகன்றவை-

மறைகளும் முனிவர் யாரும் மலர் மிசை அயனும்
துறைகளின் முடிவும் சொல்லும் துணி பொருள் துணிவில் தூக்கி
அறைகழல் இராமன் ஆகி அறநெறி நிறுத்த வந்தது,
இறை ஒரு சங்கை இன்றி எண்ணுதி எண்ணம் மிக்கோய்!,

சங்கினெடு சக்கரமுடைத் தனி முதற்பேர் அழகன் அரசு கோது அறு தவத்துத் தம் குலத்துளோர் தொழும் ஆதி அம் சோதியை அடி வணங்கினன்-, முதன்மையான பேரொளிப் பிழம்பான திருவரங்கநாதனின் திருவடி வணங்கினன்-, தேவரும் முனிவரும் தெரிக்கலா முதல் மூவரும் தான் என முடித்தது ஒத்தே,
பரம் பொருளிற்குள் முதலை மூலத்தை,
இப் பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை.
அப்பனை அப்பினுள் அமிழ்தை தன்னையே,
ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ?,
மேவி மென் மலராள் நிலமாது எனும்
தேவி மாரொடும் தேவர்கள் யாவர்க்கும்,
ஆவியும் அறிவும் முதல் ஆயவன்,
வாவி மாமலர்ப் பாதம் வணங்கினன்,

மூவர் ஆய் முதல் ஆகி மூலம் அது ஆகி ஞாலமும் ஆகிய
தன்னில் முன்னிய பொருளிலா ஒரு தனித்தலைவன்,-தனக்கும்
தன்னிலை அறிவு அரும் ஒரு தனித்தலைவன்,-தன் ஒப்பு
ஒன்றில்லாதான், இலைகுலாம் துழாய் முடி ஏக நாயகன்,
வேதம் முதல் நாதன் தேவர்க்கும் தேவன்,

அங்கதன், இராவணனிடம் இராமனைப்பற்றிக் கூறியவை-

"பூத நாயகன் நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன், அப்பூமேல்
சீதை நாயகன், வேறுள்ள தெய்வநாயகன், நீசெப்பும்
வேத நாயகன் மேல்நின்ற விதிக்கு நாயகன் தான் விட்ட
தூதன் யான் பணித்த மாற்றம் சொல்லியவந்தேன்." என்றான், யு-கா-835

இந்திரசித்தின் அம்பு பட்டு வீழ்ந்த இலக்குவனைப் பார்த்து மிக மிக வருந்திய அனுமன் மொழிந்தது-

ஆயிரம் கோடி மேலும் அம்புதன் ஆகத்தூடு
போயின போதும் ஒன்றும் துடித்திலன் பொடித்துமானத்
தீஎரி சிதறும் செங்கண் அஞ்சனை சிங்கம், தெய்வ
நாயகன் தம்பிக்கு உற்ற துயர்சுட நடுங்குகின்றான்., யு.கா.2141.

இவ்வாறான இன்னும் எண்ணிறந்த பாடல்களும் சொற்றொடர்களும் காண்கின்றன. விரிவுக்கஞ்சி இத்துடன் நிறுத்துகின்றனம்.

தனிநின்ற சார்விலாமூர்த்தி தெய்வநாயகன், ஸ்ரீமந் நாராயணனின் தாள்களையே நாளும் பணிந்து பிறவிப்பயன் பெற்றுய்ந்திடுவோமாக.

தெய்வநாயகன் தேமலர்ப்பாதங்கள் சரணம்.
செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

தேனிலினியபிரானின்
தேமலர்ச்சேவடி சேவிப்போம்.

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## திருவருள்

தயவு, பரிவு, கருணை-ஆகிய சொற்களைப் பொருளாகக் கொண்டு வழங்குவது அருள் என்னும் சொல். அருள் என்பதற்கு ஈகை எனவும் பொருள். கடவுளின் அருள்பேறும், அருள் எனும் சொல்லால் குறிக்கப்படுவதே! மனிதர்களிடம் இருந்து வரும் உதவியை, இன்னாரது பரிவால், கருணையால், தயவால் பெறப்பட்டது என்று கூறக்கேட்கிறோம். இதுவே தெய்வத்தால் பெறப்படுங்கால அருளால் வாய்த்தது என்று மொழியப் படுகின்றது.

இறைவனிடம் இருந்து இவ்வருளைப் பெறுவதற்கு, ஆசார்யனின் அருளைப்பெறுவது மிக-மிக இன்றியமையாதது. ஆசார்யன் அல்லது குருவின் பெருமை அளவிடற்கரிய ஒன்று என்பது ஆன்றோர்களின் ஒருமித்த கருத்தாகும். ஆசார்யனின் பரிந்துரைபெற்று தெய்வத்திடம் பெறும் அருள் ''திருவருள், இன்னருள், பொன்னருள், பேரருள்'' என்னும் பெயர்கள் பெற்றுத்திகழ்கின்றது. இவ்விதமாக, பெருமான்-பெருமாட்டியின் திருவருள் பெறும் வழியை நமக்குக் காண்பித்து அருளி உதவிய ஆசார்யனுக்குச் செய்யும் கைம்மாறு எதுவும் நாம் பெற்ற உதவிக்கு ஈடாகாது என்று மொழிவர் நம் சந்தமிகுத் தமிழ்மறையோன். மேலும், எம்பெருமானே, ஆசார்யனுக்குச் செய்யத்தகுந்த கைம்மாறு அறிந்துள்ளானில்லையே என்பர். உரிய பாசுரம்-

ஏற்றி மனத்து எழில்ஞான விளக்கை
மாற்றினவர்க்கு ஒருகைம்மாறு மாயனுங்காணகில்லான்,
போற்றி யுகப்பதும் புந்தியிற்கொள்வதும் பொங்குபுகழ்
சாற்றி வளர்ப்பதும் சற்றல்லவோ? முன்னம்பெற்றதற்கே.

—அதிகாரசங்கிரகம்-38

நம் மனத்திலிருந்து அறியாமையென்னும் இருளையகற்றி ஞானமென்னும் ஒளிவிளக்கை ஏற்றி அவ்வொளியால் இறைவன் இன்னருளைப்பெறப் பண்ணிய ஆசான்களுக்குக் கைம்மாறு''யாது''என்பதை மாயனே -அவ்வெம்பெருமானே-

அறிந்துள்ளானில்லை. அவ்வாசார்யனுக்கு நாம் செய்யும் நன்றி யாவது-அவர்களைப் போற்றிப்புகழ்ந்து, அவர்க்குரிய புகழ் கீதங்களைப் பாடிப்பரவுவதேயாகும். அதுவும் அவர்களிடம், முன்பு பெறமுடியாமலிருந்து பெறப்பட்டபேருதவிக்கு மிக-மிகச் சிறிய உதவியாகும். -அ-ச-38

(கபீர் தாசரும், ஆசார்யனின் சிறப்புயர்வினைப் பெரிதும் போற்றியுரைப்பார்-மானிடனே!, நீ இறைவனிடம் வேண்டு வதை விடுத்து, இறைவனடியார்களிடம் இறைஞ்சுவாயாக. இறைவனேவெனில் உனக்கு, வீடு, வாசல் செல்வம் போன்ற நிலையுற்ற பொருள்களைக்கொடுப்பன். இறைவனடியார்களோ வெனில், நீ வேண்டும் இறைவனையே உனக்குக் காண்பித்து உதவுவர்.-இதன் கருத்தாவதுஆசானை முன்னிட்டுக்கொண்டே பெருமானின் திருவருள் பெறவேண்டும் என்பதாம்.

உரியதோஹா-
ஹரிஸே ஜனி தூ ஹேத்கர் கர்ஹரிஜன் ஸே ஹேத்!
மால் முல்க் ஹரிதேதே ஹைஹன் ஹரிஜன் ஹரிஹீதேத்!

மேலும் கூறுவார்-நான் சென்று கொண்டிருந்தேன் என் எதிரே கோவிந்தப்பெருமானும், அவனடியாரான குருவும் தோன்றினர். ஒரு கணம் யாரை வணங்குவது என்று சிந்தித் தேன். பின்னர் தெளிவடைந்து, குருவின் திருவடிகளைப் பணிந்தெழுந்தேன். இறைவனும் இனிது மகிழ்ந்து, இன்னருள் நல்கினன்.

''உலகின் கணுள்ள மரங்கள் யாவற்றையும் பேனாவாக்கி ஏழுகடல்களின் நீரையும் மையாக்கி, மண்ணுலகம் முழுவதை யும் தாளாக்கி எழுதினாலும் ஆசானின் மாண்பும், சிறப்பும் எழுதிமாளாது'' என்பர்.)

பெருமானின் திருவருள் பெறுவதற்கு, ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஆகியோரின் இன்தமிழ்ப்பாசுரங்களையும், தோத்திரங்களையும், பெருமாளின் திருமுன்னே நின்று மனங் கசிந்துருகிப்பாடிநின்றோமாகில் பெருமான்திருவருள் பெற்றுய் வடையலாம் என்பது முன்னோர் கண்ட முடிவு. இக்காரணந் தொட்டே, இன்றும், திருக்கோயில்களிலும், பெருமாள் திருவீதி யுலாக்கண்டருளும் போதும் பிரபந்தங்கள் ஓதுவது கண்கூடு.

தேனினுமினிய தமிழ்ப்பாசுரங்களைப் பயின்று ஓதுபவர்கள் பெருமானின் திருவருள் பெறுவதோடன்னியில் நல்குரவின்றி யும் வாழ்வார் என்று பதிகப்பயன் பாசுரங்களில் கண்டு தெளியலாம். மேலும் தாங்கள் எம்பெருமான்திருவருள் பெற்று மகிழ்ந்ததையும், ஆரணங்கள் தமிழ் செய்த ஆழ்வார்கள் அருளிச்செய்துள்ளனர்.

வேதமனைத்துக்கும் வித்தான திருப்பாவை பாடி அருளிய பட்டர்பிரான் கோதை, ஈற்றுப்பாடலில் திருவருள் பெறும் வழியை மொழிகின்றார்-

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை,
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி,
அங்கப் பறைகொண்ட வாற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன,
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே,
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்,
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்,
எங்கும் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்.

—திருப்பாவை-30

அலைகளெழும்பி மோதும் கடலைக் கடைந்தருள் செய்த, திருமாமகள் மார்பனும், கேசவனென்னும் பெயருடையவனு மான கண்ணனைப் போற்றுத்துதித்து வணங்கி, சந்திரனைப் போன்ற அழகார்ந்த முகத்தைப்பெற்றுள்ள, அணிகலன்களை அணிந்துள்ள ஆயர்குல வனிதையர், நோன்புக்கான பறை பெற்றமுறையினை,-அடிமைப்பணி பண்ணும்பேற்றினைப்பெற்ற வகையை-, அணிபெற்றுத்திகழும் ஸ்ரீவில்லிபுத்தூர் மகானும், பசுமையான தாமரை மலர்மாலையை எந்நாளும் அணிந்து விளங்குபவருமான ஆழ்வார் பட்டநாதனின் அருமை மகள் கோதைநாச்சியார் புனைந்தருள்செய்த சங்கத்தமிழ்ச்சொற்களா லான, மாலைக்கிணையேயான திருப்பாவை முப்பது பாசுரங் களையும், இங்கு, பாசுரங்கள் அமைந்துள்ள முறையில் பயின்றுப் பிழையின்றி ஓதுபவர்கள், மலைபோன்ற நான்கு தோள்களைப் பெற்றுள்ளவனும், செந்தாமரையையொத்த எழிலார்ந்த கண் களையுடையவனும், பொலிவு மிகுந்த வதனத்துடன் சேவை

தந்தருள்பவனுமான திருமாலால்,-திருமாமகள் மார்பனால்-, திருவருள் பெற்றவராய் எல்லா இடங்களிலும், எக்காலத்தும் இன்புற்றிருப்பர். -திருப்பாவை-30

நம்மாழ்வார், திருவிருத்தத்தில், திருமாலின் சக்கரப் படையும் அருள் நிறைந்தது என்று மொழிவார்-

அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும் பும்நிலனும்,
இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர், ஈங்கோர்பெண்பால்
பொருளோ எனும்இகழ் வோ?இவற்றின் புறத் தாளென்றெண்ணோ?
தெருளோம் அரவணை யீர், இவள் மாமை சிதைக்கின்றதே.
—திருவிருத்தம்-33

அனந்தனென்னும் அரவரசை, பள்ளியாகப்பெற்றிருக்கும் திருவரங்கநாதனே!-நீர் அருள் நிறைந்தவராயிருப்ப தோடன்றி-உமது படைகளும் அருள் பெற்றிருப்பவையே! அப்படி அருள் நிறைந்ததான திருநேமியைக் கைக்கொண்டு, அகன்று பரந்து விரிந்துவிசாலமாய் விளங்கும் திருவைகுந்தத் திலும், இந்நிலவுலகிலும், அறியாமையெனும் இருள் அகலு மாறு சிறந்துயர்ந்ததான ஆட்சி புரிபவராயிருக்கின்றீர்.-நிலைமைஇவ்வாறிருக்க-உம்மிடம் மோகம்கொண்டு உம்மையே மணாளனாகப்பெற்று மகிழ்வுறல் வேண்டும் என்று பேரார்வத் துடன் இருக்கும் இப்பேதைப்பெண்-பராங்குச நாயகியின்-உடலழகை அழித்தல்,இங்கு பெண் என்பது ஒரு பொருளன்று என்னும் எண்ணங்கொண்டு இகழ்வாக எண்ணுகின்றீரோ? அல்லது நம் ஆட்சி வரம்புக்குட் படாதவள் என்னும் நினைவு கொண்டோ? நாங்கள் அறிந்துள்ளோம் இல்லையே! தெரிவித் தருளவேணும். -திருவிருத்தம் 33

நாயகி, தன்நாயகன் திருமாலிடம். வரிகள் கொண்டுள்ள வண்டைத்தூது போகுமாறு வேண்டும் பாசுரத்தில், அருளாழி யம்மான் என்று பெருமான் அருள் நிறைந்தவன் என்று குறிப் பிடுகின்றனள்-

வண்டே! எனக்கு மட்டும் அருளாமலிருக்கும் எம்பெரு மானிடம் சென்று, ''பெருமானே! நீர் அருள் மிகக்கொண்ட வராயிற்றே! உம்மிடம் காதல் மிகக்கொண்டு உம் பிரிவால்

துயருற்றிருக்கும் உமது நாயகியின் உயிர் பிரிவதன் முன், அவள் இருக்கும் வீதி வழியாக ஒருநாளேனும் உமது புள்ளின் மீது ஏறிச்செல்லாமலிருப்பவராயுள்ளீர். நாம் என்ன பிழை செய்தோம்'' என்று மொழிந்தருள்வாயாக.

'அருளாத நீரருளி யவராவி துவராமுன்,
அருளாழிப் புட்கடவீர் அவர்வீதி யொருநாள்' என்று,
அருளாழியம்மானைக் கண்டக்கால் இதுசொல்லி-
யருள், ஆழிவரிண்டே! யாமுமென் பிழைத்தோமே?
—திருவாய்மொழி-1-4-6

உம்பர்கள் நாயகனாகிய உத்தமனை, அவனது அருளைக் கொண்டே பெறும் பொருட்டு, என் சிந்தையினுள்ளே இருத்திக் கொண்டேன். அவ்வண்ணம் நிகழ்ந்த செயலும் அவ்வெம்பெருமானின் இனிமை ததும்பும் அருளாலேயேயாம். இவ்வுலகின் கணுள்ள பொருள்களை உணர்ந்து கொள்ளும் அறிவும், ஆன்மாவும். மற்றும் கைவல்லிய நிலைவரைக்குமான பொருள்கள் யாவும் நிலையற்றவையே என்னும் தெளிவைப்பெற்றுள்ள நானும் அவ்வுத்தமனேயானான். என்னுள்வந்த எம்பெருமான் என்னையும் தானேயாகுமாறு செய்து கொண்டான்.-இங்கு பெருமானின் அருளை ''இன்னருள்'' என்று குறிப்பிடுகின்றார்.

உணர்வில் உம்பர் ஒருவனை
அவன தருளா லுறற்பொருட்டு, என்
உணர்வி னுள்ளே யிருத்தினேன்
அதுவும் அவன தின்னருளே.
உணர்வும் உயிரும் உடம்பும், மற்
றுலப்பி லனவும் பழுதேயாம்,
உணர்வைப் பெறவூர்ந் திறவேறி
யானும் தானா யொழிந்தானே.-திருவாய்மொழி-8-8-3

இப்பதிகத்தின், பயன்பகரும் பாசுரத்தில், தனக்குத் திருமாலின் திருவருள் பரிபூரணமாய் வாய்த்துள்ளதை, ''திருமாலால் அருளப்பட்ட சடகோபன்'' என்று புகல்கின்றார். மேலும் ''இப்பதிகம் திருவாய்மொழி ஆயிரத்தில் அடங்கிய பத்துப்பாசுரங்கள். இவற்றைப் பயில்பவர்களுக்கு, தெளிவு

ஏற்படுத்தி, மயக்க நிலையினையகற்றி, அருள் செய்து, கருநீல மாணிக்கவண்ணத்திருமேனியனை பெருமான் தன் தாளிணைக் கீழிருத்துவன்.'' என்று மொழிகின்றார்.-

கொடியேனான எனக்கும் பருகுவதற்கினிய அமுதா யினித்திடும் எம்பெருமானே! உன் திருவருளிலையெனில், என் வசத்தில் நில்லாத ஐம்புலன்களை வெல்லுதல் அரிது. உன்றன் திருவருள் துணைகொண்டே அவ்வைவரை நான் வெற்றி கொண்டு உன்னைப்புகலாகக் கொள்ளுதல் கூடும் என்றியம்பு கின்றார்-

துர்வாச முனிவரின் சாபத்தினாலே, வானுலகோரான தேவர்கள் தங்கள் உடமையாவற்றையும் இழந்து தவித்துத் துன்புற்றிருந்த நிலையில் இமையவர்களும் அசுரர்களும் மலையைக் கொணரவும் இயலாதவர்களாய்ப்பின் வாங்கிநின்ற காலையில், அலைகள் கிளர்ந்து மோதி எழும் கடலில் வாசுகி என்னும் பாம்பை, ஒப்பற்றதான மந்தரமலையைச்சுற்றி, கடை வதற்கேற்ற வகையில் மேலும் கீழும் அசைந்தெழாவண்ணம் அம்மலையை அமைத்த பெருமானே! எங்களுக்குத்தந்தையா யிருப்பவனே!, உன்னை நேரில் கண்டுகளிப்புறும் பேறு பெறாத கொடியேனான அடியேனும் பருகுவதற்கினிய அமுதமா யினிக்கும் இனியனே! உன்றன் திருவடியிணைகளில் சேர்க்கும் படிக்கான உனது திருவருள் எனக்குக்கிடைக்கவில்லையெனில், சொன்ன சொற்படி நிலைத்துநிற்காத ஒப்பற்ற ஐம்புலன்களென் னும் கொடியவர்களான கீழ்மக்களை என்று தான் நான் வெற்றி கொள்ளுதல் கூடும்?

தலைவி பெருமான்பால் கொண்டுள்ள காதல் நோயை விவரித்துத் தாயர்களிடம் உரைக்கும் பதிகத்தில்-

நீர்வண்ணமேனியனான கண்ணபிரானின் திருவருளில் இந்நாயகி நாள்தோறும் மூழ்கி அனுபவித்துக்களித்திருந்த திருவருள்களின் அடையாளங்கள்-குறியீடுகள்-இவள் வனப்பு மிகு மேனியில் நன்கு காண்கின்றன. பெருமானின் மார்பில் மன்னியிருந்தருளும் மாமலர்மங்கையின் அருளால்,இந்நங்கை யின் சிவந்த இதழ்கள், திருப்புலியூர், திருப்பதியில்,பெருமான் பெருமாட்டி-திருவருளால் நன்கு செழித்து வளர்ந்த பாக்கு மரத்தின் சிவந்த பாக்குப்பழத்தினை ஒத்திருக்கின்றன.

திருவருள் மூழ்கி வைகலும் செழு
நீர்நிறக் கண்ணபிரான்,
திருவருள் களும்சேர்ந் தமைக்கடை-
யாளம் திருந்தவுள,
திருவருள் அருளால் அவன்சென்று
சேர்தண் திருப்புலியூர்,
திருவருள் கமுகொண் பழத்தது-
மெல்லியல் செவ்விதழே. —திருவாய்மொழி-8-9-6

பெருமான்-கண்ணன்-, எனக்குத் திருவருள் நல்குபவனாய் என் மனத்தகத்தே புகுந்ததோடன்றி, உடனேயே, என் ஆன்மாவையும், என் உடலையும் உட்கொண்டவனானன். சிறப்பு மிகுந்துள்ள சோலைகளைப்பெற்றுள்ள அழகியதும், தென்னாட்டில் விளங்குவதுமான திருக்காட்கரை திவ்வியத் தலத்தில் காட்சி தந்தருள்பவனும், கருமையான திருமேனி பெற்றிருப்பவனுமான நமது கண்ணபிரானின் குறும்புச்செயல் களேயாம் இவை.-

திருவருள் செய்பவன் போலஎன் னுள்புகுந்து,
உருவமும் ஆருயிரும் உடனே யுண்டான்,
திருவளர் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்,
கருவளர் மேனிஎன் கண்ணன் கள்வங்களே.
—திருவாய்மொழி-9-6-5

அருள்புரிந்த சிந்தை அடியார்மேல் வைத்து,
பொருள்தெரிந்து காணகுற்ற அப்போது-இருள்திரிந்து
நோக்கினேன் நோக்கி நினைந்தேன் அது ஒண்கமலம்,
ஓக்கினேன் என்னையுமங் கோர்ந்து.
—பூதத்தாழ்வார்-இ.திருவந்தாதி-59

திருமங்கை மணாளன் கருணையுடன்கூடிய எண்ணத்தை, கருத்தை, தன்னையே தஞ்சமெனப்பற்றியுள்ள பக்தர்கள்மீது பதியப்பண்ணி, அவ்வடியவர்கட்குத் தேவையான பயன் யாதென்று அருள முற்பட்ட நிலையில், நான், அறியாமை அகலப்பெற்றவனாய், அருள்புரிய ஆயத்தமாய் இருக்கும் இனியனான பெருமானைக்காணப்பெற்றேன். கண்டு உணர்ந்த வுடன் அவனது அழகிய தாமரைத்திருவடிகளைச் சிந்தையிற் கொண்டேன். நன்கு ஆராய்ந்து விவேகம் பெற்றுள்ளவனான் என்னை அந்தத்தாமரைத்தாளிணையில் சேர்த்துவிட்டேன்.

இ.தி.59

அருளா தொழியுமே ஆலிலேமேல், அன்று
தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்-இருளாத
சிந்தையராய்ச் சேவடிக்கே செம்மலர் தூய்க் கைதொழுது,
முந்தையராய் நிற்பார்க்கு முன் —பேயாழ்வார்-மூ-திருவந்தாதி-19

உலகெலாம் நீரில் மூழ்கிய அவ்வூழிக்காலத்திலே, ஆல மரத்தின் ஓரிளந்தளிரிலேயில், தெளிவில்லாதவன் போலான சிறு மதலேயாய்ப் பள்ளிகொண்டிருந்த பிரான் தன்னடியார்க்கு அருள் புரியாமலிருப்பனோ?-இக்கேள்விக்கே இடமில்லை. அருளும் குணம் கொண்டிருக்கும் அவன் அருள்புரிபவனே.--ஆனால்-அறியாமையென்னும் நிலேயை அகற்றி நன்கு தெளிந்த மனமுடையவராய், அவனது பொற்புடைத்திருவடி களிலேயே நல்லவையேயான மலர்களைத்தூவி அருச்சித்து கை கூப்பி வணங்கி, நான் முன்னே, நான் முன்னே என்று பேரார் வத்துடன் அவனது அருள்பெறும் விழைவுள்ளவர்கட்கு முதன் முதலாக அருள் நல்குவான் அவ்வெம்பெருமான். மூ.தி.19

பயன்பகரும் பாசுரம்

தேவரையும் அசுரரையும் திசைகளையும்
கடல்களையும் மற்றும்முற்றும்
யாவரையு மொழியாமே யெம்பெருமான்
உண்டுமிழ்ந்த தறிந்துசொன்ன,
காவளரும் பொழில்மங்கைக் கலிகன்றி
ஒலிமாலே கற்று வல்லார்,
பூவளரும் திருமகளால் அருள்பெற்றுப்
பொன்னுலகில் பொலிவர் தாமே.
—திருமங்கையாழ்வார்—பெரிய திருமொழி 11-6-10

பதிகப்பயன் பாசுரம்

ஸர்வேச்வரனான புருடோத்தமன் திருமால், விண்ணவர், அசுரர், திசைகள், கடல்கள் மற்றுள்ளனயாவற்றையும் பிரளய காலத்தில் உண்டு தன் திருவயிற்றில் வைத்துப்பாதுகாத்து மீண்டும் படைப்புக் காலத்தில் முன்பிருந்த வண்ணமே யாவற் றையும் அவ்வற்றுக்குரிய இடத்தில் நிலேநிறுத்திய நிலேயினே,

அறிந்து தெளிந்த, சோலைகளால் சூழ்ந்துள்ள திருமங்கை நாட்டின் தலைவர் ஆழ்வார் கலிகன்றி அருளிய இனிய ஒலி யுடைய சொற்களாலான, மாலை போன்ற இப்பாசுரங்களைப் பயின்று, கற்று ஓதும் திறன் பெற்றவர்கள் தாமரைச்செம்மலர் மேல்வீற்றிருக்கும் திருமாமகளால் அருளப்பெற்றுப்பொன்னுல கில் வாழும்பேறு பெற்றவராவர். -பெரிய திருமொழி-11-6-10

திருமாமகள்-திருமாலவன் திருவருள் பெற்று
இன்புற்றிருப்போமாக.

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ:

தாமரையன்ன பொன்னாரடியே
போற்றியேத்துவோம்

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## தாமரைக்காடு

தாமரையாள் கேள்வன் தாமோதரன் தனிப்பெருந் தெய்வமாய்த்திகழ்பவன். அவனுக்கு நிகர் அவனே. அவனை, குருகைக்குலபதி, ''நிகரில் புகழாய்!, ஈடுமெடுப்புமில் ஈசன், ஒத்தார் மிக்காருமிலையாய மாமாயா!, இதுமிக்க பெருந் தெய்வம், தாமரையுந்தித்தனிப் பெருநாயக!, தாமோதரனைத் தனி முதல்வனை''-ஆகிய சொற்றொடர்கள் கொண்டு போற்றி ஏத்துவார் அவன் எண்ணற்கரியவன், நிகரிலாப்புகழ்படைத்த புனிதன், அவன் தமர்களையன்றிப்பிறர்க்கு நண்ணற்கரியவன். அவன் புகழும் அருளும் பண்பும், மாண்பும் மேன்மையும்,உயர் தனித்தன்மையும், பெருஞ்சிறப்பும் அளத்தற்கரியன. இவ்வித மாக அவன் தனி நின்ற தத்துவப்பொருளாய்த் திகழ்பவனா யினும், தன்னடியார்களுக்கு மிக-மிக எளியனாயிருந்து பரிந் தருளிப்பாதுகாக்கும் பண்பாளன் என்பது,அவனது அவதாரங் களில் பளிச்சிடுகின்றது.

இவ்வளவு இனியனான, இன்னருள் நல்குபவனான நாரணனின் திவ்வியத்திருமேனியைத் தங்கள் நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டுகளிப்பெய்திய மாமுனிவர்களானஆழ்வார் கள், அவன் திருமேனி தாமரைக்காடு பூத்தது போன்று பேரெழில் பெற்றுத் திகழ்கின்றதென்பர். அவனது தாள்களும் தாமரையே தடங்கைகளும் தாமரையே, திருக்கண்களும் தாமரையே, வதனமும் தாமரையை வெல்வதே என்பர்.

பத்மநாபாயநம:, புண்டரீகாக்ஷாயநம:, குமுதாய நம:, பத்மினே நம:- என்பவை, ஸகஸ்ர நாமத்தில் வரும் எம்பெரு மான் பெயர்கள். இச்சொற்களின் பொருள் தாமரை. ''புஷ்ப ஹாஸாய'' நம:என்பதும் எம்பெருமான் திருப்பெயரே!இதுவும் அவனது ஆயிரம் புனிதப்பெயர்களில் ஒன்று. இதன் பொருள் பெருமான் மலர்ந்த மலர்போல் மந்தஹாஸனாய்க் காண்பவன் என்பதாம்.

பாத அம்புஜம், பாதகமலம். சரணகமலம்-ஆகிய சொற் களின் பொருள் திருவடித்தாமரை என்பதாம்.

புண்டரீகாக்ஷன், அரவிந்தாக்ஷன் கமல நயனன்-என்னும் சொற்களுக்கிணையாக, ''கமலக்கண்ணன்-என் கண்ணினுள் ளான்'' என்பார் நம்குருகூர் நம்பி.

இவ்வண்ணம் தாமரையையும் மிஞ்சும் அவயங்களைப் பெற்றுள்ள பேராயிரத்தான் மன்மதனுக்கும் மன்மதனாய்த் திகழ்பவன்.

''தாஸாமாபிரவீச்சௌளரி ஸ்மயமான முகாம்புஜ:l
பீதாம்பர ஸர ஸ்ரக்வீ ஸாக்ஷான் மன்மத மன்மத:ll''

என்பது ஆய்க்குல ஆரணங்குகள் கண்ணனைக்கைகுவித்து அஞ்சலித்துப்போற்றிய சுலோகம்.

இனி ஆழ்வார்களின் இன்தமிழ்ப்பாசுரங்கள் கொண்டு நீலமேனி வண்ணனின் தாமரைக்கிணையான அவயங்களின் அழகினை அனுபவித்துக் களிப்புறுவோம்-

தென்குருகூர்ப்புனிதன் நம்மாழ்வார் தாம் பண்ணார் தமிழில் அருளிய திருவிருத்தம், திருவாசிரியம்,திருவாய்மொழி

மூன்று பிரபந்தங்களிலும் தமக்கு அருளிய ஆயிரம் பேருடைய அண்ணலின் அவயவங்களை தாமரைக்கிணையாக வருணித்தினி யராகிறார். உரிய பாசுரங்கள் முறையே வருமாறு-

கண்ணும்செந் தாமரை கையும் அவைஅடி யோஅவையே,
வண்ணம் கரியதோர் மால்வரை போன்று, மதிவிகற்பால்
விண்ணும் கடந்தும்பர் அப்பால்மிக் குமற்றைப் பால்எவர்க்கும்,
எண்ணும் இடத்தது வோ,எம்பி ரான தெழில்நிறமே?

—திருவிருத்தம்-43

தாமரையாள் மார்பனான எம்பெருமானின் திருக்கண்கள் செந்தாமரைப்பூவையும் மிஞ்சும் வனப்புமிகுந்துள்ளவை. திருக்கைகளும்,திருத்தாள்களும் தாமரையாகவே விளங்குவன இவ்வாறாக தாமரையைக் காட்டிலும் பொலிவார்ந்த அவயவங்களுடன் காணப்படும் பெருமானின் தேசுமிகுந்த திருமேனியின் அழகுயர்வு, கருமையான ஒரு பெரிய மலையானது, சுவர்க்கம், வானுலகம், அதற்கும் மேன்மேலே இருக்கும் எவ்வுலகத்தாராலும் எண்ணற்கரியதாய், (மதி. புத்தி பலபடியாக மாறுபடக்கூடியதாகையால்), உள்ளது. மேற்சொன்ன உலகத்தவர் யாரேனும் எம்பெருமான் திருமேனியின் எழில் வண்ணத்தை நினைத்து எண்ணும் திறன் பெற்றுள்ளவரோ? ஒருவருமிலர்.

திரிவிக்கிரமனாய், ஓங்கியுலகளந்த உத்தமனின் தனி உயர் மாண்பினை வருணித்து அருளும் பாசுரத்தில் ''தாமரைக் கண்ணன்'' எனக்குறிப்பிடுவார்-

கழல்தலம் ஒன்றே நிலமுழு தாயிற்று, ஒருகழல்போய்
நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்தது, நீண்ட அண்டத்து
உழறலர் ஞானச் சுடர்விளக் காய்உயர்ந் தோரையில்லா
அழறலர் தாமரைக் கண்ணன், என் னேஇங் களக்கின்றதே?

திருவிருத்தம்-58

நிலவுலகம் முழுவதும், உத்தமனான திரிவிக்கிரப்பெருமானின் ஓர் உள்ளங்காலுக்கே உட்பட்டதாயிற்று. மற்றொரு திருத்தாள் வானில் அண்டபித்திக்கும் மேற்புறத்தில் சென்று கீழ்ப்புறமெங்கும் நிழல் அளிக்கும் வண்ணம், வானுலகமெங்

கணும் நிறைந்து திகழ்வதாயிற்று. அன்றியும், நீண்டு அகன்ற விண்ணுலகமடங்கலும் சஞ்சரிப்பதும் பரவியதுமான ஞான மாகிய ஒளியையுமுடைய சோதிமயமேயான உருவுடையனுகி, தனக்கு மேம்பட்டவரோ, இணையாகவோ, ஒருவருமில்லாதவ னுன, ஆழமான சேற்றினிற்ருேன்றி மலர்ந்த செந்தாமரைக் கிணையான திருக்கண்களையுடைய எம்பெருமான்என்னைப்பற்றி எண்ணியிருப்பது, மதிப்பிட்டிருப்பதுயாதோ? அறிந்துள்ளே னில்லையே! தி.வி-58

.......தாமரைக் காடு

மலர்க்கண் ணுேடு கனிவா யுடையது-
மாய், இரு நாயி ருயிரம் மலர்ந்தன்ன,
கற்பகக் காவு பற்பல அன்ன,
முடிதோ ளாயிரம் தழைத்த,
நெடியோய்க் கல்லதும் அடியதோ உலகே? திருவாசிரியம்-5

பணிவிடைகட்கு முதல் நிலையான தாமரை மலருக் கிணையான திருத்தாளிணைகளில் ஒன்றினை உயர்த்தாமல் வைத்து மலர்த்தி-பரப்பி-நிலம் முழுவதையும் அவ்வடியின் கீழ் அடங்குமாறு பண்ணி எழிலும் ஒளியுங்கொண்ட மற்ருெரு அரவிந்த அடியை பிரமன் உலகிலுள்ளோர் யாவரும் வியந்து களிப்புறுமாறும், விண்ணவர் அனைவரும் நெறிமுறைப்படி தகுதிக்கேற்ப பூசனை பண்ணும் படியும், மேலுலகுக்குச்செலுத்தி காடு போன்று அடர்ந்த தாமரைமலர்ந்தது போன்ற இணைந்த திருக்கண்களையும், கொவ்வைப் பழத்திற்கிணையான செவ்விய திருப்பவள வாயையும் உடைத்தான பொற்புடைத்திருமேனி யாய் ஆயிரம் பெரிய பகலவன்கள் பேரொளி வீசித்திகழ்ந்தாற் போன்று திருமகுடத்துடன், அளவிலடங்காத கற்பகச்சோலைகட் கொப்பான தோள்களாயிரத்துடன் கூடிய திருவிக்கிரப்பெருமா னுன உனக்கன்றியும், பிறிதொருவருக்கு-மற்ருெருவருக்கு-, இவ்வுலகம் அடிமைப்படத் தகுமோ? திருவாசிரியம்-5

பற்பல பாசுரங்களில், பெருமான் தாமரை மலரை மிஞ்சிடும் கண்ணழகு பெற்றுத்திகழ்பவன் என்றியம்புவார்- தண்தாமரைக் கண்ணனை, தாமரைக் கண்ணுெடு மறப்பற என்னுள்ளே மன்னினுன், கருகிய நீல நன்மேனி வண்ணன்

செந்தாமரைக்கண்ணன், காவிநன்மேனி கமலக்கண்ணன், செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான், நேரா வாய் செம்பவளம் கண் பாதம் கைகமலம், செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம். மின்னும் சுடர்மலைக்குக் கண் பாதம் கைகமலம்,.......கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கையொவ்வா-இங்கு, 'பெருமானே! நின்றன் எழில்மிகு கண்களும்,வனப்புமிகு கை-கால்களும் தாமரையைக்காட்டிலும் பொலிவார்ந்தவை. தாமரைப்பூ உன்றன் கண்களுக்கும், கை-கால்களுக்கும் இணையாக மாட்டா'' என்று மொழிகின்றார்-. பங்கயக்கண்ணன், செய்ய தாமரைக்கண்ணன்......, செஞ்சுடர் தாமரைக்கண்செல்வன்,செய்யகமலக்கணணன்,செந்தாமரைக் கண்ணு!, மாண்குறள் கோலப்பிரான் மலர்த்தாமரைப் பாதங்களே,....... புண்டரீகங்கள் போலும் கண்ணன், பற்பபாதா, தாமரைக்கையா, மலரடிப்போதுகள்,...... திருச் செய்ய கமலக்கண்ணும் செவ்வாயும்செவ்வடியும் செய்யகையும் திருச்செய்ய கமல உந்தியும் செய்ய கமல மார்பும்,தாமரை நீள் வாசத்தடம் போல் வருவானே!, தேநீர் கமலக்கண்களும் வந்தென் சிந்தைநிறைந்தவா!,...... மண்விண்முழுதும் அளந்த ஒண் தாமரை,தாமரை போல் திருமார்பு கால் கை செவ்வாயுந் தியானே!. கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக்காடு கள் போல், திருமார்பு வாய் கண் கை உந்தி காலுடை ஆடை கள் செய்ய பிரான்,......., செந்தாமரைக்கண் என்னம்மான், செந்தாமரைக் கண் திருக்குறளன், அல்லிக் கமலக்கண்ணன் (னை)......பாதபங்கயம், கோலத்தாமரைக்கட் செவ்வாய், தண் பெருநீர்த் தடந்தாமரை மலர்ந்தாலொக்கும் கண்பெருங் கண்ணன், செங்கமலத்தலர் போலும் கண் கை கால் செங்கனி வாய், அக்கமலத்திலை போலும் திருமேனி அடிகளுக்கே,...... அல்லியந்தாமரைக்கண்ணன்,கமல நயனத்தன்,......தாமரைக் கண் கருமாணிக்கமே!- ஆகிய பாசுரத்தொடர்களைக்கொண்டு, பங்கயத்தாள் மார்பன்,தாமரைக்காடு பூத்தது போன்றுதிகழும் திருமேனி அவயவங்களுடன் சேவை தந்தருள்கின்றான் என்று உணர்த்துகின்றார்.

பேயாழ்வார் தாம் இயற்றியருள் செய்த மூன்றாம் திருவந்தாதியில், ''அடிவண்ணம் தாமரை,

**கண்ணுங் கமலம் கமலமே கைத்தலமும்,**
**மண்ணளந்த பாதமும் மற்றவையே,—எண்ணில்**
**கருமா முகில் வண்ணன் கார்க்கடல் நீர்வண்ணன்,**
**திருமா மணிவண்ணன் தேசு,**

படிவட்டத்தாமரை,....அடித்தாமரை மலர்மேல்மங்கை மணாளன், அடித்தாமரையாம் அலர்'' என்றவாறுக, முறையே 5,9,13.96 ஆகிய பாசுரங்களில், தாமரையாள் கேள்வன் தாமரை மலர்ந்தாற்போன்று தன்ஒளி திகழும் திருமேனியுடன் காட்சி தந்தருள்பவன் என்று பேசுவார்.

அன்னை யசோதை தன் செல்வன் கண்ணனின் திருமேனி எழில்மிகு அவயவங்களைக்காண ஆய்க்குல அணங்குகளை அழைப்பதாக வருணிக்கும் பாடற்றெகுதியில், ''பாதக்கமலங் கள் காணீரே'' எனவும், தாலாட்டுப்பதிகத்தில், ''தாமரைக் கண்ணனே தாலேலோ'' பங்கய நீள் நயனம், என்றும் ஒண்ணிறத்தாமரைச்செங்கண் உலகளந்தான் என்றும் பெரி யாழ்வார், பெருமானின் திருவடியிணைகளும், திருக்கண்களும் தாமரை மலருக்கிணையாகத் திகழ்வனவாகத் தாம் அருளிய திருமொழியில் மொழிவார்.

கோதை நாச்சியார், கண்ணு!-.... சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து, உன் பொற்றுமரையடியே போற்றும் பொருள் கேளாய்!....'' என்று எம்பெருமான் தாளிணைகள் பொற்றுமரையை ஒத்துத்திகழ்வன என்று திருப்பாவை, முதல் சாற்றுப்பாடலில் பகர்வார்.

...அம்மான் தன் மலர்க்கமலக்கொப்பூழ்...,பாதமாமலர்,- மாமலர் தாமரையைக்குறிக்கும்,- தண்ணந்தாமரைக் கண்ணனே! கண்ணு!...என்னும் தொடர்களால் குலசேகரப் பெருமான், கண்ணனின் திருவடிகளும்,கண்களும் பங்கயத்தை ஒத்திருப்பன என்று பேசுகின்றார்.

''கங்கைநீர் பயந்த பாத பங்கயத்தெம் அண்ணலே!..''
என்னும் தொடர் திருமழிசைப்பிரான் அருளியது.

தொண்டரடிப்பொடிகள்,தாம்புனைந்தருளிய ''திருமாலை'' பிரபந்தத்தில், ''....தாமரைக் கண்ணனெம்மான்,....தூய

தாமரைக்கண்களும்,'' என்று பெருமானின் கண்கள் தாமரை மலரை ஒத்திருக்கின்றன என்று அருள்கின்றார்.

திருமங்கை மன்னன் அருளியவை—....தாமரையன்ன கண்ணும்,....தாயாய் அளிக்கின்ற தண் தாமரைக்கண்ணா!, ....தாமரையன்ன பொன்னாரடி எம்பிரானை, ''அடித்தலமும் தாமரையே, அங்கைகளும் பங்கயமே'' என்கின்றாளால்,

கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்,
....,
.....
கைவண்ணம் தாமரை வாய் கமலம் போலும
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே,
.....

கம்பராமாயணத்தில் ஸ்ரீராமபிரானின் திருமேனி அவயவங்கள் அரவிந்தப்பூவையும் மிஞ்சும் எழில் படைத்துத்திகழ்பவை என்று வருணிக்கும் பாடற்றொடர்கள்—

தேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கி அருளிய, வம்பவிழ் போதமர் மாதருகந்த மாநிதியான செல்வநாரணன் தேவர்களுக்குக் காட்சி நல்கியதை வருணிக்கும் பாடல்-

கருமுகில் தாமரைக்காடு பூத்து நீடு
இருசுடர் இருபுறத்து ஏந்தி ஏந்து அலர்த்
திருவொடும் பொலிய ஓர் செம்பொன் குன்றின்மேல்
வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினான்
-பாலகாண்டம்-திருஅவதாரப்படலம்-192

ஸ்ரீமந்நாராயணன், திருமாமகளான பெரியபிராட்டியாருடன், தாமரைக்காடு பூத்தாற்போன்ற திருமேனி திகழ. பேரெழிலுடன் ஓர் செம்பொன் மலைமீது வருவது போன்று புள்ளரசின் மீதமர்ந்து வந்து சேவை தந்தருளினான்.

ஆரணிய காண்டம்-சடாயு உயிர் நீத்தபடலம்-948

தெண்திரைக் கலம் விரைவில் செல்கின்றான்
புண்டரீகத் தடங்காடு பூத்து ஒரு

கொண்டல் வந்து இழிந்தன கோலத்தான் தனைக்
கண்டனன் மனம் எனக்களிக்கும் கண்ணினன்.

தெளிந்த அலைகளைக் கொண்டுள்ள கடலில் விரைவாகச் செல்லும் கப்பலைப்போல் வெகு துரிதமாகச் சென்ற இலக்குமணன், தாமரைக்காடு பூத்தது போன்ற பொலிவார்ந்த திருமேனி பெற்று, ஓர் கரிய முகில் பூமியின்கண் இறங்கி வந்ததைப்போன்று தோன்றும் ஸ்ரீராமபிரானைக்கண்டு மனம் களிப்புற்றவனாயினன்.

தாமரையாள் மார்பனின் தாமரைத்தாளிணைகளையே
தஞ்சமெனக்கொள்வோமாக.

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!



ஸ்ரீ :

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி,
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்,
தெழிகு ரல்அரு வித்திரு வேங்கடத்து,
எழில்கொள் சோதி எந் தைதந்தை தந்தைக்கே. -திருவாய்மொழி3-3-1

| அருளாழிப்பெருமான் செய்யும் அந்தமிலா<br>உதவிபெற விழைவு கொள்வோம் |
|---|

ஸ்ரீமந்நாராயணா! ஸ்ரீமந்நாராயணா!! ஸ்ரீமந்நாராயணா!!!

## எங்கள் குலதெய்வம்

எங்கள் குலதெய்வம் ஏழுமலையில் அருளும் தெய்வம்,
நங்கள் நலம் காக்கும் தெய்வம் நாரணனென்னும் தெய்வம்,
தங்கவிமானத்தெய்வம் தாயாய் அருளும் தெய்வம்,
சங்கிடம் கொண்ட தெய்வம் சார்ங்கமேந்தும் தெய்வம். 1

அன்பர்க்கருளும் தெய்வம் ஆழிகைக்கொண்டதெய்வம்,
துன்பம் நீக்கும் தெய்வம் தூமணி வண்ணத்தெய்வம்,
இன்பம் அளித்திடும் தெய்வம் ஈசனெனப்படும் தெய்வம்,
கம்பத்தில் தேன்றிய தெய்வம் கார்வண்ணமேனித்தெய்வம் 2

வெவ்வினை தீர்க்கும் தெய்வம் வேங்கடமாமலைத்தெய்வம்,
பௌவத்தில் துயிலும் தெய்வம் பாரிடந்தருளியதெய்வம்,
மௌவை-தாய்-யாய் அருளும் தெய்வம் மாமணி வண்ணத்
தெய்வம்,
தெய்வங்கட்கெல்லாம் தெய்வம் தேசொத்தாரிலையெனும்
தெய்வம் 3

எளியோர்க்க ருளும் தெய்வம் ஏழைக்கிரங்கும் தெய்வம்,
அளியோர் விரும்பும் தெய்வம் ஆரணப்பொருளாம் தெய்வம்,
களிறுக்கருளிய தெய்வம் காக்கும் கருத்துடைத்தெய்வம்,
தெளிவைத்தந்திடும் தெய்வம் தேன்துழாய் முடியுடைத்
தெய்வம் 4

பத்தர் விழையும் தெய்வம் பாட்டினிற்றேன்றும் தெய்வம்,
அத்தனுமாகும் தெய்வம் ஆயிரம் பேருடைத்தெய்வம்,
மத்தால்மொத் துண்டதெய்வம் மாயச்செயல் புரிந்த தெய்வம்,
சத்திய உருவானதெய்வம் சாமிக்கும் சாமியாம் தெய்வம் 5

திருவோணத்துதித்த தெய்வம் தீர்த்தனாய் நிற்கும் தெய்வம்,
வருமிடர்நீக்கும் தெய்வம் வாழ்வளித்தருளும் தெய்வம்,
கருமபலனாம் தெய்வம் கார்முகில் மேனித்தெய்வம்,
தரும உருவான தெய்வம் தார்துழாயணியும் தெய்வம். 6

அன்பர்க்கன்ப னாந்தெய்வம்-ஆழ்வார்கள் போற்றும்தெய்வம்,
கன்ம வினைதீர்க்கும் தெய்வம் கார்முகில் வண்ணத்தெய்வம்,
மனத்திலுறையும் தெய்வம் மாதவனென்னும் தெய்வம்,
உன்னுவோர்க்குதவும் தெய்வம் ஊழி முதல்வனாந்தெய்வம் 7

திருவுக்கும் திருவாகியதெய்வம் தீராதவினை தீர்க்கும்தெய்வம்,
அருமறை போற்றும் தெய்வம் ஆராவமுதமாம் தெய்வம்,
திருமகளுறையும் தெய்வம் தீர்ப்பளித்தருளும் தெய்வம்,
உருவுகரந்திருக்கும் தெய்வம் ஊரெல்லாம் தோன்றும்
தெய்வம் 8

புவிதனில் வந்த தெய்வம் பூமங்கை வாழும் தெய்வம்,
கவிஞர்கள் போற்றும் தெய்வம் காண இனியனாந்தெய்வம்,
தவிப்போர்க்கருளுந் தெய்வம் தானம்பெற நடந்த தெய்வம்
சவி-அழகு-மிகுகாணும் தெய்வம்சார்விலாத்தெய்வம் காணீர் 9

கண்ணனாய் வந்ததெய்வம் கார்திரள் மேனித்தெய்வம்,
மண்மீது நடந்த தெய்வம் மாமலை வீழ்த்திய தெய்வம்,
மண்ணையுண்டுமிழ்ந்த தெய்வம் மாண்புடன் காணும் தெய்வம்,
பண்ணினிற்றேன்றும் தெய்வம்பாவலர்போற்றும் தெய்வம் 10

இராமனாய் வந்த தெய்வம் ஈரைந்தாய்த் தோன்றிய
தெய்வம்,
மராமரம் துளைத்த தெய்வம் மாமங்கை வாழும் தெய்வம்,
வராகமாய்த்தோன்றிய தெய்வம் வாரணம் காத்த தெய்வம்
சராசரம் காக்கும் தெய்வம் சாரதியுமான தெய்வம் 11

மலைமீது நிற்கும் தெய்வம் மாபெருந்தெய்வம் காணீர்!,
சிலைகொண்டு வென்ற தெய்வம் சீதைமணாளன் தெய்வம்
அலைமகளன்பன் தெய்வம் ஆழ்கடல் கடைந்த தெய்வம்,
சிலையினில் தோன்றும் தெய்வம் ஸ்ரீநிவாஸனென்னும்
தெய்வம் 12

வைகுந்தனென்னும்தெய்வம் வானோர்க்கும் அருளுந்தெய்வம்,
மைவண்ணமேனித்தெய்வம் மாமாயனென்னும் தெய்வம்,
ஐம்படை கொண்ட தெய்வம் ஆறிரண்டில் காணும் தெய்வம்,
பையரவில் இருக்கும் தெய்வம் பாம்பணையில் துயிலும்
தெய்வம் 13

குணங்களேகாணும் தெய்வம் கூனற்சங்குடைத்தெய்வம்,
வணங்கினோர்க்கருளும் தெய்வம் வானார் சோதித்தெய்வம்,
இணங்கி அருளும் தெய்வம் ஈன்துழாய் புனையுந்தெய்வம்
உணர்வோர்க்குதவும் தெய்வம் ஊனமேதுமிலாத தெய்வம் 14

எட்டெழுத்துடைய தெய்வம் ஏதமொன்றுமிலாத தெய்வம்,
பாட்டாடை அணியுந்தெய்வம் பாங்குடனருளுந்தெய்வம்,
கட்டழகு மிளிரும் தெய்வம் காத்திடவே நிற்கும் தெய்வம்
தட்டின்றி அருளும் தெய்வம் தாரணி காக்கும் தெய்வம் 15

குற்றம் காணாத்தெய்வம் கூத்தாடி மகிழ்ந்த தெய்வம்,
நற்றமே காணும் தெய்வம் நான்மறைப் பொருளாந்தெய் வம்,
கற்றினம் மேய்த்த தெய்வம் காண்போர்க்கிரங்கும் தெய்வம்,
உற்றவர்க்குதவும் தெய்வம் ஊற்றமாய்த்தோன்றும்
தெய்வம் 16

புரிநூலணிந்திடும் தெய்வம் பூசனையேற்கும் தெய்வம்,
கரியினைக்காத்த தெய்வம் காரிமாறன் போற்றும் தெய்வம்,
சரிநிகரிலாத தெய்வம் சார்பு தந்தருளும் தெய்வம்,
பரிமுகனாய் வந்த தெய்வம் பார்த்தசாரதியாம் தெய்வம். 17

கலியன் போற்றும் தெய்வம் காக்கும் இயல்புள்ள தெய்வம்,
நலிவோர்க்கருளும் தெய்வம் நானிலம் காக்கும் தெய்வம்
கலி நீக்கியுதவும் தெய்வம் காண்போர்க்கு இனிக்கும் தெய்வம்
வலியவே அருளும் தெய்வம் வானோர்க்கும் இனியனாம்
தெய்வம் 18

கன்னலாயினிக்கும் தெய்வம் கானத்தில் மகிழும் தெய்வம்
அன்னமாய் வந்த தெய்வம் ஆரணம் சொன்ன தெய்வம்,
மன்னனாய் வந்த தெய்வம் மாசிலாத் தெய்வங்காணீர் !
நன்னயம் நல்கும் தெய்வம் நாதனுமாகும் தெய்வம். 19

திருமாலென்னும் தெய்வம் தீங்கு தவிர்த்திடும் தெய்வம் 20
பெருமாளெனப்படும் தெய்வம் பேரருளாளனாந் தெய்வம்,
திருமாமகள் மார்பன் தெய்வம் தீந்தமிழ் கேட்கும் தெய்வம்
திருமலைமேல் நிற்கும் தெய்வம் தீஞ்சுவைப்பழமாம் தெய்வம்

எல்லார்க்கும் அருளும் தெய்வம் ஏந்திழை மார்பன் தெய்வம்,
கல்லார்க்கு முதவும் தெய்வம் காகுத்தனென்னும் தெய்வம்,
பல்லாரும் போற்றும் தெய்வம் பாரளந்த தெய்வம் பாரீர்,!
நல்லார்க்கே அருளும் தெய்வம் நாமெல்லாம் வணங்கும்
தெய்வம். 21

நற்பொருளான தெய்வம் நாராணனென்னும் தெய்வம்,
கல்லைப் பெண்ணாக்கிய தெய்வம் காரிகைக்கருளிய தெய்வம்
வெற்பினில் நிற்கும் தெய்வம் வேதநல் விளக்கெனும் தெய்வம்
சொற்பொருளான தெய்வம் சோதியாய்த்திகழும் தெய்வம் 22

திருத்துழாயணிந்திடும் தெய்வம் தீயோரைத்தீர்க்கும்தெய்வம்
கருத்தினில் தோன்றும் தெய்வம் காப்புக்குரிய தெய்வம்,
வருத்தம் போக்கும் தெய்வம் வாட்படை கொண்ட தெய்வம்,
அருத்தமாய் நிற்கும் தெய்வம் ஆதரித்தருளும் தெய்வம் 23

உள்ளத்துள் உறையும் தெய்வம் ஊரும்தேர் நடாத்திய
தெய்வம்,
கள்ளத்தில் காணுத்தெய்வம் காளைகளடர்த்த தெய்வம்,
தள்ளத்துணியாத தெய்வம் தாமோதரனென்னும் தெய்வம்
வெள்ளத்தில் துயிலும் தெய்வம் வேலையடைத்திட்ட
தெய்வம் 24

கொண்டல் வண்ணனுந்தெய்வம் கோதையின் கொழுநனுந்
தெய்வம்,
பண்டு முதல் காக்கும் தெய்வம் பாரெல்லாம் நடந்த
தெய்வம்,
பண்டை அளித்திடும் தெய்வம் பார்மகள் மணளன் தெய்வம்,
மண்டலமிழிந்த தெய்வம் மாயனுந்தெய்வம் பாரீர்! 25

தப்பாமல் காக்கும் தெய்வம் தாயினுமாகும் தெய்வம்,
அப்பனுயருளும் தெய்வம் ஆயர்தலைவனுந் தெய்வம்,
கப்பம் பெற்றிடும் தெய்வம் காண்பதற் கினிய தெய்வம்,
செப்பமுடைய தெய்வம் சேமம் நல்கிடும் தெய்வம். 26

மனத்துக்கினியனுந் தெய்வம் மாமை மிகுந்த தெய்வம்,
வனப்புடன் தோன்றும் தெய்வம்,வானவர் போற்றும் தெய்வம்
மனக்குறை போக்கும் தெய்வம் மாமகள் கேள்வன் தெய்வம்,
தனக்கு நிகரிலாத்தெய்வம் தரமரையாள் மார்பன்
தெய்வம் 27

விண்ணினின்றிறங்கிய தெய்வம் வீணர்க்கருளாத்தெய்வம்,
மண்ணினில் நடந்த தெய்வம் மாடளித்துதவும் தெய்வம்
தண்டுழாய் சூடும் தெய்வம் தாய்க்கு உருகாட்டிய தெய்வம்,
வெண்ணெய் புசித்த தெய்வம் வேங்கடமலைவாழ் தெய்வம் 28

முடியினில் துளபத்தெய்வம் மூன்றெழுத்தின் பொருளாந்
தெய்வம்,
மிடிதவிர்த்தருளும் தெய்வம் மீனமாய் வந்த தெய்வம்,
கடிகமழ் மாலைத்தெய்வம் காணுவோர் களிக்கும் தெய்வம்
படியிலாத்தெய்வம் பாரீர் பாடினால் மகிழும் தெய்வம். 29

குழலூதி நிற்கும் தெய்வம் கூனிக்கருளிய தெய்வம்,
பழத்திலும் இனிக்கும் தெய்வம் பாரதம் நடாத்திய தெய்வம்,
கழலிணை காட்டும் தெய்வம் காயாம் பூமேனித்தெய்வம்,
பிழை பொறுத்தருளும் தெய்வம் பீதக வாடையணியும்
தெய்வம் 30

புனிதம் தந்திடும் தெய்வம் பூமன்னு மாதுடைத்தெய்வம்,
கனிவுடன் காணும் தெய்வம் காட்சி தந்தருளும் தெய்வம்,
மனிதனாய் வந்த தெய்வம் மான்நோக்கி உகக்கும் தெய்வம்,
பனிவண்ணமேனித்தெய்வம் பார்ப்போர்உகக்கும் தெய்வம் 31

தெய்வ வடமலைத்தெய்வம் தேனார் தமிழ் கேட்கும் தெய்வம்,
வையமுண்டுமிழ்ந்த தெய்வம் வாட்கலியன் போற்றும்தெய்வம்
வையமிடந்ததெய்வம் வானுளோரும் வணங்கும் தெய்வம்
வைய மளந்த தெய்வம் வான் வழி காட்டும் தெய்வம் 32

அலர்மேல் மங்கையுறை மார்பன்

திருவேங்கடத்தெம்பெருமான் திருவடி சரணம்

செல்வநாரணா! செல்வநாரணா!! செல்வநாரணா!!!

அருஞ்சொற்பொருள் :

ஊற்றம்-பற்றுக்கோடு, சார்பு-அடைக்கலம், கலி-துன்பம், நன்னயம்-நலம், நன்மை, பண்டை-கல்வி, ஞானம், செப்பம்-ஒப்புரவு, நடுநிலை, மாமை-அழகு.



ஸ்ரீ :

சோதி யாகியெல் லாவுல கும்தொழும்,
ஆதி மூர்த்தியென் றுல்அள வாகுமோ?,
வேதி யர்முழு வேதத் தமுதத்தை,
தீதில் சீர்த்திரு வேங்கடத் தானையே. —திருவாய்மொழி-3-3-5

| வேங்கடத்தண்ணலையே<br>நாளும் வேண்டுவோம் |
|---|

ஸ்ரீமந்நாராயணு! ஸ்ரீமந்நாராயணு!! ஸ்ரீமந்நாராயணு!!!

## வேங்கடத் தண்ணல்

வேங்கடத் தண்ணல் அவன் வேண்டும் வரந்தருவான்,
ஆங்கிருந்தனைவரையும் தன்பால் ஈர்த்திடுவான்,
ஓங்கு மலையுச்சியில் ஒளியாய்த் திகழ்கின்றுன்,
நாங்கள் நாளும் போற்றிடும் நலந்தரும் நம்பெருமான் 1

பெருமானவன் பேரருளாளன் பேராயிரத்தான்,
திருமாமகளைத்தன் திருமார்பில் ஏற்றிருப்பான்,
கருமுகில் வண்ணன் கமலையின் மணுளன்,
அருமறைப் பொருளான வேங்கடத்தண்ணலே! 2

அண்ணல் அவன்தன் அடியிணை பணிவோர்,
திண்ணம் அவனருள் பெற்றுய்ந்திடுவார்,
கண்ணன் கழல்கள் கருத்துடன் காண்போம்,
தண்ணந் துழாயணிந்திடும் வேங்கடத்தண்ணலே! 3

'அண்ணலே!' என்றுல் அருட்கரம் நீட்டுவான்,
'கண்ணனே!' என்றுல் கருணையாய் நோக்குவான்,
'அண்ணு!' என்றுல் ஆதரவளிப்பான்,
பண்ணுர் தமிழுகக்கும் வேங்கடத்தண்ணலே! 4

தமிழ்மறை கேட்கவே தரணியுல் வந்து நின்றான்,
அமிழ்தாயினிப்பான் அடியவர்க் கென்றும்,
உமிழ்ந்தான் மண்ணை உதரத்தில் கொண்டு பின்,
சுமந்தான் குன்றம் அன்று வேங்கடத் தண்ணலே. 5

காசினியில் வந்து நின்றுன் காக்கும் கருத்துடனே,
தேசுடைத்தேவன் தேன்துழாய் முடியன்,
பாசமுடன் செல்வோர் பரமனருள் பெற்றிடுவார்,
கேசவனுமவன் வேங்கடத்தண்ணலே, 6

மேனியெலாம் மலர் மாலை மணங்கமழும்,
மேனியெலாம் பொன் அணிகள் மினுமினுக்கும்
மேனியெலாம் பட்டாடை பளபளக்கும்,
தேனினும் இனியனவன் வேங்கடத்தண்ணலே. 7

சந்நிதியில் சந்தனம் கம கமக்கும்,
பன்னிருவர் தமிழும் இனிதொலிக்கும்,
மின்னு புரிநூலினர் மறையொலிக்கும்,
கன்னலாயினிக்கும் வேங்கடத்தண்ணலே. 8

கோதையின் மாலையுகந்த கோவிந்தன்,
ஓதுவார் அவன் பெயர் உயர்வே பெற்றிடுவர்,
போதுவாழ் மாமங்கையின் மணாளன்,
வேதப்பொருளான வேங்கடத்தண்ணலே! 9

திருவடி வணங்கின் தீவினையகலும்,
இருகரம் கூப்பின் இன்முகம் காட்டுவான்,
தருவான் திருவருள் தமர்கட் கென்றும்,
மறுவுடை மார்பன் வேங்கடத்தண்ணலே. 10

இன்பம் பெறலாம் இணையடி ஏத்தினால்,
துன்பம் தொலையும் சுடரடி தொழுதால்,
கன்ம வினைபோம் கழலிணை போற்றினால்,
நன்மை நல்கும் நம் வேங்கடத்தண்ணலே. 11

வேங்கடத்தண்ணலே! திருவேங்கடவா!
நின்தாளிணை போற்றி! போற்றி!! போற்றி!!!
செல்வநாரணா!நின்சேவடி போற்றி!
செல்வநாரணா! நின் திருவடி போற்றி!!
செல்வநாரணா! நின்னிணையடி போற்றி!!!



# பிழை திருத்தம்

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| உறைந்திருத்த | உறைந்திருந்த | 1 | 28 |
| யெடுப்பின | யெடுப்பின் | 2 | 18 |
| ளே | னே | 2 | 27 |
| னின் | ளின் | 3 | 15 |
| மகள் | மகன் | 6 | 4 |
| காருத்தன் | காகுத்தன் | 6 | 21 |
| த்வவியத்திலேயே | திவ்வியததலத்திலேயே | 6 | 26 |
| கன் | கண் | 8 | 7 |
| அனேந்து | அணேந்து | 8 | 10 |
| வளம் | வனம் | 8 | 26 |
| வற்கென | வதற்கென | 9 | 33 |
| திருள | திருவ | 13 | 1 |
| திருச | திருச்ச | 14 | 7 |
| யாளே | யானே | 14 | 28 |
| உள்ளன | உன்னை | 14 | 31 |
| 10 | 11 | 17 | 9 |
| கைகவ | கைவ | 19 | 14 |
| பிதிக | பதிக | 20 | 27 |
| கொண்டி | கொண்டு | 25 | [illegible] |
| மா | ரா | 25 | 2[illegible] |
| புகம் | புகழ் | 36 | 1[illegible] |
| காலறதை | காலத்தை | 40 | |
| தழுந்தான் | தெழுந்தான் | 51 | 1 |
| யுப் | யும் | 52 | 1 |
| வர்கு | வர்க்கு | 58 | |
| நீரின்கள் | நீரின்கண் | 59 | 24 |
| பாம்மை | பாம்பை | 63 | 5 |
| அழகுட | அழகுடன் | 64 | 11 |
| ரணன் | நாரணன் | 145 | 16 |
| ஆணேயை | ஆனேயை | 146 | 9 |